# சங்கம், சங்கம் மருவிய கால அகப்பாடல்கள்

தமிழ் முனைவர் (பிஎச்.டி) பட்டத்திற்காக பாரதிதாசன்
பல்கலைக்கழகத்திற்கு அளிக்கப்பெறும் ஆய்வேடு


**ஆய்வாளர்**

**அ. சுபா**

Ref.No.01548/Ph.D2/Tamil/P.T/October 2011

நெறியாளர்

முனைவர் **பா. இராஜ்குமார்,** எம்.ஏ., எம்.பி.ஏ., எம்.ஃ.பில்., பி.எச்.டி.

**இணைப் பேராசிரியர்**

முதுகலைத் தமிழாய்வுத்துறை

**பிஷப் ஹீபர் கல்லூரி (தன்னாட்சி, எ)**

(தேசிய தர நிர்ணயக் குழு திரள் நிலை மதிப்பீடு 3.58/4)

(ஆற்றல்சால் தகுதிப் பேறு பெற்றது)

திருச்சிராப்பள்ளி – 620 017


**ஏப்ரல் – 2016**

# நெறியாளர் சான்றிதழ்

**முனைவர் பா. இராஜ்குமார்,** **எம்.ஏ., எம்.பி.ஏ., எம்.ஃபில்., பி.எச்.டி.**
இணைப் பேராசிரியர்,
தமிழாய்வுத்துறை,
பிஷப் ஹீபர் கல்லூரி, (தன்னாட்சி, எ)
திருச்சிராப்பள்ளி-620 017.

**“சங்கம், சங்கம் மருவிய கால அகப்பாடல்கள்”** என்ற தலைப்பில் **திருமதி அ. சுபா** எழுதியுள்ள இந்த ஆய்வேடு பாரதிதாசன் பல்கலைக்கழக முனைவர் பட்டப்படிப்பின் பகுதி நிறைவாக **2011-2016** ஆம் கல்வியாண்டில் பிஷப் ஹீபர் கல்லூரியில் என் மேற்பார்வையின் கீழ் அவருடைய சொந்த முயற்சியால் எழுதப்பட்டது என்றும் இவ்வாய்வேடு வேறு எந்தப் பட்டத்திற்காகவும் அளிக்கப்படவில்லை என்றும் சான்றளிக்கிறேன்.

**தமிழாய்வுத் துறைத் தலைவர்** **நெறியாளர்**

# ஆய்வாளர் சான்றிதழ்

**அ. சுபா,** **இடம்** : திருச்சிராப்பள்ளி

Ref.No.01548/Ph.D2/Tamil/P.T/October 2011 **நாள்** :

முனைவர் பட்ட ஆய்வாளர் (பகுதி நேரம்),

தமிழாய்வுத்துறை,

பிஷப் ஹீபர் கல்லூரி, (தன்னாட்சி, எ )

திருச்சிராப்பள்ளி – 17.

**"சங்கம், சங்கம் மருவிய கால அகப்பாடல்கள்"** என்ற தலைப்பில் அமைந்த இவ்வாய்வேடு முனைவர் பட்டப்படிப்பின் பகுதி நிறைவாக **2011-2016** ஆம் கல்வியாண்டில் எழுதப்பட்டது. இவ்வாய்வேடு இணைப் பேராசிரியர் முனைவர் **பா. இராஜ்குமார்** அவர்களின் மேற்பார்வையின் கீழ் என் சொந்த முயற்சியால் உருவானதாகும். இதற்கு முன் இவ்வாய்வேடு வேறு எந்தப் பட்டத்திற்காகவும் அளிக்கப்படவில்லை என்றும் சான்றளிக்கிறேன்.

**நெறியாளர்** **ஆய்வாளர்**

# நன்றியுரை

**“சங்கம், சங்கம் மருவிய கால அகப்பாடல்கள்”** என்ற தலைப்பில் முனைவர் பட்ட ஆய்வினை மேற்கொள்ள வாய்ப்பளித்த திருச்சிராப்பள்ளி பாரதிதாசன் பல்கலைக்கழகத்திற்கு என் நன்றியைத் தெரிவித்துக் கொள்கிறேன்.

பிஷப் ஹீபர் கல்லூரித் தமிழாய்வுத் துறையில் முனைவர் பட்டம் பயில்வதற்கு வாய்ப்பளித்த கல்லூரி முதல்வர் **முனைவர் த. பால் தயாபரன்** அவர்களுக்கும், **தமிழாய்வுத்துறைத் தலைவர்** அவர்களுக்கும் என் நன்றியை உரித்தாக்குகின்றேன்.

முதுகலைப் பட்டம் பயில வந்த முதல் நாள் வகுப்பில் இருந்து முனைவர் பட்ட ஆய்வாளராக பயின்ற காலம் வரையில் என்னை வழிநடத்தி, ஆய்வு எழுத முடியாமல் சோர்ந்து போன காலங்களில் தன்னம்பிக்கையும், அறிவுரையும் வழங்கி நெறியாளரின் இலக்கணம் மாறாத கண்டிப்போடும், அன்போடும் வழிநடத்தி செம்மைப்படுத்திய மரியாதைக்கும், போற்றுதலுக்கும், வணக்கத்திற்கும் உரிய என்னுடைய ஆய்வு **நெறியாளர் முனைவர் பா. இராஜ்குமார் அய்யா** அவர்களுக்கு நெஞ்சம் மறவாத மாறாத நன்றியை என்றென்றும் உரித்தாக்குகிறேன்.

ஆய்வேடு எழுதக்கூடிய காலத்தில் உறுதுணையாக இருந்த **தந்தை திரு. இரா. அய்யாதுரை** அவர்களுக்கும், **தாய் திருமதி அ. இராஜேஸ்வரி** அவர்களுக்கும் மனமார்ந்த நன்றியைத் தெரிவித்துக் கொள்கிறேன்.

ஆய்வேடு முடிப்பதற்கு ஊக்கப்படுத்தி எல்லா காலங்களிலும் உடன் இருந்து உதவிபுரிந்து ஒத்துழைப்பு நல்கிய என் **கணவர் திரு. ந. மோகன்குமார்** அவர்களுக்கும், மகன்கள் **மோ. அமுதமித்ரன்,**

**மோ. ரோகித்மித்ரன்** ஆகியோருக்கும் மற்றும் என் குடும்பத்தாருக்கும் மனமார்ந்த நன்றிகள் பல.

ஆய்வேட்டினை செம்மைப்படுத்த பல விவாதங்கள் வழி புதிய சிந்தனைகளை ஏற்படுத்தி பல்வேறு தருணங்களிலும் உதவிப் புரிந்த மரியாதைக்குரிய **தந்தை ஹேன்ஸ் ரோவர் கல்லூரி உதவிப் பேராசிரியர் முனைவர் க. செந்தில்ராஜா அவர்களுக்கு** நன்றியை உரித்தாக்குகின்றேன்.

ஆய்வு தொடர்பான நூல்களை தேவைப்பட்ட பொழுதெல்லாம், சேகரித்துக் கொடுத்து உற்சாகப்படுத்தி ஆய்வு எழுத உதவிய அரியலூர் **அரசுக் கல்லூரி உதவிப் பேராசிரியர் முனைவர் க. தமிழ்மாறன், முனைவர் ம. அகதா செந்தில்குமார் அவர்களுக்கும்** மனமார்ந்த நன்றியை தெரிவித்துக் கொள்கிறேன்.

கணினி அச்சினை செய்யவும், ஆய்வுத் தொடர்பான பல்வேறு தகவல்களை திரட்டவும் துணைபுரிந்த எனது நட்புக்குரிய **முனைவர் பட்ட ஆய்வாளர்கள் இராஜேஸ்வரி, சங்கீதா, ரேவதி, சண்முகப்பிரியா, கண்மணி, இராஜகோபால்** ஆகியோர்க்கும் எனது நன்றி என்றும் உரியது.

இவ்வாய்வேட்டினை உரிய காலத்தில் தட்டச்சு செய்து கொடுத்த செல்வி. கமலா அவர்களுக்கு நெஞ்சம் மறவா நன்றிகள்.

ஆய்விற்குத் தேவையான பார்வை நூல்கள் வழங்கிய **பெரம்பலூர் மாவட்ட மைய நூலகத்தாருக்கும், எமது கல்லூரி நூலகத்தார்க்கும்** என்னுடைய மனமார்ந்த நன்றிகள்.

**அ. சுபா**

## சுருக்க குறியீட்டு விளக்கம்

| | | |
|---|---|---|
| **அகத்.** | - | அகத்திணையியல் |
| **அகம்.** | - | அகநானூறு |
| **இளம்.** | - | இளம்பூரணர் |
| **எழுத்து.** | - | எழுத்ததிகாரம் |
| **உ.ஆ.** | - | உரை ஆசிரியர் |
| **ஐந்.ஐம்.** | - | ஐந்திணை ஐம்பது |
| **ஐந்.எழு.** | - | ஐந்திணை எழுபது |
| **கலித்.** | - | கலித்தொகை |
| **களவு.** | - | களவியல் |
| **கற்பு.** | - | கற்பியல் |
| **கார்.** | - | கார்நாற்பது |
| **சூத்** | - | சூத்திரம் |
| **குறள்.** | - | திருக்குறள் |
| **குறுந்.** | - | குறுந்தொகை |
| **கைந்.** | - | கைந்நிலை |

| | | |
|---|---|---|
| **செய்.** | - | செய்யுளியல் |
| **சொல்.** | - | சொல்லதிகாரம் |
| **திணை.ஐம்.** | - | திணைமொழி ஐம்பது |
| **திணை.நூற்.** | - | திணைமாலை நூற்றைம்பது |
| **தொல்.** | - | தொல்காப்பியம் |
| **நச்சி.** | - | நச்சினார்க்கினியர் |
| **நம்பி.** | - | நம்பி அகப்பொருள் |
| **நற்.** | - | நற்றிணை |
| **நன்.** | - | நன்னூல் |
| **நூற்.** | - | நூற்பா |
| **பொருள்.** | - | பொருளதிகாரம் |
| **பேரா.** | - | பேராசிரியர் |
| **மரபு.** | - | மரபியல் |
| **மேலது** | - | மேற்குறிப்பிட்ட நூல் |

# பொருளடக்கம்

# முன்னுரை

தமிழில் தோன்றிய இலக்கியங்கள் மொழிச் செம்மையுடையன. கருத்தாக்கமும், எளிமையும், இனிமையும் கலந்திருப்பன. இச்சிறப்புடைய இலக்கியங்களில் சங்க அகப்பாடல்களும் சங்கம் மருவிய கால அகப்பாடல்களும் மேன்மை பெற்று விளங்குகின்றன. இவற்றுள் சங்கம் மருவிய கால நூல்கள் களப்பிரர் காலத்தில் தோற்றம் பெற்றனவாகக் கருதப்படுகிறது. சங்க அகப்பாடல்கள் காலந்தோறும் பல்வேறு மதிப்பீடுகளுக்கும் ஆய்வுகளுக்கும் உட்படுத்தப்பட்டு வந்துள்ளன. சங்கம் மருவிய கால அகப்பாடல்கள் அந்த அளவிற்கு கண்டு கொள்ளப்படவில்லை. அவ்வடிப்படையில் காலத்தால் வேறுபட்ட அவ்விரு அகப்பாடல்களையும் ஒப்பிட்டுப் புதிய கருத்தாக்கங்களை வெளிக்கொணரும் வகையில் இவ்வாய்வு நிகழ்த்தப் பெறுகின்றது.

## ஆய்வு நோக்கம்

தமிழ் இலக்கியங்கள் காலச் சூழலுக்கேற்ப பல்வேறு மாற்றங்களைப் பெற்று உருவாகியிருக்கின்றன. அவற்றுள் சங்கம் மருவிய கால அகநூல்கள் அறநூல்கள் மிகுதியாக வெளிவந்த காலத்தில் எழுதப்பட்டவையாகும். இவ்வகநூல்களில் வெளிப்படும் பாடல் கட்டமைப்பு, உள்ளடக்கம் போன்றவை சங்க அகப்பாடல்களை தழுவி வந்துள்ளனவா? இல்லை அவற்றிலிருந்து மாறுபடுகின்றனவா? அல்லது அவற்றின் தொடர்ச்சியா? என்பதனை ஆராய்ந்து அறிதல் ஆய்வின் நோக்கமாக அமைகிறது.

## ஆய்வுத் தலைப்பு

**“சங்கம், சங்கம் மருவிய கால அகப்பாடல்கள்”** என்பது ஆய்வுத் தலைப்பாக அமைகிறது.

## முன் ஆய்வுகள்

சங்க இலக்கியம் தொடர்பாகப் பல்வேறு ஆய்வுகள் நடைபெற்றிருந்தாலும் சங்கம் மருவிய கால அகப்பாடல்கள் குறித்து சில ஆய்வுகளே வெளிவந்துள்ளன. அவற்றுள் கோ. வேணிதேவியின் ‘‘கீழ்க்கணக்கு நூல்களில் அரசுக் கோட்பாடு’’ என்ற ஆய்வும், கு. மங்கையர்கரசியின் ‘‘சங்க இலக்கியத்தில் அகப்பொருள் மரபு’’ என்ற ஆய்வும், க. இராமசாமியின் ‘‘அகப்பாடல்களில் வரலாற்றுப் பார்வை’’ என்ற ஆய்வும், த. கண்ணனின் “சங்க இலக்கியத்தில் திணை மயக்கம்” என்ற ஆய்வும் குறிப்பிடத்தக்கனவாக உள்ளன.

சங்கம், சங்கம் மருவிய கால அகப்பாடல்கள் தொடர்பாகப் பல்வேறு பல்கலைக்கழகங்களிலும், கல்லூரிகளிலும், பல ஆய்வுகளும், நூல்களும் வெளிவந்துள்ளதை அறிய முடிகிறது.

இந்நிலையில் சங்கம், சங்கம் மருவிய கால அகப்பாடல்கள் இவற்றை ஒப்பிட்டு ஆராயும் முதலாவது முனைவர்பட்ட ஆய்வாக இந்த ஆய்வு அமைகின்றது.

## கருதுகோள்

**சங்கம் மருவிய கால அகப்பாடல்கள்** சங்க அகப்பாடல்களின் தொடர்ச்சியாகக் கருதப்பட்டாலும் திணை, துறை, கூற்று அடிப்படையிலும், முதல், கரு, உரிப்பொருள் பயன்பாடுகளிலும் காலத்தால் நிகழ்ந்துள்ள மாற்றத்தை ஏற்றுள்ளது என்பது ஆய்வின் கருதுகோளாக அமைகிறது.

## ஆய்வு எல்லை

சங்க அகநூல்கள் அனைத்தும் ஆய்விற்கு உட்படுத்தப்படவில்லை. பத்துப்பாட்டு நீங்கலாக மீதம் உள்ள அகநூல்கள் ஐந்தும், சங்கம் மருவிய கால அகநூல்கள் ஆறும் ஆய்விற்கு உட்படுத்தப்படுகின்றன.

அகமும், புறமும் கலந்த நூல்கள், அறநூல்களில் ஒன்றான திருக்குறளின் காமத்துப்பால் ஆகியவை ஆய்விற்கு உட்படுத்தப்படவில்லை. சங்கம் மருவிய கால அகநூல்களில் ஒன்றான கைந்நிலையில் சிதைவுற்ற பாடல்கள் ஆய்விற்கு உட்படுத்தப்படவில்லை.

### துணைமைச் சான்றுகள்

சங்க இலக்கியம், சங்கம் மருவிய கால இலக்கியம் தொடர்பான நூல்கள், தொல்காப்பியம், இறையனார் அகப்பொருள் போன்ற அக இலக்கண நூல்கள், தமிழ் இலக்கிய வரலாற்று நூல்கள், சங்க இலக்கிய திறனாய்வு நூல்கள், சங்க இலக்கியம் தொடர்பாக வெளிவந்துள்ள ஆய்வேடுகள், ஆய்வுக் கட்டுரைகள், அகராதிகள், கலைக் களஞ்சியங்கள், இலக்கிய ஆராய்ச்சி நூல்கள், இணைய வழி வெளிவந்துள்ள ஆய்வுக் கட்டுரைகள் ஆகியன இவ்வாய்வின் துணைமைச் சான்றுகளாக அமைகின்றன.

### ஆய்வு அணுகுமுறை

ஆய்வு அணுகுமுறை ஆய்வின் சிறப்பிற்கும், நிறைவிற்கும் முதற்காரணமாய் அமைவன. இவ்வாய்வில் ஒப்பீட்டு அணுகுமுறை (Comparative Approach) ஆய்வே பெரிதும் மேற்கொள்ளப்பட்டுள்ளது. பகுப்பாய்வு அணுகுமுறை (Analytical Approach), விளக்கவியல் அணுகுமுறை (Descriptive Approach), சமூகவியல் அணுகுமுறை (Sociological Approach) ஆகியன ஆங்காங்கு ஏற்புடைய இடங்களில் பயன்படுத்தப்பட்டுள்ளன.

### ஆய்வேட்டின் அமைப்பு

இவ்வாய்வேடு முன்னுரை, முடிவுரை நீங்கலாகப் பல்வேறு உட்தலைப்புகளுடன் ஐந்து இயல்களைக் கொண்டதாக அமைந்துள்ளது.

**இயல் ஒன்று**

**“சங்கம், சங்கம் மருவிய கால அகப்பாடல்களில் திணை, துறை, கூற்று”** என்னும் இவ்வியலில் தொல்காப்பியரின் திணைக்கோட்பாடு, திணை என்னும் சொல்லுக்கான விளக்கம் ஆகியன ஆராயப்படுகின்றன. தொல்காப்பியரின் திணை வைப்புமுறை சங்கம், சங்கம் மருவிய கால அகப்பாடல்களில் பின்பற்றப்பட்டுள்ளனவா என்றும், சங்க அகப்பாடலில் சுட்டப்பட்டுள்ள துறை, கூற்று சங்கம் மருவிய காலத்தில் பயின்று வந்துள்ளனவா என்றும், இல்லை புதிய துறைசாா்ந்த சிந்தனையும், கூற்று மாற்றமும் அடைந்துள்ளனவா என்றும் ஆராய்வதாக இவ்வியல் அமைகின்றது.

**இயல் இரண்டு**

**“சங்கம், சங்கம் மருவிய கால அகப்பாடல்களில் முதல், கரு, உரிப்பொருள்”** என்னும் இவ்வியலில் ஐந்திணைகளின் முப்பொருள் பயன்பாடு குறித்து ஆராயப்படுகிறது. அகத்திணை மாந்தா்களின் மனவுணா்வுகளை வெளிப்படுத்த புலவா்களால் முதல், கரு, உரி பயன்படுத்தப்படுகின்றன. இருவேறு காலங்களில் எழுந்த அகப்பாடல்களில் முதற்பொருளான நிலமும், பொழுதும் குறித்த வேறுபாடும், பயன்பாடும் கண்டறியப்படுகிறது. ஒரு நிலத்திற்கு அடிப்படை ஆதாரமாக அமைவது கருப்பொருள் ஆகும். அவை கால மாற்றத்தினால் சில பின்பற்றியும், மருவியும், மாறியும் வந்துள்ளமை ஆராயப்படுகின்றன. ஒரு பாடலின் அழகினை காலம் கடந்தும் நிலைபெறச் செய்வது, அப்பாடலின் உணா்ச்சியாகிய உரிப்பொருள் ஆகும். அவை ஐந்திணைகளில் ஏற்புடையதாக உள்ளதா? திணைக்கான உரிப்பொருள் மயங்கி வந்துள்ளனவா? என்பதை ஆராய்வதாகவும் இவ்வியல் அமைகின்றது.

## இயல் மூன்று

**“சங்கம், சங்கம் மருவிய கால அகப்பாடல்களில் பா”** என்னும் இவ்வியல் பாடலின் பா அமைப்பினை ஆராய்வதாக அமைகிறது. அகம் பாடுவதற்கு உரிய பாவாக தொல்காப்பியர் கலிப்பாவும், பரிபாடலும் குறிப்பிடுகிறார். ஆனால் அவை பெரும்பான்மையாகப் பயன்படுத்தப்படவில்லை. சங்க அகப்பாடல் ஆசிரியப்பாவையும், சங்கம் மருவிய கால அகப்பாடல் வெண்பாவையும் பின்பற்றி உள்ளன. எனவே பா நிலையில் ஏற்பட்ட மாற்றத்தினை ஆராய்வதாக இவ்வியல் அமைகின்றது.

## இயல் நான்கு

**“சங்கம், சங்கம் மருவிய கால அகப்பாடல்களில் சமுதாய நிலை”** என்னும் இவ்வியலில் இருவேறு காலக்கட்டங்களில் வாழ்ந்த மக்களின் தொழில், விளையாட்டு, பொழுதுபோக்கு, அணிகலன்கள், பழக்கவழக்கம், நம்பிக்கைகள் இவை சங்க அகப்பாடலோடு ஒப்பிட்டு சமுதாய நிலையில் உள்ள வேறுபாடுகளைக் கண்டறிவதாக இவ்வியல் அமைகின்றது.

## இயல் ஐந்து

**“மதிப்பீட்டு நிலையில் சங்கம், சங்கம் மருவிய கால அகப்பாடல்கள்”** என்னும் இவ்வியல் மேற்கூறப்பட்ட நான்கு இயல்களிலும் பெறப்பட்ட ஆய்வு முடிவுகள் மதிப்பீடு செய்யப்பட்டு, மதிப்பீட்டு முடிவுகளைத் தருவதாக அமைகின்றது.

## முடிவுரை

ஒவ்வொரு இயலின் இறுதியிலும் இயல்களின் வழிக் கண்டறியப்பட்ட கருத்துக்கள் தொகுத்தளிக்கப் பெற்றுள்ளன. ஆய்வேட்டின் இறுதியாக முடிவுரையில் ஆய்வு வழி பெறப்பட்ட முடிவுகள் இடம்பெற்றுள்ளன.

## சான்றெண் வழங்கும் முறை

மேற்கோளாகக் கையாளப்பட்ட நூற்பாக்கள், பாடல்கள், திறனாய்வாளர் கருத்துக்கள் ஆகியன அந்தந்த இடங்களிலேயே எடுத்தாளுகைக்கான விளக்கத்தைப் பெற்றுள்ளன.

## துணைநூற்பட்டியல்

முதன்மை நூல்கள், துணை நூல்கள் எனும் பாகுபாட்டில் ஆசிரியர் பெயர் அகர வரிசையில் வரிசைப்படுத்தப்பட்டு, துணை நூற்பட்டியல் அளிக்கப்பட்டுள்ளது.

இறுதியில் மேற்கொண்டு ஆய்வு செய்வதற்கான ஆய்வுக் களங்கள் சுட்டிக் காட்டப்பட்டுள்ளன.

இயல் - 1

# சங்கம், சங்கம் மருவிய கால அகப்பாடல்களில் திணை, துறை, கூற்று

## முன்னுரை

உலகின் தொன்மையான மொழிகளுள் ஒன்று தமிழ்மொழி. அது செம்மொழி என்னும் தகுதிப்பாட்டினை உடையது. பண்டையத் தமிழர்களின் வாழ்வியல் ஒழுகலாறுகளைக் கூறுவதாக சங்க இலக்கியங்கள் அமைந்துள்ளன. சங்க அகப்பாடல்கள் உலக இலக்கியங்கள் எவற்றிலும் காணப்படாதத் தனிப்பண்பை உடையன என்பதை ஒப்பியல் ஆய்வாளர்கள் நிறுவியுள்ளனர். அகம் என்பது பொதுவாகக் காதற் பாடல்களைக் குறிக்கும். தலைவன், தலைவி இடையே நிகழும் காதலைப் பற்றியது அகம் என்றும், போர், வீரம், கொடை, புகழ், ஆட்சி முதலியவற்றை புறம் என்றும் வகுத்துள்ளனர். இதனடிப்படையில் சங்கம், சங்கம் மருவிய கால அகப்பாடல்களின் திணை, துறை, கூற்று வைப்பு முறையினை ஆராய்வதாக இவ்வியல் அமைகின்றது.

## சங்க இலக்கியம்

தமிழில் காலத்தால் முற்பட்ட இலக்கியங்களான பாட்டும், தொகையும் என்ற பதினெட்டும் சங்க இலக்கியங்களாகும். இவ்விலக்கியங்களில் சங்க கால மக்களின் வாழ்க்கை இயற்கைச் சூழலோடு இணைந்து காணப்படுகிறது. நிலம், பருவம், பொழுதுகள் போன்ற இயற்கைச் சூழலைப் பின்னணியாகக் கொண்டு மனித வாழ்வு புனையப்படும் போது, அவை இலக்கியமாகப் பரிணமிக்கின்றன. அவையே எட்டுத்தொகையும், பத்துப்பாட்டும் ஆகும். சங்க கால மக்களின் வாழ்வியல் நிலைகளை எடுத்துரைக்கக் கூடியவை எட்டுத்தொகை நூல்கள். இந்நூல்களை எண் பெருந்தொகை எனவும் அழைப்பர்.

இதனை,

**“நற்றிணை நல்ல குறுந்தொகை ஐங்குறுநூறு**
**ஒத்தபதிற்றுப்பத்து ஓங்கு பரிபாடல் - கற்றறிந்தார்**
**ஏத்தும் கலியோடு அகம், புறம் என்று**
**இத்திறத்த எட்டுத் தொகை”**

**(தமிழ் இலக்கிய தகவல் களஞ்சியம், ப.36)**

என்ற பழம்பாடல் வரையறை செய்துள்ளது.

**சங்கம் மருவிய காலம்**

சங்க காலத்தின் பிற்காலமாகவும் சங்கம் மருவிய காலத்தின் முற்காலமாகவும் கருதப்பெறும் கி.பி. மூன்றாம் நூற்றாண்டில் தமிழகத்தில் களப்பிரர்களின் ஆட்சி வேரூன்ற ஆரம்பித்தது. களப்பிரர் ஆட்சியானது **“அச்சுதக் களப்பாளனின் ஆட்சி கி.பி. 250 இல் தொடங்குகிறது. பின்னர் பாண்டியன் கடுங்கோன் களப்பிரரை வென்ற காலமான கி.பி.575 வரை களப்பிரர் ஆட்சி தமிழகத்தில் நிலவியுள்ளது. கி.பி. ஆறாம் நூற்றாண்டு வரையில் பல்லவ மன்னன் சிம்மவிஷ்ணு களப்பிரரைத் தோற்கடித்து ஆட்சியைக் கைப்பற்றினான்”** என்று **பெ. மாதையன்** குறிப்பிடுகிறார். **(சங்க கால இனக்குழு சமுதாயமும் அரசு உருவாக்கமும், ப.70)** இக்காலக்கட்டத்தில் தான் களப்பிரர் ஆட்சியால் தமிழர் நாகரீகத்திலும், பண்பாட்டிலும், வாழ்வியல் சூழலிலும் பல்வேறு மாற்றங்கள் ஏற்பட்டன.

வச்சிரநந்தி என்ற சமணமுனிவர் கி.பி.470 இல் திராவிடச் சங்கத்தை நிறுவினார். திராவிட சங்கத்தார் இருண்ட காலத் தமிழ் மக்களின் பண்டைய அறவொழுக்கங்களைப் போற்றி, அவற்றின் வழியே நல்வாழ்க்கை நடத்த சிறுசிறு நீதி நூல்களை எளிய வெண்பாக்களால் வெளியிட்டனர். சங்கம் மருவியகால நூல்கள் தோன்றிய காலத்தை ஆராயும் போது அவற்றை நான்கு காலக்கட்டங்களாகப் பிரிக்கலாம் என்கிறார் **எஸ். வையாபுரிப்பிள்ளை**,

"கி.பி. 600 - முப்பால்

கி.பி.700-750 - நாலடியார்,திரிகடுகம், நாண்மணிக்கடிகை,பழமொழி

கி.பி. 750-800 - இன்னா நாற்பது, ஐந்திணை ஐம்பது, ஐந்திணை எழுபது

கி.பி. 800 – 850 - திணைமொழி ஐம்பது, கார்நாற்பது, சிறுபஞ்சமூலம், ஏலாதி, திணைமாலை நூற்றைம்பது, கைந்நிலை, இனியவை நாற்பது, களவழி நாற்பது, முதுமொழிக் காஞ்சி, ஆசாரக் கோவை

என்று நான்கு கால கட்டங்களாகப் பகுத்தும் 1, 4, 3, 10 என்னும் எண்ணிக்கையில் நூல்களை வகைப்படுத்தியும் தந்துள்ளார்."

(தமிழின் கவிதையியல் கார்த்திகேசு சிவத்தம்பி, ப.68)

கடைச்சங்க காலம் என்பது கி.பி.250 உடன் முடிவடைகின்றது என்பது ஆய்வறிஞர் கணிப்பு. சங்க காலத்திற்கு அடுத்த காலக்கட்டம் சங்கம் மருவிய காலம் ஆகும். இது கி.பி.250 முதல் 600 வரை நீடித்தது. இக்காலத்தைத் தமிழ் இலக்கிய வரலாறுகள் இருண்ட காலம் எனச் சுட்டுகின்றன. இது பற்றி வரலாற்று ஆய்வறிஞர் மது. ச. விமலானந்தம் "தமிழகம் முதன் முதலில் அந்நியர் ஆட்சிக்குள்ளாகி அமைதி இழந்த காலம். தென்னகம் சின்னா பின்னமாகிச் சீரழிந்த துன்பக் காலம். தமிழகத்தின் வடபகுதி பல்லவரிடமும், தென்பகுதி களப்பிரரிடமும் சிக்கின. சாதவாகன அரசின் ஆணையின் கீழிருந்த கிருஷ்ணை ஆற்றின் தென்பகுதியில் ஆட்சி புரிந்தது முற்காலப் பல்லவர்கள். சாதவாகனப் பேரரசு நிலை அழிந்ததும் தாங்களே தன்னாட்சி பெற்றதோடு கி.பி. 250-இல் தொண்டை நாட்டையும், நடுநாட்டையும் கைப்பற்றி காஞ்சிபுரத்தைத் தலைநகராகக் கொண்டு ஆண்டனர். களப்பிரர்கள் கன்னடர்கள் எனக் கருதப்படுகின்றனர். பாண்டிய நாட்டையும் பின் சோழ நாட்டையும்

**பிடித்துக் கொண்டு ஆளத் தொடங்கினர். இங்ஙனம் தமிழகம் முழுவதும் இருவர் ஆட்சியில் இடம்பெற, தமிழ்க்கலை, மொழி, நாகரீகம் அனைத்தும் ஆக்கமிழந்தன"** என்று உரைப்பது இங்கு எண்ணுதற்குரியதாகும். **(தமிழ் இலக்கிய வரலாற்றுக் களஞ்சியம், தொகுதி.1, ப.5)**

## சங்கம் மருவிய கால அகநூல்கள்

சங்கம் மருவிய கால நூல்களைப்பற்றி,

**"நாலடி நான்மணி நானாற்ப தைந்திணைமுப்**
**பால்கடுகங் கோவை பழமொழி மாமூலம்**
**இன்னிலை சொல் காஞ்சியோ டேலாதி யென்பவே**
**கைந்நிலைய வாங்கீழ்க் கணக்கு"[5]**

**(வேங்கடசாமி நாட்டார், ந.மு. கார்நாற்பது முகவுரை, ப.1)**

என்ற பழம்பாடல் உண்டு. இப்பாடலில் வந்துள்ள நூல்கள் பின்வருமாறு. 1. நாலடியார் 2. நான்மணிக்கடிகை 3. இன்னாநாற்பது 4. இனியவை நாற்பது 5. கார் நாற்பது 6. களவழி நாற்பது 7. ஐந்திணை ஐம்பது 8. ஐந்திணை எழுபது 9. திணைமொழி ஐம்பது 10. திணைமாலை நூற்றைம்பது 11. திருக்குறள் 12. திரிகடுகம் 13. ஆசாரக்கோவை 14. பழமொழி நானூறு 15. சிறுபஞ்சமூலம் 16. முதுமொழிக்காஞ்சி 17. ஏலாதி 18. கைந்நிலை ஆகும். இப்பழம் பாடலின் பின்னிரண்டடிகள்,

**"இன்னிலை சொல் காஞ்சியோ டேலாதி யென்பவே**
**கைந்நிலைய வாங்கீழ்க் கணக்கு"**

என்று அமைகின்றன. கைந்நிலையில் மூன்று பாடல்களான (6, 7, 50) இளம்பூரணர் உரையில் மேற்கோளாகக் காட்டப்பட்டுள்ளன. நச்சினார்க்கினியரும் ஒரு பாடலை மேற்கோளாகக் காட்டியுள்ளார்.

இவ்வாறு தொல்காப்பிய பழைய உரைகளில் கைந்நிலை எடுத்தாளப் பெறுவதால் கைந்நிலையே ஆய்விற்கு எடுத்துக் கொள்ளப்பட்டுள்ளது.

## ஐந்திணைக் கோட்பாடு

திணைக் கோட்பாடு என்பது பண்டைத் தமிழில் பேசப்படும் திணைப்பற்றிய கோட்பாடு ஆகும். 'திணை' என்பது அகப்பொருளையும், புறப்பொருளையும் விளக்குவதற்கு அடிப்படையாகப் பயன்பட்டு வருவதாகும். இத்திணைக் கோட்பாட்டினைத் தொல்காப்பியர் பொருளதிகார அகத்திணையியலில் பெரிதும் விளக்கிக் காட்டியுள்ளார். பத்துப்பாட்டு, எட்டுத்தொகை நூல்களில் பெரும்பாலானவை இத்திணைக்கோட்பாடு அடிப்படையில் அமைந்தவையாகும்.

ஐந்திணை என்பது குறிஞ்சி, முல்லை, மருதம், நெய்தல், பாலை ஆகியவை ஆகும். இது நில அடிப்படையை விளக்குவதாகவும், ஒழுக்க அடிப்படையை விளக்குவதாகவும் என இரண்டு வகைப்படும். நில அடிப்படையில் ஆராயும் அகத்திணைக் கோட்பாடு ஐந்திணைக் கோட்பாடு என்று கூறப்படும். இது முதல், கரு, உரி ஆகிய முப்பொருள்களையும் அடிப்படையாகக் கொண்டதாகும். ஒழுக்கத்தை அடிப்படையாகக் கொண்ட அகத்திணைக் கோட்பாடு எழுதிணைக் கோட்பாடு எனப்படும். இது பெரும்பாலும் உரிப்பொருளை அடிப்படையாகக் கொண்டதாகும்.

## தொல்காப்பியத்தில் திணை என்னும் சொல்

தொல்காப்பியத்தில் **திணை** என்னும் சொல் பல இடங்களில் பயின்று வந்துள்ளது. அது முதல், கரு, உரிப்பொருள் ஆகிய திணைக்கோட்பாட்டோடு பொருந்தி வந்துள்ளது. அதாவது நிலத்தை உணர்த்தியும், உயர்திணை, அ∴றிணை முதலிய கருப்பொருள்களை உணர்த்தியும், ஒழுக்கத்தைச் சார்ந்த உரிப்பொருளை உணர்த்தியும், திணை என்னும் சொல் பயின்று வந்துள்ளது.

### தொல்காப்பியத்தில் நிலத்தை உணர்த்திவரும் இடங்கள்

தொல்காப்பியத்தில் ஆறு இடங்களில் **'திணை'** என்னும் சொல் நிலத்தினை உணர்த்தி வருகின்றன. அவை,

**"பல்லோர் குறித்த திணை நிலைப் பெயரே"**
**(தொல். பெயர்.11)**

**"திணையொடு பழகிய பெயரலங் கடையே"**
**(தொல். பெயர்.43)**

**"நடுவுநிலைத் திணையே நண்பகல் வேனிலொடு"**
**(தொல். அகத்.11)**

**"பெயரும் வினையுமென்(று) ஆயிரு வகைப்ப**
**திணைதொறும் மரீஇய திணைநிலைப் பெயரே"**
**(தொல்.அகத்.22)**

**"ஆயர் வேட்டுவர் ஆடுஉத் திணைப் பெயர்"**
**(தொல்.அகத்.23)**

**"ஆனா வகைய திணை நிலைப் பெயரே"**
**(தொல்.அகத்.24)**

என அமைகின்றன.

### தொல்காப்பியத்தில் கருப்பொருளை உணர்த்தி வரும் இடங்கள்

தொல்காப்பியர் மக்களை உணர்த்த உயர்திணை என்றும், மக்கள் அல்லாத பிறவற்றை உணர்த்த அஃறிணை என்ற சொல்லையும் பயன்படுத்தி உள்ளார்.

**"இருதிணை யைம்பால் இயனெறி வழாமை"**
**(தொல்.மரபு.91)**

**“உயர்திணைப் பெயரே அஃறிணைப் பெயரென்று**
**ஆஇரண்டு என்ப பெயர்நிலைச் சுட்டே”**
**(தொல். புணரி.15)**

**“உயர்திணை அஃறிணை ஆயிரு மருங்கின்”**
**(தொல். குற்றி.76)**

போன்றவை ஆகும்.

### தொல்காப்பியத்தில் உரிப்பொருளை உணர்த்தி வரும் இடங்கள்

தொல்காப்பியத்தில் **திணை** என்னும் சொல் உரிப்பொருளை உணர்த்தியும் பயின்று வந்துள்ளது. அவற்றுள் சில,

**“கைக்கிளை முதலாப் பெருந்திணை இறுவாய்**
**முற்படக் கிளந்த எழுதிணை என்ப”**
**(தொல்.அகத்.11)**

**“அவற்றுள்**
**நடுவண் ஐந்திணை நடுவண தொழியப்**
**படுதிரை வையம் பாத்திய பண்பே”**
**(தொல்.அகத்.2)**

போன்றவை ஆகும். மேலும் தொல்காப்பியத்தில் திணை என்னும் சொல் முதல், கரு, உரி மூன்றையும் ஒரு சேர உணர்த்தி நான்கு இடங்களில் இடம்பெற்றுள்ளது. எனவே தொல்காப்பியரின் திணைக்கோட்பாடு ஐந்திணைகளான குறிஞ்சி, முல்லை, மருதம், நெய்தல், பாலை என்ற திணைகளை மட்டும் உணர்த்தியதோடு மட்டுமல்லாது, கருப்பொருளையும், உரிப்பொருளையும் உணர்த்தியுள்ளமையை அறிய முடிகின்றது.

மனித இனம் மேற்கொண்ட இன்ப ஒழுக்கங்களைக் கூறுவதே அகத்திணை. இதனை நுட்பமாகக் கூறவே தொல்காப்பியர்

அகப்பொருள் பற்றியக் கோட்பாட்டை உருவாக்கினார். இத்திணைக்கோட்பாடு சங்க காலத்திலும், சங்கம் மருவிய காலத்திலும் எவ்வாறு பின்பற்றப்பட்டுள்ளன என்பது ஆராயப்படுகின்றன. சங்க இலக்கியத்தை திணை இலக்கியம் என்று கூறுவர். திணை என்பது நிலத்தை அடிப்படையாகக் கொண்டது. நிலம் என்பது பருவம், பொழுது ஆகியவற்றின் பின்னணியில் மனித வாழ்வோடு பொருத்தமுறப் புனையப்படுவதாகும். தொல்காப்பியர் ஐந்திணைகளை வரிசைப்படுத்தும் போது முதன்மை இடம் பெறுவது முல்லை நிலமாகும் இதனை,

**“மாயோன் மேய காடுறை உலகமும்**
**சேயோன் மேய மைவரை உலகமும்**
**வேந்தன் மேய தீம்புனல் உலகமும்**
**வருணன் மேய பெருமணல் உலகமும்**
**முல்லை, குறிஞ்சி, மருதம், நெய்தல் எனச்**
**சொல்லிய முறையால் சொல்லவும் படுமே”**

**(தொல்.அகத்.05)**

என்ற நூற்பாவில் காடும், காடு சார்ந்த நிலமான முல்லைநிலம் முதன்மைப்படுத்தப்பட்டுள்ளது. சங்க கால சமூகம் போர்ச் சமூகம் என்பதால் பகைவர் உள்நுழையா வண்ணம் நாட்டைச் சுற்றிலும் கடுங்காவல் கொண்டு காப்பது இன்றியமையாததாக இருந்தது. பொதுவாக மக்களின் வாழ்விடங்களான ஊர்களையோ, நாடுகளையோ பிரிக்கும் இடங்களில் காடுகள் காணப்படுவது இயற்கை. எனவே தொல்காப்பியர் நிலவியல் காரணிகளைக் கொண்டே முல்லை நிலத்தை முதன்மைப்படுத்தி இருக்கலாம். முல்லை நிலத் தலைவியின் அறமாக இல்லறப்பாங்கும், கற்புத் திண்மையும் சிறப்பிக்கப்படுவதால் இந்நிலம் முதலாவதாக அமையப் பெற்றிருக்கலாம். ஆனால் இளம்பூரணர் **“உம்மை எதிர்மறையாகலாம் இம்முறை அன்றிப் பிறவாய்ப்பாட்டாற் சொல்லவும் படும் என்றவாறு காடு, நாடு, மலை, கடல் என்பதே**

**பெருவழக்கு என்கிறார்." பெ. மாதையன் (அகத்திணைக் கோட்பாடும் சங்க அகக்கவிதை மரபும், ப.95)**

நிலப் பாகுபாட்டில் முல்லையை முதலில் கூறிய தொல்காப்பியர் உரிப்பொருள் பற்றிக் கூறும்போது குறிஞ்சியை முதலில் கூறுகின்றார். அதனை,

**"புணர்தல் பிரிதல் இருத்தல் இரங்கல்**
**ஊடல் அவற்றின் நிமித்தம் என்றிவை**
**தேருங் காலைத் திணைக்குரிப் பொருளே" (தொல்.அகத்.16)**

இவ்வைப்பு முறை பற்றி நச்சினார்க்கினியர், **"அகப்பொருளாவது புணர்ச்சியாகலானும் அ∴து இருவர்க்கும் ஒப்ப நிகழ்தலானும் புணர்ச்சியை முற்கூறிப் புணர்ந்துழியல்ல பிரிவின்மையானும் அது தலைவன் கண்ணதாகிய சிறப்பானுந் தலைவி பிரிவிற்குப் புலனெறி வழக்கின்மையானும் பிரிவினை அதன்பிற் கூறிப் பிரிந்துழித் தலைவி ஆற்றியிருப்பது முல்லையாகலின் இருத்தலை அதன்பிற்கூறி அங்ஙனம் ஆற்றியிராது தலைவன் ஆவலிந் சிறிது வேறுபட்டு இரங்கல் பெரும்பான்மை தலைமகளே யாகலின் அவ்விரங்கற் பொருளை அதன் பின் கூறி இந்நான்கு பொருள்களுக்கும் பொதுவாகவரினும் காமத்திற்கும் சிறந்தலானும் ஊடலை அதன்பின்கூறி இங்ஙனம் முறைப்படுத்தினார்"** என்கிறார். **தமிழண்ணல், (சங்க மரபு, ப.117)**

எனவே தொல்காப்பியர் சுட்டியத் திணைக் கோட்பாட்டின் அடிப்படையில் தான் சங்கப் பாடல்கள் அமைய வேண்டும் என்றில்லை. ஆனால் பாடல் தொகுப்பிற்குப் பிறகான திணை, துறை பகுப்பிற்குத் தொல்காப்பிய மரபு எந்த அளவிற்குப் பின்பற்றப்பட்டுள்ளது என்பதையே காணவேண்டியுள்ளது. திணை வைப்பு முறை என்பது பாடல் பாடக்கூடிய புலவனின் மனநிலையைப் பொறுத்தே முதன்மை இடம் பெறுகிறது.

மனித ஒழுகலாறுகள் நிகழ்வதற்கு ஆதாரமாக அமைவது நிலமே. ஒவ்வொரு நிலத்திலும் நிகழும் ஒழுகலாறுகள் காலம் என்ற தளத்தை அடிப்படையாகக் கொண்டே நிகழும். எனவே நிலமும், பொழுதும் ஒழுக்க நிகழ்வுகளுக்கு அடிப்படையாக அமைவதால் அவை இரண்டும் முதற்பொருள் என்று அழைக்கப்படும். நிலம் பற்றி கூறும் போது தொல்காப்பியர் நான்கு நிலங்களை மட்டுமே கூறுகிறார். பாலை என்ற சொல்லை தொல்காப்பியர் கூறவில்லை. புறத்திணைக்குரிய அகத்திணையைக் குறிப்பிடும் போது மட்டுமே பாலை என்னும் சொல் இடம்பெற்றுள்ளது. அகத்திணையில் தொல்காப்பியர் பாலைத் திணையைக் குறிக்க நடுவுநிலைத்திணை என்றே கூறியுள்ளார். இதனை,

**“நடுவு நிலைத் திணையே நண்பகல் வேனிலொடு**
**முடிவுநிலை மருங்கின் முன்னிய நெறித்தே” (தொல்.அகத்.11)**

என்னும் நூற்பா வழி அறியலாம். நிலம் வகுத்துரைக்கப்படாத பாலைத் திணைக்குக் காலமே முதற்பொருளாகக் கூறப்பட்டுள்ளது. திணைக் கோட்பாட்டில் பாலைக்கு நிலம் இல்லை என்றாலும் இலக்கிய வழக்கில் உண்டு. குறிஞ்சியும், முல்லையும் இயல்பான தம் வளத்தை இழந்து வறண்ட நிலமாக மாற்றம் அடைந்துவிடும் என்று குறிப்பிடுகின்றது. எனவே இயல்பு திரிந்த நிலமே பாலையாக மாறுகிறது என்பதை அறியமுடிகிறது. பாலைநிலம் பற்றி வ.சு.ப. மாணிக்கனார் **“தமிழ்நாட்டில் நிலத்தாற் பாலை இலதேனும் காலத்தாற் பாலையுண்டு நிலையானச் சுரம் இன்றேனும் காலத்தாற் பாலையுண்டு. நிலையானச் சுரம் இன்றேனும் வந்துபோம் சுரம் உண்டு. கோடை என்னும் கால்பாலை குறிஞ்சி, முல்லை, பகுதிகளை ஓரிரு திங்கள் நீரற்ற களமாக, வெப்பம் வீசும் சுரமாக, யாதுந் தோன்றாப் பாலை நிலமாக கடுங்கதிர் ஞாயிற்றின் விருந்தில்லாக மாற்றி விடுகின்றது. இ∴து உண்மைப் பாலையன்று. பாலைப்போலி என்று நிலவியற்கை தெளிந்த இளங்கோவடிகள், பாலை என்பதோர் படிவங் கொள்ளும் என்று உரைக்கிறார்” என விளக்குகிறார். வ.சுப. மாணிக்கனார் (தமிழ்க்காதல்,**

**ப.92)** எனவே தொல்காப்பிய திணைக் கோட்பாட்டில் பாலைக்கு நிலம் இல்லை என்றாலும் இலக்கிய வழக்கில் பாலை நிலத்திற்கென்று தனி இடம் உண்டு என்பது குறிப்பிடத்தக்கதாகும். சங்க அகப்பாடல்கள் பெரும்பான்மையானவை பாலைத்திணையைச் சார்ந்த பாடல்கள் ஆகும்.

## சங்க இலக்கிய திணைக்கோட்பாடு

சங்க அகப்பாடல்கள் எழுதப்பட்ட காலத்திலோ, மூலச் சுவடிகளிலோ திணைப் பற்றிய குறிப்புகள் இடம் பெறாமல் இருந்திருக்கலாம். பின்னாளில் நூல்களை பதிப்பித்தவர்களே திணைப் பற்றியக் குறிப்பினை இடம் பெறச் செய்திருக்க வேண்டும். இதனையே எஸ்.ராஜம் **“குறுந்தொகை, நற்றிணை ஆகிய நூல்களுக்குப் பழைய உரைகள் கிடைக்கவில்லை. இவ்விரண்டு நூல்களுக்கும் ஐந்திணைப் பாகுபாடுகள் ஏட்டுச்சுவடியில் காணப்படவில்லை. தற்காலத்தில் இந்நூல்களைப் பதிப்பித்து வெளியிட்ட பதிப்பாசிரியர்கள் தாம் பாடல்களின் பொருள் விளக்கத்துக்காக இவற்றை ஊகித்துக் கொடுத்துள்ளனர். ஆனால் பாடல்களின் அடியில் கொடுக்கப்பட்டுள்ள துறை பற்றியக் கருத்துக்கள் பழமையானவை. இந்நூல்களைத் தொகுத்தவர்களாலோ அல்லது பிற்காலத்தைச் சேர்ந்தவர்களாளே சேர்க்கப் பெற்றிருக்க வேண்டும்”** என்கிறார். **(தொகையியல், ப.52)** மேலும் எட்டுத்தொகை நூல்களின் தொகுப்பு நெறியைப் பின்வருமாறு அட்டவணைப்படுத்தலாம்.

**எட்டுத்தொகை நூல்கள்**

- அகம்
  - திட்டமிடப் படாதவை
    1. குறுந்தொகை
    2. நற்றிணை
  - திட்டமிடப்பட்டவை
    1. அகநானூறு
    2. ஐங்குறுநூறு
    3. கலித்தொகை
- புறம்
  - திட்டமிடப் படாதவை
    1. புறநானூறு
  - திட்டமிடப் பட்டவை
    1. பதிற்றுப்பத்து
- அகமும் புறமும்
  - திட்டமிடப்பட்டது
    1. பரிபாடல்

சங்க இலக்கியத்தில் குறிஞ்சி முதலிய ஐந்திணைகளை **'திணை'** என்று குறிக்கும் மரபு உள்ளது. சங்க இலக்கியத்தில் பதிற்றுப்பத்தும், பரிபாடலும் நீங்கலாக ஏனைய ஐந்து நூல்களிலும் அகத்திணை பயின்று வந்துள்ளது. நற்றிணை முதலிய தொகை நூல்கள் பல புலவர்களால் பாடப்பெற்றவையாகும். ஆனால் ஐங்குறுநூறு, கலித்தொகை ஆகிய நூல்களில் ஒரு குறிப்பிட்ட புலவரே ஒரு குறிப்பிட்ட திணையில் பாடியுள்ளார். அகநானூற்று பாடல்கள் சங்க கால இறுதிப்பகுதியில் தொகையாக்கம் செய்யப்பட்டவையாக புலப்படுகின்றன. நற்றிணை, குறுந்தொகை ஆகிய நூல்களில் புலவர்கள் தாமே திணையைத் தேர்ந்து பல பாடல்களைத் தொகுதியாகப் பாடி வைத்த போக்கோ, சங்க காலப் புலவர்கள் திணை வைத்த போக்கோ இல்லை.

இந்நிலையில் சங்கப் புலவர்களின் பாடலுக்குத் திணை குறிக்கும் மரபை ஐங்குறுநூறு, கலித்தொகை, அகநானூற்றில் தெளிவாக உணரலாம். ஏனென்றால் ஐங்குறுநூறு, கலித்தொகை ஆகிய இவ்விரு நூல்களிலும் ஒரு குறிப்பிட்ட திணையில் காணப்படும் பாடல்கள் அனைத்தையும் ஒரு குறிப்பிட்ட புலவரே பாடியுள்ளார். எனவே, சங்க இலக்கிய காலத்திலே குறிஞ்சி முதலிய ஐவகைத் திணைப் பகுப்புகள் செய்யப்பட்டுள்ளமையை அறியலாம். இவை சங்கம் மருவிய காலத்தில் எவ்வாறு பயின்று வந்துள்ளன என்பது இனி ஆராயப்படும்.

## சங்கம் மருவிய கால அகநூல்களில் திணைக்கோட்பாடு

### கார்நாற்பது

சங்கம் மருவிய கால நூல்களில் அளவால் சிறியது கார்நாற்பது. இந்நூலில் கார்காலத்தின் புனைவு ஒவ்வொரு செய்யுளிலும் கூறப்படுவதாலும், நாற்பது செய்யுள்களை உடையதாலும், கார்நாற்பது என்று அழைக்கப்படுகின்றன. அன்பின் ஐந்திணைகளில் முல்லை நிலமே இப்பாடல்கள் முழுவதும் சிறப்பிக்கப்படுகின்றது. மேலும் **"இனக்குழு சமுதாயம் நாகரீக முதிர்ச்சி பெற்ற காலகட்டத்தில், அதற்கு**

**முன்னதாகிய கிராமியச் சமுதாயச் சூழலைச் சித்தரிப்பனவே முல்லைப் பாடல்கள். எளிமையான வாழ்வைச் சித்தரிக்கும் இலக்கிய வடிவமே முல்லைப் பாடல்கள்”** என்கிறார் **நா. செயராமன் (சங்க இலக்கியமும் பண்பாட்டுச் சூழலியலும், ப.92)**

இந்நூலை இயற்றியவர் மதுரைக் கண்ணன் கூத்தனார். மதுரையைச் சார்ந்த கண்ணனார் இவர் தந்தையாவார், இயற்பெயர் கூத்தனார் ஆக இருக்கலாம். இந்நூலின் இடையிடையே திருமால் **(கார்.01)**, பலராமன் **(கார்.19)** போன்ற கடவுளரைப் பற்றி பேசுவதால் இவர் வைணவ சமயத்தவராக இருக்கக்கூடும் என எண்ணுகின்றனர். சங்கம் மருவிய கால நூல்களில் நாற்பது என்று முடியும் பெயரை உடைய நூல்கள் நான்கு (இன்னா நாற்பது, இனியவை நாற்பது, கார்நாற்பது, களவழி நாற்பது) ஆகும். இவற்றுள் கார்நாற்பதே முற்பட்டிருக்க வேண்டும் என்பது அறிஞர்கள் கருத்து.

காலம் பற்றிய நாற்பது பாடல்கள் அடங்கிய கார்நாற்பது என்ற நூல்தான் காலத்தைக் குறித்தத் தலைப்பில் எழுந்த முதல் நூலாகக் கருதப்படுகின்றது. தலைவன் ஏதேனும் காரணத்தால் தலைவியை விட்டுப் பிரிந்து செல்லுகின்றான். அவ்வாறு செல்லும்போது, நான் கார்காலம் வருவதற்குள் வந்துவிடுவேன் என்று உறுதி கூறிச் செல்கிறான். கார் காலமும் வந்துவிட்டது. கணவன் வரவில்லை. அப்பொழுது தலைவி அவன் வருவான் என்று நம்பித் தன் துன்பத்தைப் பொறுத்துக் கொண்டிருக்கிறாள். இதுவே முல்லைத்திணை நிகழ்ச்சியாகும். ஐந்திணைகளில் ஒரு திணையை மட்டும் பாடிய நூல் இதுவே. தலைவன், தலைவி, தோழி, பாங்கன் நால்வர் மட்டுமே இந்நூலில் இடம்பெறுகின்றனர்.

## ஐந்திணை ஐம்பது

ஐந்திணை ஐம்பது என்னும் இந்நூல் அகப்பொருள் மரபு வழுவாமல் முல்லை, குறிஞ்சி, மருதம், நெய்தல், பாலை என்ற

வரிசையில் அமைந்துள்ளது. ஐந்திணைகளுக்கு உரிய ஒழுக்கங்களை முறைப்படி பத்து வெண்பாக்களாக அமைத்து பாடப் பெற்றிருத்தலின் ஐந்திணை ஐம்பது என்று பெயர் பெற்றது. இந்நூற் கருத்துக்கள் கற்றார் உள்ளத்தை மகிழ்விக்கும் தன்மை உடையன, இந்நூலின் சிறப்பினைக் கருதியே பாயிரத்தின்கண்,

**“ஐந்திணை ஐம்பதும் ஆர்வத்தின் ஓதாதார்**
**செந்தமிழ் சேராதவர்”** **(ஐந்.ஐம்.பாயிரம்)**

செந்தமிழின் பயனைப் பெற வேண்டுவோர் இந்த ஐந்திணையில் உள்ள ஐம்பது பாடல்களையும் படித்தறிய வேண்டும். அப்பொழுதுதான் செந்தமிழின் சிறந்த பயனை அடையலாம் என்ற செய்தியினை ஐந்திணை ஐம்பது பாயிரம் வழி சுட்டப்படுகிறது. அகப்பொருளின் இனிமையைக் கூட்டக்கூடியன களவும், கற்பும் ஆகும். கற்புத் திறத்தினை குறிக்கும் முல்லைத்திணைப் பாடல்கள் இந்நூலில் முதன்மை பெற்றிருக்கின்றன. அன்பின் விளைவாக நிகழும் புணர்ச்சி குறிஞ்சிக்குரியதாகலின் குறிஞ்சி இரண்டாவதாக வைக்கப்பட்டுள்ளது. அப்புணர்ச்சிக்கு சுவை கூட்டுவது ஊடல், ஊடலை சிறப்பிக்கும் மருதம் மூன்றாவதாக வைக்கப்பட்டுள்ளது. அவ்வூடலுக்கு முதலாகிய பிரிதலை கூறும் பாலை நான்காவதாகவும், பிரிவின் உணர்ச்சி மிகுதியால் வெளிப்படும் துன்ப மிகுதி கூறும் இரங்கல் பற்றிய நெய்தல் இறுதியிலும் வைக்கப்பெற்றுள்ளன. ஐந்திணை ஐம்பதில் மட்டுமே தொல்காப்பியத் திணை வைப்புமுறை பின்பற்றப்பட்டுள்ளது. இதற்கு நச்சினார்க்கினியர் தரும் விளக்கமாவது இவ்வொழுக்கம் எல்லாம் இல்லறம் பற்றிய ஒழுக்கமாதலின் கற்பொடு பொருந்திக் கணவன் சொற்பிழையாது இல்லிருந்து நல்லறஞ் செய்தல் மகளிரது இயற்கை முல்லையாதலின் அது முற்கூறப்பட்டது. புணர்தலின்றி இல்லறம் நிகழாமையிற் புணர்தற் பொருட்டாகிய குறிஞ்சியையும் அதன்பின் மருதத்தையும் வைத்தார். பரத்தையிற் பிரிவுபோலப் பிரிவொப்புமை நோக்கி நெய்தலை ஈற்றின் கண் வைத்தார் என்கிறார்.

இந்நூலின் ஆசிரியர் மாறன்பொறையனார். இதில் கடவுள் வாழ்த்து பாடல் இடம் பெறவில்லை. ஆனால் நூலின் முதற்பாடலில் ‘மல்லர்க்கடந்தான்’ என மாயோனையும், ‘கடம்பமர்ந்தான்’ என சிவபெருமானையும் குறிப்பிடுகிறது. இதனை,

**“மல்லர்க் கடந்தான் நிறம்போல் திரண்டெழுந்து**
**செல்வக் கடம்பமர்ந்தான் வேல்மின்னி – நல்லாய்**
**இயங்கெயில் எய்தவன் தார்பூப்ப ஈதோ**
**மயங்கி வலனேருங் கார்”** **(ஐந்.ஐம்.01)**

அமைகிறது.

## ஐந்திணை எழுபது

ஐந்திணை எழுபது ஐந்திணைகளைப் பற்றி கூறும் எழுபது வெண்பாக்களைக் கொண்டது. திணைக்கு பதினான்கு பாடல்களாக மொத்தம் எழுபது வெண்பாக்களைப் பெற்றதால் ஐந்திணை எழுபது எனப் பெயர்பெற்றது. குறிஞ்சி, முல்லை, பாலை, மருதம், நெய்தல் என்ற வரிசையில் திணைகள் அமைந்துள்ளன. இந்நூலில் இன்று உள்ள வெண்பாக்கள் அறுபத்தாறு ஆகும். முல்லைத் திணைப்பற்றிய இரண்டு வெண்பாக்கள் (25, 26) இல்லை. நெய்தல் திணைப் பற்றிய இரண்டு வெண்பாக்கள் (69, 70) இடம்பெறவில்லை.

இந்நூலுக்கு யானைமுகக் கடவுளைப் பற்றிய கடவுள் வாழ்த்துச் செய்யுள் ஒன்று இடம் பெற்றுள்ளது. தமிழகத்தில் விநாயக வழிபாடு கி.பி. ஏழாம் நூற்றாண்டிற்கு பின்னரே தோன்றியது. இந்நூலுக்கு உரிய பழைய உரையில் கடவுள் வாழ்த்து பாடல் காணப்படவில்லை. மேலும் கடவுள் வாழ்த்துப் பாடலின் நடைப்போக்கு பழமையைப் புலப்படுத்தவில்லை. எனவே இது நூலாசிரியரால் பாடப்படவில்லை. பிற்காலத்துப் புலவர் ஒருவரால் பாடிச் சேர்க்கப்பட்டிருக்க வேண்டும். இந்நூலில் குறிஞ்சி, முல்லை, பாலை, மருதம், நெய்தல் என்ற

வரிசையில் வைக்கப்பட்டுள்ளன. இன்பத்திற்கு முதற்களமான குறிஞ்சியை முதலில் வைத்தார். அப்புணர்ச்சியால் பேரன்பு மாறாது இருத்தலாகிய முல்லையை அதன்பின் வைத்தார். இன்பத்தை மிகச் செய்யும் பாலையை அதன்பின் வைத்தார். பிரிவின் முடிவில் பெறும் இன்பமிகு ஊடலையும், கூடலையும் கொண்ட மருதத்தை விளக்கி, பேரின்பத்தின் பெருவழியாக இரங்குதலாகிய நெய்தலை இறுதியில் வைத்தனர்.

### திணைமொழி ஐம்பது

ஐந்திணைகளைப் பற்றிக் கூறும் ஐம்பது பாடல்கள் கொண்டது இந்நூல். ஆதலால் இந்நூல் திணைமொழி ஐம்பது என்று அழைக்கப்படுகின்றது. இந்நூலை இயற்றியவர் கண்ணன் சேந்தனார் ஆவார். ஐந்திணைகளைப் பற்றிக் கூறும் மற்ற நூல்களைக் காட்டிலும் இதற்கொரு தனிச் சிறப்பு உண்டு. இந்நூலிலே ஐந்திணைகளையும் வரிசையாக அமைத்திருக்கும் முறை சிறந்ததாகும். இந்நூலில் குறிஞ்சி, பாலை, முல்லை, மருதம், நெய்தல் என ஐந்திணை அமையப் பெற்றுள்ள ஐந்திணை ஒழுக்கங்களாக கூடல், பிரிதல், இருத்தல், ஊடல், இரங்கல் அமையப்பெற்றுள்ளன. இவ்வெண்பாக்கள் படிப்பதற்கு இனிமையானவை, எளிமையானவை ஆகும்.

### திணைமாலை நூற்றைம்பது

சங்கம் மருவிய கால அகநூல்களில் அளவால் பெரியது திணைமாலை நூற்றைம்பது. ஐந்திணைகளைப் பற்றியும் வரிசையாக சொல்லுவது. நூற்றைம்பத்தி மூன்று பாடல்களும், பாயிரச் செய்யுள் ஒன்றும் காணப்படுகிறது. இந்நூலுள் அளவுக்கு மேல் உள்ள மூன்று பாடல்கள் பிற்காலத்தினரால் சேர்க்கப்பட்டிருக்கலாம். குறிஞ்சியில் 31 வெண்பா, நெய்தலில் 31 வெண்பா, பாலையில் 30 வெண்பா, முல்லையில் 31 வெண்பா, மருதத்தில் 30 வெண்பா என அமைந்துள்ளன. இம்முறையில் தான் திணை வைப்பு முறை அமைந்துள்ளது. குறிஞ்சியிலும், நெய்தலிலும், முல்லையிலும்

ஒவ்வொரு வெண்பா மிகுந்து காணப்படுகின்றது. இந்நூலின் ஆசிரியா் கணிமேதாவியார். இந்நூலின் வெண்பாக்கள் சற்று கடினமானவை ஆகும். அனைத்து வெண்பாக்களிலும் எதுகை, மோனை அமைந்திருக்கின்றன. ஆதலால் பாடலின் நடை இனிமை பொருந்தியதாக உள்ளன. சில பாடல்களுக்கு நேராகவும், சில பாடல்களுக்குப் பதங்களை மாற்றிப் பொருள் கொண்டால் மட்டுமே பாடலைப் புரிந்து கொள்ள இயலும். இந்நூலில் குறிப்பிடப்படும் சில மலா்கள், மரங்களின் பெயா்கள் ஆகியவற்றின் அடையாளம் புதிதாக உள்ளன. தமிழ்ப் பண்பாட்டையும், பழக்கவழங்கள் சிலவற்றையும் இந்நூல் கூறுகின்றது. திருமால், பலதேவன், முருகன் ஆகிய தெய்வங்களைப் பற்றிக் குறிப்பிடுகின்றாா்.

## கைந்நிலை

ஐந்திணை ஒழுக்கங்களைப் பற்றிக் கூறும் அறுபது பாடல்கள் அடங்கியது. இந்நூலிற்கு ஐந்திணை அறுபது என்ற பெயரும் உண்டு. ‘கை’ என்றால் ஒழுக்கம் ஆகும். இந்நூலின் ஆசிரியர் புல்லங்காடனார். ஒவ்வொரு திணைக்கும் பன்னிரெண்டு பாடல்கள் வீதம் மொத்தம் அறுபது பாடல்கள் உள்ளன. திணைமொழி ஐம்பது நூலைப் போன்றே குறிஞ்சி, பாலை, முல்லை, மருதம், நெய்தல் என்ற வரிசையில் அமைந்துள்ளன. இந்நூலின் பெரும்பான்மையான பாடல்கள் சிதைவடைந்து உள்ளன. 60 பாடல்களை உடைய இந்நூலில் **1, 8, 14, 15, 16, 17, 20, 26, 27, 28, 29, 30, 31, 32, 33, 34, 35, 38** ஆகிய மூன்று பாடல்களில் இடையில் ஓரிரு சொற்கள் சிதைந்துள்ளன. **14, 17, 26, 32, 33, 34** ஆகிய எண்களைக் கொண்ட 6 பாடல்களில் முதல் சீரும், முதல் அடியும் சிதைவு பெற்றுள்ளன. எஞ்சியுள்ள **15, 16, 20, 27, 28, 29, 30, 31, 35** ஆகிய எண்களைக் கொண்ட பாடல்களில் முதலடியில் முதற்சீர்யாவும் சிதைந்துள்ளன. ஏனைய அடிகளிலும் பலசீர்கள் இடையிடையே சிதைந்துள்ளன. இந்நூலில் எவ்வித சிதைவுமின்றி முழுமையாகக் கிடைத்துள்ள பாடல்கள் 22 ஆகும்.

அகத்திணை நூல்களில் இந்நூல் சிறந்ததாக கருதப்படுகிறது. சங்கம் மருவிய கால அகப்பாடல்களின் பாடல் பகுப்பு அட்டவணை பின்வருமாறு

| நூல் பெயர் | குறிஞ்சி | முல்லை | மருதம் | நெய்தல் | பாலை | மொத்த பாடல்கள் |
|---|---|---|---|---|---|---|
| ஐந்திணை ஐம்பது | 10 | 10 | 10 | 10 | 10 | 50 |
| ஐந்திணை எழுபது | 14 | 12 | 14 | 13 | 13 | 66 |
| திணைமொழி ஐம்பது | 10 | 10 | 10 | 10 | 10 | 50 |
| திணைமாலை நூற்றைம்பது | 31 | 31 | 30 | 31 | 30 | 153 |
| கைந்நிலை | 12 | 12 | 12 | 12 | 12 | 60 |
| கார் நாற்பது | - | 40 | - | - | - | 40 |
| **மொத்தம்** | **77** | **115** | **76** | **76** | **75** | **419** |

சங்கம், சங்கம் மருவிய கால அகப்பாடல்களில் காணப்படும் திணைவைப்பு முறை பின்வருமாறு.

| வ.எண். | நூல் | திணை வைப்புமுறை | | | | |
|---|---|---|---|---|---|---|
| 1. | ஐங்குறுநூறு | மருதம் | நெய்தல் | குறிஞ்சி | பாலை | முல்லை |
| 2. | கலித்தொகை | புாலை | குறிஞ்சி | மருதம் | முல்லை | நெய்தல் |
| 3. | ஐந்திணை ஐம்பது | முல்லை | குறிஞ்சி | மருதம் | பாலை | நெய்தல் |
| 4. | ஐந்திணை எழுபது | குறிஞ்சி | முல்லை | பாலை | மருதம் | நெய்தல் |
| 5. | திணைமொழி ஐம்பது | குறிஞ்சி | முல்லை | பாலை | மருதம் | நெய்தல் |
| 6. | திணைமாலை நூற்றைம்பது | குறிஞ்சி | நெய்தல் | பாலை | முல்லை | மருதம் |
| 7. | கைந்நிலை | குறிஞ்சி | பாலை | முல்லை | மருதம் | நெய்தல் |
| 8. | கார்நாற்பது | முல்லை | - | - | - | - |
| 9. | தொல்காப்பியம் | முல்லை | குறிஞ்சி | மருதம் | நெய்தல் | - |
| 10. | பெருங்கதை | மருதம் | முல்லை | குறிஞ்சி | பாலை | - |
| 11. | நம்பியகப் பொருள் | குறிஞ்சி | பாலை | முல்லை | மருதம் | நெய்தல் |
| 12. | வீரசோழியம் | முல்லை | குறிஞ்சி | மருதம் | பாலை | நெய்தல் |
| 13. | மாறனகப் பொருள் | குறிஞ்சி | பாலை | முல்லை | மருதம் | நெய்தல் |

சங்க காலத்திற்கு பிற்பட்டோரான கம்பர் முதலியோர் குறிஞ்சித்திணையை முதலாகக் கொண்டுள்ளனர். மேற்சுட்டப்பட்ட அட்டவணையின் மூலம் இலக்கண, இலக்கியங்களின் திணைவைப்பு முறை என்பது வேறுபடவும் சொல்லலாம் என்பதை அறிய முடிகின்றது. தொல்காப்பியர் சுட்டிய 'சொல்லிய முறை' என்பது வரிசை முறையைத்தான் சுட்டுகிறதா என்பது ஆராயத்தக்கது. வரிசை முறை மாறிச் சொல்லும் மரபு நடைமுறையில் இயல்பான ஒன்றே. ஒரு பாடலை இயற்றும் புலவனின் மனதிற்கு நெருக்கமான திணையே அவற்றினை முடிவு செய்யும்.

## தலைவி கூற்றும், துறையும்

அகத்திணை இலக்கியத்தின் மையப்புள்ளி தலைவி. குறிஞ்சி, முல்லை, மருதம், நெய்தல் பாலை ஆகிய ஐந்திணைகளின் உரிப்பொருளாகிய புணர்தல், இருத்தல், ஊடல், இரங்கல், பிரிதல் ஆகிய ஐவகை உணர்வுகளும் தலைவியை மையமாகக் கொண்டவை ஆகும். அகத்திணையில் வரும் பிற படைப்புகள் தலைவியின் கருத்தைப் பிரதிபலிப்பதோடு, தலைவியின் கூற்றிற்கு வலுச் சேர்ப்பதாக அமைந்துள்ளன. அவ்வகையில் சங்கம், சங்கம் மருவிய கால அகப்பாடல்களில் சித்தரிக்கப்படும் தலைவியின் களவு, கற்பு ஆகிய பாடல்களின் கூற்றும், துறையும் ஆராயப்படுகின்றன.

## சங்கம், சங்கம் மருவிய கால தலைவி கூற்றுப் பாடல்கள்

சங்க இலக்கிய அகப்பாடல்கள், பெரும்பாலும் தலைவியின் களவு வாழ்வைப் பற்றியதாகும். தலைவியின் களவு வாழ்வில் இருந்தே சங்க அகப்பாடல்கள் தொடங்குகின்றன. களவு வாழ்வில் தொடங்கி கற்பு வாழ்வு வரையிலும் அடுத்தடுத்த களங்களாகப் பரிணமிக்கின்றது. **"அகத்துறைச் சங்கப்பாடல்கள் ஒற்றைக் காட்சி நாடகமாக (One scene play) அல்லது ஒரு கூற்று நாடகமாக (Dramatic Monologue)**

**அமைந்திருக்கின்றன என்கிறார் சரளா இராஜகோபாலன். (சங்க இலக்கியத்தில் தோழி, ப.31)**

தலைவியின் களவு வாழ்வில் தலைவனை சந்திக்கும் இடையீடுகளான பகற்குறி, இரவுக்குறி, அல்லக்குறி, பொருள்வயிற் பிரிவு, நற்றாய், அலர், நொதுமலர் வரைவு போன்ற இச்சூழல் அனைத்தும் களவினை சுவைப்படக் கூறக் கூடியதாகும். இவற்றின் அடுத்தக்கட்டமான தலைவியின் கற்பு வாழ்வில் பரத்தமையால் ஏற்படும் ஊடல் பற்றிய செய்திகளை சங்கம், சங்கம் மருவிய கால அகப்பாடல்கள் சித்திரிக்கின்றன. அப்பாடல் பகுப்பு அட்டவணை பின்வருமாறு

**சங்கம், சங்கம் மருவிய கால தலைவி கூற்று அகப்பாடல்கள்**

| **சங்க காலம்** | | | **சங்கம் மருவிய காலம்** | | |
|---|---|---|---|---|---|
| **வ. எண்.** | **நூல்** | | **வ.எண்.** | **நூல்** | |
| 1. | குறுந்தொகை | 180 | 1. | ஐந்திணை ஐம்பது | 19 |
| 2. | நற்றிணை | 83 | 2. | ஐந்திணை எழுபது | 43 |
| 3. | அகநானூறு | 97 | 3. | திணைமொழி ஐம்பது | 17 |
| 4. | ஐங்குறுநூறு | 150 | 4. | திணைமாலை நூற்றைம்பது | 57 |
| 5. | கலித்தொகை | 39 | 5. | கைந்நிலை | 33 |
| | **மொத்தம்** | **549** | | **மொத்தம்** | **169** |

சங்க இலக்கிய தலைவிக் கூற்று பாடல்கள் ஐந்நூற்றுநாற்பத்து ஒன்பது (549) இடம்பெற்றிருப்பதாக **தமிழண்ணல்** குறிப்பிடுகிறார். **(சங்க மரபு, பின்னிணைப்பு)** சங்கம் மருவிய கால அகநூல்களில் தலைவி கூற்றாக அமைந்த பாடல்கள் நூற்று அறுபத்தொன்பது (169) ஆகும். தலைவி கூற்றைக் கேட்போர்களாக உயர்திணையும், அஃறிணையும் இடம்பெறுகின்றன. அவற்றுள் தோழி, தலைவன், பாணன், கொன்றை, நாரை போன்றவையும் இடம் பெற்றுள்ளன. இப்பாடல்கள் களவில் முப்பத்தொன்பது (39), கற்பில் நூற்றிமுப்பது (130) என அமைந்துள்ளன.

சங்க அகப் பாடல்களில் குறிப்பிடப்பட்டுள்ள பெரும்பான்மையான துறைகள் சங்கம் மருவிய காலத்தில் சற்று குறைந்தே காணப்படுகின்றன. அவற்றின் அடிப்படைக் காரணம் பாடல் எண்ணிக்கை ஆகும். எனவே சங்கம், சங்கம் மருவிய கால அகப்பாடல்களுக்கு தொடர்புடைய கூற்றும், துறையும் மட்டுமே இங்கு ஒப்பாய்வு செய்யப்படுகின்றன. சங்கம் மருவிய கால தலைவி கூற்று அகப்பாடல் துறைகளை பின்வருமாறு வகைப்படுத்தலாம்.

- ❖ அறத்தொடு நிற்றல்
- ❖ சிறைப்புறத்தானாகத் தலைமகனை இயற்பழித்த தோழிக்கு தலைவி இயற்பட மொழிந்தது.
- ❖ காமம் மிக்க கழிபடர் கிளவி
- ❖ வரைவு தலை வந்தமையால் தலைவி மகிழ்தல்
- ❖ இரவுக்குறி
- ❖ வரைவிடை வைத்து பொருள்வயிற் பிரிதல்

எனப் பகுத்து விளக்க முடியும்.

**அறத்தொடு நிற்றல்**

தலைவி தன் களவினை முறையாக தெரிவித்தல் அறத்தொடு நிற்றல் எனப்படும். அறம் - ஒழுக்கம், அறத்தொடு நிற்றல் - தான் கொண்ட ஒழுக்கத்தின் கண் நிற்றலாகும். களவு முதிர்ந்த நிலையில் இது வெளிப்படுகிறது. களவொழுக்கத்தில் தலைவிக்குத் தோன்றும் இயல்பான அச்சம் காரணமாகத் தலைவன் தன் களவினை நீட்டிக்கத் தலைவிக்கு தோழியின் துணையை நாடுதல் இன்றியமையாதாகிவிடுகிறது.

**“அறம் எனப்படுவது பல பண்புகளையும் தழுவிய பொதுச் சொல்லாயினும் ஈண்டு பெண்ணுக்குரிய முதற்பண்பான கற்பைக் குறிக்கும். கற்பென்னும் கடைப்பிடியில் நின்று களவொழுக்கத்தைப் பெற்றோர்க்கு வெளிப்படுத்துதல் இத்துறையின் பொருளாகும்.**

**பெற்றோருக்கு அறிவித்தல் தோழியின் நோக்கம் இல்லை. தலைவி ஏற்கனவே கற்பு நெறிபட்டுவிட்டாள் என்பதை முதன்மையாக வலியுறுத்துவதே அவள் நோக்கம்''** என்று **வ.சுப. மாணிக்கம் குறிப்பிடுகிறாா். (தமிழ்க்காதல், ப. 79)**

மேலும் தலைவி - தோழிக்கும், தோழி - செவிலிக்கும், செவிலி - நற்றாய்க்கும், நற்றாய் - தந்தை, தன்னையர்க்கும் அறத்தொடு நிற்றல் மரபு ஆகும்.

**தலைவி அறத்தொடு நிற்றல்**

வேற்று வரைவு, வெறியாட்டு ஆகியவை தோன்றிய சூழலிலும் காப்புமிகுதல் போன்ற காரணத்தாலும் தலைவிக்கு ஆற்றாமை தோன்றுமிடத்தும் தலைவி அறத்தொடு நிற்கிறாள். தலைவி தன் களவினைப் பற்றித் தோழிக்குக் கூறாமலேயே தலைவன் குறையிரந்து நிற்பதன் வாயிலாகவும் அதனைத் தோழி அறியும் வாய்ப்பு உள்ளது. இதனை,

**''அன்னாய் வாழிவேண் டன்னை யென்னை**
**தானு மலைந்தா எனமக்குந் தழையாயின**
**பொன்வீ மணியரும் பினவே**
**யென்ன மரங்கொலவர் சார லவ்வே''** **(ஐங்.201)**

எனும் ஐங்குறுநூற்று பாடல் வழி அறியலாம். சங்கம் மருவிய கால அகநூல்களில் அறத்தொடு நிற்றல் பற்றி எட்டுப் பாடல்கள் உள்ளன. அவற்றில் ஏழு பாடல்கள் குறிஞ்சித்திணையிலும், ஒரு பாடல் நெய்தல் திணையிலும் இடம்பெற்றுள்ளன. தலைமகள் தோழிக்கு அறத்தொடு நின்று வெறிவிலக்க வேண்டும் என்ற உள்ளத்தாளாய் கூறியது.

**''வெறிகமழ் வெற்பனென் மெய்ந்நீர்மை கொண்ட**
**தறியாண்மற் றன்னோ! ஆணங்கணங்கிற் றென்று**
**மறியீர்த் துதிரந்தூய், வேலற் றரீஇ**
**வெறியோ டலம்வரும் யாய்''** **(ஐந்.ஐம்.20)**

மலைநாட்டுத் தலைவனோடு தலைவி களவுப் புணர்ச்சி கொண்டமையால், அவளின் உடல் தன்மை மாறியது. இதனை அறியாத தாய் வெறியாட்டு நிகழ்த்தப் போகிறாள். இதனை தடுப்பாயாக என தோழிக்கு தலைவி அறத்தொடு நிற்கிறாள். அறத்தொடு நிற்றல் குறிஞ்சிக்கு உரியதாக இருக்க, சங்கம் மருவிய கால அகப்பாடல்களில் நெய்தல் திணையில் ஒரு பாடல் (திணை. நூற்.01) இடம்பெற்றுள்ளது.

**இயற்பழித்த தோழிக்கு தலைவி இயற்பட மொழிந்தது**

தலைவனை குறைவுபடக் கூறிய தோழியிடம், தலைவி தலைவனை உயர்வுபடுத்திக் கூறுதல் ஆகும்.

**"நிலத்தினும் பெரிதே, வானினும் உயர்ந்தன்று**
**நீரினும் ஆரள வின்றே – சாரல்**
**கருங்கோற் குறிஞ்சிப் பூக்கொண்டு**
**பெருந்தேன் இழைக்கும் நாடனொடு நட்பே" (குறுந்.03)**

எனும் இப்பாடலில் தலைவனின் பண்புகளைப் பாராட்டி தோழியிடம் உரைக்கின்றாள். இச்செய்தி சங்கம் மருவிய காலத்து அகப்பாடல்களிலும் அமைந்துள்ளன. தலைமகன் சிறைப்புறத்தானாக இயற்பழித்த தோழிக்குத் தலைமகள் இயற்பட மொழிந்தது எனும் துறையில்,

**"மன்றப் பலவின் சுளைவிளை தீம்பழ**
**முண்டுவந்து மந்தி முலைவருடக் - கன்றமர்ந்**
**தாமா சுரக்கு மணிமலை நாடனை**
**யாமாப் பிரிவ திலம்" (ஐந்.எழு.04)**

எனும் பாடல் அமைந்துள்ளது. குரங்கானது மலை வெளியில் பழுத்துள்ள பலாப் பழங்களை பறித்து அதில் உள்ள கனிந்த இனிய பழங்களை உண்டு நீர்த் தாகம் எடுக்கவே கீழே இறங்கி வந்த குரங்கு

அருகில் நின்ற காட்டுப் பசுவின் மடியைத் தடவிக் கொடுக்க, காம்புகளில் இருந்து பால் சுரக்க அதனை அருந்தும், அத்தகு இயற்கை அழகுடைய மலைநாட்டுத் தலைவன் என்னைவிட்டு என்றும் பிரிந்து செல்வது இல்லை எனச் சுட்டப்படுகிறது. சங்கம், சங்கம் மருவிய கால அகப்பாடல்கள் இரண்டிலுமே இயற்பழித்த தோழிக்கு இயற்படமொழிந்த இத்துறையில் தலைவனின் சிறப்பினைக் கூறும் போது நாட்டின் உயர்வினை கூறியே சிறப்பிக்கப்படுகிறது.

**காமம் மிக்க கழிபடர்கிளவி**

தலைவியின் துயரம் எல்லை மீறும் போது தலைவியின் கூற்றுக்கள் காமம் மிக்க கழிபடர் கிளவி என்ற துறையாகப் பகுக்கப்படுகிறது. தலைவனைக் காணப்பெறாத தலைவி காம நோயினால் உளம் நிறைந்து வருந்த, அத்துன்பத்தை வாய்விட்டுப் புலம்பினால் குறையும் என்று எண்ணித் தன் நெஞ்சிற்கு கூறுவதும் கண்ணெதிரே உள்ள பொருட்களை நோக்கிக் கூறுவதும் காமம் மிக்க கழிபடர் கிளவியாகும். இதனை,

**"கேட்குந போலவும் கிளக்குந போலவும்**
**இயக்குந போலவும் இயங்குந போலவும்"** **(நன்.409)**

எனவும்

**"புள்ளும் மாவும் புணரியும் கானலும்**
**உள்ளுறுத் தியன்றவும் ஒழிந்தவை பிறவும்**
**தன்சொற் கேட்குந போலவும் தனக்கவை**
**இன்சொற் சொல்லுந போலவும் ஏவல்**
**செய்குந போலவும் தோற்றுந போலவும்**
**மெய்குழற் கிழத்தி மொழிந்தாங் கமையும்"** **(நம்பி.223)**

எனவும் வரும் இலக்கண மரபுகள் பொருந்தக் கூறப்படும். மேலும்,

**“முன்னிலை யாக்கல் சொல்வழிப் படுதல்**
**நன்னயம் உரைத்தல்………”          (தொல்.பொருள்.101)**

என்கிறார் தொல்காப்பியர். இதனை,

**“கொடுங்குரல் குறைந்த செவ்வாய்ப் பைங்கிளி**
**அஞ்ச லோம்பி ஆர்பதங் கொண்டு**
**நின்குறை முடித்த பின்றை என்குறை**
**செய்தல் வேண்டு மால்”        (நற்.102)**

பகற்குறி, இரவுக்குறி வந்தொழுகுந் தலைமகன் இடையீடு பட்டு வராததைக் கண்ட தலைமகள் வரைதல் வேட்கை மிகுந்து கிளியிடம், தன் தலைவனது நாட்டின் சுற்றத்தாரிடம் சென்று மலைக்குறவர் மகள் தினைப்புனம் காக்க வந்தாள் என்று சொல்வாயாக என அஃறிணைப் பொருளை தூதாக விடுகிறாள் தலைவி. இதனை,

**“கொடுந்தா ளலவ! குறையா மிரப்பே**
**மொடுங்கா வொலிகடற் சேர்ப்ப – னெடுந்தேர்**
**கடந்த வழியையெங் கண்ணாரக் காண**
**நடந்து சிதையாதி நீ”               (ஐந். ஐம்.42)**

வளைந்த கால்களை உடைய நண்டே, கடற்கரைத் தலைவனது பெரிய தேரானது என்னை பிரிந்த காலத்து ஊர்ந்து சென்ற பாதையின் சுவட்டினை காணுதல் ஒன்றே ஆறுதல் அளிக்கக் கூடியது. அதனை அழிக்காமல் இருப்பாயாக, என தன் துன்ப மிகுதியை கடற்கரை நண்டிடம் தலைவி கூறுவதாக இப்பாடல் அமைகிறது. தலைவியின் காமம் மிக்க கழிபடர் கிளவி, பிரிந்த தலைவன் தன்னை மறந்து விட்டான் எனும் ஐயம் தலைவியின் உள்ளத்தில் ஆழமாக பதிந்திருந்தமையால் வெளிப்படுகிறது. சங்கம், சங்கம் மருவிய கால அகப்பாடல்கள் இரண்டிலுமே தலைவியின் துயரம் எல்லை மீறும்போதே பேசப்படுகின்றன.

## இரவுக்குறி

குறிஇடம் - குறித்த இடம். இது பகற்குறி, இரவுக்குறி என இரண்டு வகைப்படும். பகற்குறி – சோலையினிடத்தும், இரவுக்குறி– வீட்டின் புறத்தே நிகழும். தலைமகன் இரவுக்குறிக்கண் சிறைப்புறத்தானாகத் தலைமகள் தோழிக்குச் சொல்லியதாக,

**“இருள்கிழிப் பதுபோல் மின்னிவானம்**
**துளிதலைக் கொண்ட நளிபெயல் நடுநாள்**
**அருள்புரி நெஞ்சமோ டெ.ஃ.குதுணையாக**
**வந்தோன் கொடியனும் அல்லன் தந்த**
**நீதவ றுடையையும் அல்லை நின்வயின்**
**ஆனா அரும்படர் செய்த**
**யானே தோழி தவறுடை யேனே”** **(அகம்.72)**

எனவரும் பாடல் அமைகிறது.

தலைவன் வரும் இரவுப் பொழுதானது, கருவுற்றிருக்கும் பெண் புலியினது பசியினைப் போக்க, பெரிய ஆண்பன்றியினைக் கொன்று மிக்க சினத்தோடு ஆண்புலி உலவும், அச்சம் தரும் பாம்பானது சுற்றித் திரியும். எனவே, இரவுப் பொழுது வருதலை ஒழிப்பாயாக என்று கூறப்படுகின்றது. இதே போன்று ஐந்திணை எழுபதிலும் இரவுக்குறி வேண்டி வந்த தலைமகன் சிறைப்புறத்தானாக தலைமகள் தோழிக்குச் சொல்லியதாக,

**“இடுமண லெக்க ரகன்கானற் சேர்ப்பன்**
**கடுமான் மணியரவ மென்று – கொடுங்குழை**
**புள்ளரவங் கேட்டுப் பெயர்ந்தாள் சிறுகுடிய**
**ருள்ளரவ நாணுவ ரென்று”** **(ஐந்.எழு.57)**

எனும் பாடல் அமைகிறது. கடற்கரை துறைமுகத்தை உடைய சேர்ப்பன் விரைந்து செல்லும் குதிரையின் கழுத்தில் அணிந்துள்ள மணியின்

ஓசையைக் கேட்டு சென்ற தலைவி தலைவனைக் காணாது கலக்கமுற்ற தன் துன்ப மிகுதியை தலைவி தோழியிடம் கூறுகிறாள். தலைவி கூற்றில் அமைந்த இரவுக்குறி பற்றிய பாடல் நெய்தல் திணையில் இடம்பெற்றுள்ளது. சங்க இலக்கியத்தில் இவ்வாறு இடம்பெறவில்லை.

## வரைவிடை வைத்து பொருள்வயிற் பிரிதல்

களவில் தலைவன் வரைவிடை வைத்துப் பொருள்வயிற் பிரியும் போது, தலைவி பிரிவுத் துயரால் ஆற்றாது புலம்புவதாகும். வரைவிடை வைத்துச் செல்லும் தலைவன் திரும்பும் பருவத்தைச் சொல்லிப் பிரிவதும், சொல்லாது பிரிதலும் மரபாக உள்ளன. பருவம் குறித்துச் சென்ற தலைவன், குறித்த பருவத்தில் வாராதபோது பருவத்தை சுட்டிக்காட்டி தலைவி வருந்துகிறாள். அவை பின்வருமாறு,

**“அன்னாய் வாழிவேண் டன்னை நீமற்**
**றியானவர் மறத்தல் வேண்டுதி யாயிற்**
**கொண்ட லவரைப் பூவி னன்ன**
**வெண்டலை மாமழை சூடித்**
**தோன்ற லானாதவர் மணிநெடுங்குன்றே” (ஐங்.209)**

என அமைகிறது. தோழியே! தலைவனை மறந்து ஆற்றியிருக்க எண்ணுதல் என்பது இயலாத காரியம். அவ்வாறு மறந்திருத்தாலும் அவர் நாட்டின் நீலமணிபோலும் உடைய நெடுமலையால் மலர்கின்ற அவரைப் பூப்போன்ற வெண்ணிறமுடைய உச்சியையும், கரிய முகிலும் மறக்கவிடாமல் செய்கிறது. சங்கம் மருவிய கால அகப்பாடல்களில் வரைவிடைவைத்துப் பொருள்வயிற் பிரிதல் பற்றி பன்னிரெண்டு பாடல்கள் இடம்பெற்றுள்ளன. வரைவிடைப் பொருட்பிரிவில் தலைமகன் நீட்டித்த வழி ஆற்றாளெனக் கவன்ற தோழிக்குத் தலைமகள் ஆற்றுவலென்பது பட மொழிந்தது எனும் துறையில்,

**“கொடுவிலெயினர்தங் கொல்படையால் வீழ்ந்த**
**தடிநிண மாந்திய பேஎய் - நடுகல்**

**விரிநிழல் கண்படுக்கும் வெங்கான மென்பர்**

**பொருள்புரிந்தார் போய சுரம்"** (ஐந்.ஐம்.35)

எனும் பாடல் அமைகிறது. பொருள் தேடுதலை விரும்பி தலைவன் செல்லக்கூடியக் கொடிய பாலை நிலமானது, வளைந்த வில்லினைவுடைய வேட்டுவர்களின் வேட்டைக்கு ஆளான விலங்குகளின் எஞ்சிய கொழுப்பு உணவை வாயால் உண்ட பேய்கள் நடுகல்லில் இருந்து தோன்றிய நீண்ட நிழலில் படுத்துக் கிடக்கும் கொடிய பாலைவனம் ஆகும். இப்பாடலில் பொருள் புரிந்தார் எனும் தொடர் வெளிப்படையாகவே கூறப்பட்டுள்ளது. சங்கம் மருவிய கால அகப்பாடல்களின் வரைவிடை வைத்து பொருள்வயிற் பிரிதல் பற்றிய பாடல்கள் அனைத்தும் பாலையிலும், நெய்தலிலும் மட்டுமே இடம் பெற்றுள்ளன. சங்காலத்தில் கருப்பொருளின் வழியாகவும், குறிப்பாகவும் சொல்லப்பட்ட தலைவியின் வருத்தம் சங்கம் மருவிய காலத்தில் வெளிப்படையாகவும், திணைமாறியும் வந்துள்ளமை குறிப்பிடத்தக்கதாகும். மேலும் இத்துறையில் தலைவி தலைவனின் பிரிவை தோழியிடம் கூறுவதாக சில பாடல்களும், தன் நெஞ்சிடம் கூறுவதாக ஒரு பாடலும் சங்க இலக்கியத்தில் இடம் பெற்றுள்ளன. சங்கம் மருவிய காலத்தில் தோழியிடம் கூறுவதாக அமைந்துள்ளன. அன்றில், குருகு, நாரை இவற்றிடம் புலம்புவதாகவும் இடம்பெற்றுள்ளன.

## கற்பு நிலையில் சங்கம், சங்கம் மருவிய கால தலைவி கூற்றுப் பாடல்கள்

சங்க அகப்பாடலில் தலைவி அதிகமாக மனஉணர்வுகளை வெளிப்படுத்த துணையாகக் கொள்வது தோழியே. **"சங்க அகப்பாடல்களில் தலைவி தோழிக்கு உரைத்தது 358 பாடல்கள்"** என்கிறார் **ஆ. இராமகிருஷ்ணன் (அகத்திணை மாந்தர் ஓர் ஆய்வு, ப.108)** சங்கம் மருவிய கால அகப்பாடலில் தலைவி தோழிக்கு உரைத்தது நூற்றி இருபத்தி ஒன்று(121), தலைவி பாணனுக்கு

உரைத்தது முப்பத்தைந்து (35), தலைவி தலைவனுக்கு உரைத்தது ஏழு (07), பரத்தைக்கு உரைத்தது ஒன்று (01), தலைவி நண்டிற்கு உரைத்தது இரண்டு (02), நாரையிடம் கூறியது ஒன்று (01), நெஞ்சிற்கு உரைத்தது ஒன்று (01), கொன்றைக்கு ஒன்று (01) என இடம்பெற்றுள்ளன. இக்கூற்றும் துறையும் ஆராயப்படுகின்றன.

**பருவங் கண்டழிந்த தலைவி தோழிக்குச் சொல்லியது**

தலைவன் குறித்த பருவத்தில் திரும்புவான் என்பது தலைவியின் நம்பிக்கை. அவ்வாறு சென்ற தலைவனின் வரவை எதிர் நோக்கும் தலைவி பருவங் கண்டழிந்து நெஞ்சமழிந்து வருந்துகிறாள். இதனை,

**"சென்ற நாடே கொன்றைஅம் பசுவீ**
**குரலை மானையும் காண்பர்கொல் நமரே**
**புல்லென் காயாப் பூக்கெழு பெருஞ்சினை**
**கான வைப்பின் புன்புலத் தானே"** **(குறுந்.183)**

தலைவன் சென்ற நாட்டின் கண் கார் காலத்தின் வரவினாலே கொன்றைகள் மலரும். அம்மலரின் நிறம் தலைவியின் பசலையை தலைவனுக்கு நினைவூட்டும். மேலும் ஆண்பிணைமானொடு இரலைமான் இணைந்து விளையாடுதலை தலைவன் காண்பதால் தலைவியை நினைத்து விரைவில் வருவார் என்னும் நினைவாலே ஆற்றியிருக்கிறேன் என்கிறாள். இத்துறை சங்கம் மருவிய கால அகப்பாடலிலும் உள்ளது.

**"செங்கதிர்ச் செல்வன் சினங்கரந்த போழ்தினாற்**
**பைங்கொடி முல்லை மணங்கமழ – வண்டிமிரக்**
**காரோ டலமருங் கார்வானங் காண்டொறும்**
**நீரோ டலமருங் கண்"** **(ஐந்.எழு.15)**

சூரியனின் கதிர்கள் மெல்ல மறையும் மாலைக் காலத்தில், பசிய கொடிகளை உடைய முல்லை மலர்கள் மலர்ந்து மணம் பரப்புதலால் வண்டுகள் ஒலிக்க, கார்காலத்து முகில்களை காணுகின்ற வேளைகளில்

எல்லாம் கண்கள் கண்ணீரில் தடுமாறி நிற்கின்றன எனத் தலைவி தோழியிடம் உரைக்கின்றாள். இவ்விரண்டு பாடல்களிலுமே முல்லைக்கான பொழுதினை சுட்டிக்காட்டி தலைவி வருந்துவதாக அமைந்துள்ளன.

**பிரிவிடை ஆற்றாத தலைவி கூறல்**

இது தலைவன் பிரிவினை ஆற்றாத தலைவி தோழியிடம் தன் பிரிவு துன்பத்தைக் கூறி வருந்துதல் ஆகும். பிரிவிடை மெலிந்த தலைவி கூற்றாக,

**"நாணில மன்ற வெங்கண்ணே – நாணேர்பு**
**சினைப்பசும் பாம்பின் சூன்முதிர்ப் பன்ன**
**கனைத்த கரும்பின் கூம்புபொதி யவழி**
**நுண்ணுறை யழிதுளி தலைஇய**
**துண்வரல் வாடையும், பிரிந்திசினோர்க் கழலே"** **(குறுந்.35)**

எனும் பாடல் அமைகிறது. வேனிற் பருவத்தின் தொடக்கத்தே மீண்டுவருவேன் என்று பிரியும் காலத்து தலைவன் சொன்ன பருவமானது வந்துவிட்டது. பச்சை பாம்பினது சூழ்முதிர்வினை ஒத்த கரும்பினது அரும்புகள் மலர்ந்தன. நுண்ணியதாக தூவுகின்ற மேகத்தில் இருந்து மழைத்துளியோடு கூடிய வாடைக்காற்று வீசுகின்றது. இதன்கண் தலைவியின் கண்கள் அவர் பிரியும் போது அழுது தடைசெய்யாது, அவர் பிரிந்த பின்னே அழுகின்றது. நாணம் இல்லா செயலாக உள்ளது என அப்பாடல் உரைக்கிறது. இதனை சங்கம் மருவிய கால அகப்பாடல்களும் இயம்புகின்றன.

**"ஆந்தை குறுங்கலி கொள்ளநம் மாடவர்**
**காய்ந்து கதிர்தெறூவங் கானங் கடந்தார்பின்**
**னேந்த லிளமுலைய யீரெயிற்றா யென்னெஞ்சு**
**நீந்து நெடுவிடைச் சென்று"** **(கைந்.21)**

ஆந்தையானது மரப்பொந்தில் அமா்ந்து ஒலி செய்யும் படியான, சூரியனின் வெப்பம் சுட்டு வருத்துகின்ற காட்டின் வழியாக சென்ற தலைவனின் பின்னே என் நெஞ்சமானது சென்று வருந்துகிறது என்கிறாள் தலைவி. சங்க அகப்பாடலில் தலைவி தலைவனின் பிரிவை ஆற்றியிருத்தலோடு, தலைவன் வருவதாய் சொன்ன காலத்தை நினைத்து வருந்துவதாகவும், சங்கம் மருவிய காலத்தில் தலைவி அவன் சென்ற வழியின் தன்மை குறித்து வருந்துவதாகவுமே பெரும்பாலான பாடல்கள் அமைந்துள்ளன.

**பிரிவிடை ஆற்றாள் எனக்கவன்ற தோழிக்குக் கூறல்**

வரைவிடை வைத்துப் பொருள் வயிற் பிரிந்த தலைவனது பிரிவாற்றாமையாலே மிகவும் வருந்தின தலைவியின் நிலைகண்டு கவலையுற்ற தோழிக்குத் தலைவி சொல்லியது.

> **“மெல்லம் புலம்பன் பிரிந்தெனப்**
> **பல்லிதழ் உண்கண் பாடொல் லாவே”   (குறுந்.05)**

குருகுகள் தம் பேடையை மறந்து உறங்குவதற்குக் காரணமான இனிய நிழலை உடையது புன்னைமரம். கரையினை மோதி உடைகின்ற அலைகளை உடைய இனிய நீா்ப்பரப்பினையுடைய நெய்தல் நிலத்தலைவன், தலைவியை பிரிந்து சென்றதால் தாமரை மலா் போன்ற கண்கள் துயில் கொள்ளாமல் காமநோயைக் கொண்டது என தோழியிடம் உரைக்கின்றாள். இத்துறை திணைமொழி ஐம்பதில்,

> **“கலையொடு மான் இரங்கு கல் அதா் அத்த**
> **நிலைஅஞ்சி, நீள் சுரத்து அல்குவா் கொல் - தோழி**
> **முலையொடு சோ்கின்ற பொன் வண்ணம், அன்னோ**
> **வளையொடு சோரும், என் தோள்”   (திணை.ஐம்.19)**

என அமைகிறது. தலைவனைப் பிரிந்த தலைவியின் உடல் மெலிந்து அணிந்திருந்த வளையல்கள் கழன்று போகின்றன. தலைவன் செல்லும்

வழியானது நீர் இல்லாமையால் ஆண் மானும், பெண் மானும் துன்பம் உறுவதைக் காணும் தலைவனுக்கு தலைவியின் எண்ணம் தோன்றும் போது விரைந்து வருவார் என உரைக்கின்றது. இவ்விரண்டு பாடல்களிலுமே பிரிந்துச் சென்ற தலைவன் காணும் இயற்கைக் காட்சிகள் தலைவியை நினைவுபடுத்துவதால் விரைந்து தலைவன் வருவான், அதுவரை ஆற்றியிருக்க வேண்டும் என்பதாகக் கூறப்படுகின்றது.

### தலைவி வாயில் மறுத்தல்

தலைவியின் உள்ளத்தில் வாயில் மறுத்தலை உருவாக்கும் மனஉணர்வுகளை பின்புலங்களை பின்வருமாறு வகைப்படுத்தலாம். அவை,

- ❖ **பரத்தை புலந்ததாலும், அவளது புலவியைத் தணிக்க இயலாததாலுமே தலைவன் தன்னிடம் வந்ததாகத் தலைவி உணர்ந்தமை.**
- ❖ **தலைவன் பரத்தையுடன் அணைந்து இன்புற்ற நிகழ்ச்சி தலைவியின் மனக்கண் முன் நின்று வருந்தியமை.**
- ❖ **காமம் சென்ற வழி வாயில்களைச் செல்லவிடும் தலைவனின் காமமிகை.**
- ❖ **தலைவன் உண்மையான அன்புடன் மனம் திருந்தி வாராது, மகப்பேற்றிற்கு உரிய காலத்தில் உலகியல் குறித்தும் பிறகாலங்களில் அலர் அஞ்சியும் வருவதாகத் தலைவி அறிந்தமை.**
- ❖ **தலைவனின் அன்பு மாறுபட்டமை**
- ❖ **பிரியேன் என்ற சூள் பொய்த்தமை**

இவற்றில் முன்னவை மூன்றும் தலைவன் பரத்தையிடத்து மிகுந்த ஈடுபாடு கொண்டதை அறிந்ததால் தலைவிக்குத் தோன்றிய துயரை

விளக்குவன பின்னவை மூன்றும் தலைவனுக்குத் தன்னிடம் ஈடுபாடு இன்மையை அறிந்து கொண்டதால் தலைவிக்குத் தோன்றிய அதிர்ச்சியை விளக்குவன'' என்கிறார் **ஆ. இராமகிருட்டினன். (அகத்திணை மாந்தர் ஓர் ஆய்வு, ப.150)**

## தலைவி தோழிக்கு வாயில் மறுத்தல்

வாயிலாக புக்க தோழிக்கு வாயில் மறுத்தது. பரத்தையிற் பிரிந்தமையால் தலைவனோடு ஊடியிருந்த தலைமகளை ஊடல் தீர்த்துத் தலைவனோடு கூட்டுவிக்க முயன்ற தோழியைத் தலைவி மறுத்துரைத்தது. இதனை,

> **“நன்நலந் தொலைய நலமிகச் சாஅய்**
> **இன்னுயிர் கழியினும் உரைய லவர்நமக்கு**
> **அன்னையும் அத்தனும் அல்லரோ தோழி**
> **புலவிய ∴தெவனோ அன்பிலங் கடையே”** **(குறுந்.93)**

தோழியே தலைவன் நமக்குத் தாயும், தந்தையுமாக இருக்க தகுதியுடையவர். அத்தகு தலைவன் அன்பிலாது பரத்தமை மேற் கொண்டதால், தலைவி அழகு நலன் கெட்டு, உயிர் நீங்கும் தன்மை உடையதாக உள்ளது. அத்தலைவன் மேல் யான் ஊடல் கொள்வதால் எப்பயனும் இல்லை எனக் கூறித் தோழிக்கு தலைவி வாயில் மறுக்கிறாள். இத்துறை சங்கம் மருவிய காலத்தில்,

> **“ஒல்லென்று ஒலிக்கும் ஒலி புனல் ஊரற்கு**
> **வல்லென்றது என் நெஞ்சு – வாட்கண்ணாய் நில்என்னாது**
> **ஏக்கற்று ஆங்கு என் மகன்தான் நிற்ப, என்னானும்**
> **நோக்கான், தேர் ஊர்ந்தது கண்டு”** **(ஐந்.ஐம்.28)**

வாள் போன்ற கண்களை உடைய தோழியே! என்னுடைய புதல்வன் தெருவிலே தேர்மீது சென்ற தந்தையாகிய தலைவனைக் கண்டு ஏக்கமுற்று பார்த்துக் கொண்டு நிற்க, பாகனை

தேரோட்டுதலினின்றும் நிற்பாயாக என்று சொல்லாமல் சென்ற அத்தலைவனின் செயல் ஒல் என்ற ஒலியினைக் கொண்டு மனம் ஆரவாரிக்கிறது. அத்தகு தலைவன் மேல் எத்தகு இரக்கமும் இல்லை என்கிறாள். இச்செய்தியின் மூலம் தலைவன் புதல்வன் இருக்கும் நிலையில் கூட ஆரவார மிக்க தேரில் பரத்தையிடம் சென்றிருக்கிறான் என்பதை அறியமுடிகின்றது.

## தலைவி வாயில்களுக்கு வாயில் மறுத்தல்

தலைவனுக்குப் பாங்காயின் வாயில்கட்குத் தலைவி கூறியது. தலைவன் மேல் ஊடியிருந்த தலைவியின் ஊடல் நீக்கத் தூதாக வந்தவர்களிடம் தலைவனின் தகாதவொழுக்கத்தினை தலைவி கூறியது.

**“ஐயவி அன்ன சிறுவீ ஞாழல்**
**செல்வி மருதின் செம்மலொடு தாஅய்த்” (குறுந்.50)**

தாயும், தந்தையும் போன்று நன்மை செய்யக்கூடிய தலைவன் பரத்தையரோடு, நீர்த்துறையில் ஆடுதலால் ஞாழல் பூக்கள் சிதறுகின்றன. தலைவனின் இச்செயலால் தலைவியின் தோள்கள் மெலிந்தன. அவள் விரும்பி சூடும் மலர்கள் அனைத்தும் கீழே வீழ்ந்து வாடிக்கிடக்கின்றன என்று அப்பாடல் அமைகிறது. தலைவனின் இச்செயலால் வாயிலாக வந்தவர்களுக்கு தலைவி வாயில் மறுக்கிறாள். சங்கம் மருவிய காலத்திலும் இத்துறை இடம் பெற்றுள்ளது.

**“இசைமையுரைக்க மென்செய் திரநின்றவரை**
**வசையுரைப்பச் சால உழுத்தீர் - பசைபொறை**
**மெய்ம்மருட் டொல்லா மிகுபுன லூரன்றன்**
**பொய்ம் மருட்டுப் பெற்ற பொழுது” (திணை.நூற்.130)**

மெய்யான அன்பும், உண்மையும் இல்லாத மருதநிலத் தலைவனின் பொய் மாய உரைகளைக் கேட்ட போது, தலைவியிடம் தலைவன் நடந்து கொண்ட செயல்கள் புகழை கொண்டாலும்,

வாயில்களாக வந்தவர்கள் புகழ்ந்து சொல்லும் உங்கள் உரை அவர்தம் இகழ்ச்சியை சுட்டுகின்றன. எனவே இவ்விடம் விட்டு நீங்குவீராக எனத் தலைவி வாயில்களுக்கு வாயில் மறுக்கிறாள். சங்கம், சங்கம் மருவிய கால அகப்பாடல்கள் இரண்டிலும் தலைவனின் இழிவான பரத்தைமையை தலைவி வெறுப்பதாகக் கூறப்படுகின்றது.

**தலைவி பாணற்கு வாயில் மறுத்தல்**

பரத்தமை மேற்கொண்டிருந்த தலைவன், தலைவியின் ஊடல் அறிந்து பாணனை வாயிலாக செல்ல தலைவி பாணற்கு வாயில் மறுத்தது.

**"வடிக்கதிர் திரித்த வன்ஞாண் பெருவலை**

**……………………………………………**

**பெண்டென அறிந்தன்று பெயர்த்தலோ அரிதே" (நற்.74)**

பெருவலையைக் கடலிலிட்டு மீன் பிடிக்கவெண்ணித் தோணியிலேற்றிச் செல்லும் தலைவனானவன் என்னை வயமாக்கினான் புதல்வனைப் பெறுங்காலத்துப் பரத்தையிற் பிரிந்த தலைவன், அவள் நெய்யாடியப் பின்பு வந்து புலவி நீக்க வேண்டிப் பாணனை விடுப்ப, தெளிந்த கடற்கரையிலுள்ள கண்டல் மரம் நிரம்பிய வேலியினை உடைய இவ்வூரானது, தலைவன் விரும்பும் பரத்தையானவள் மனைக்கிழத்தியானதால் பாணனே இங்கிருந்து செல்வாயாக என வாயில் மறுத்தாள் தலைவி. இத்துறையில் ஐந்திணை எழுபது பாடலில்,

**"போத்தில் கழுத்திற் புதல்வ னுணச் சான்றான்**
**மூத்தே மினியாம் வருமுலையார் சேரியு**
**ணீத்துநீ ரூனவாய்ப் பாண! நீ போய்மொழி**
**கூத்தாடி உண்ணினு முண்" (ஐந்.எழு.43)**

என அமைகிறது. பாணனே! தலைமகன் முன்பு தழுவியமைந்த எம்கழுத்திடத்தே இனி தழுவுதற்கு நேரமின்றி என் மகன் முலை உண்ணுமாறு அமைந்துள்ளான். மேலும் புதல்வனைப் பெற்றமையால், தலைமகனுக்குத் தகுதியின்றி மூப்பினை அடைந்தோம். எனவே இவ்விடம் விட்டு நீங்கி முன்னோக்கி வளரும் முலைகளை உடைய பரத்தையரது சேரிக்கு சென்று கள் முதலிய குடிநீர் வகைகளையும், இறைச்சிகளையும் உண்டு, பரத்தையர் முன்பாக கூத்தாடி செல் என பாணனிடம் கூறுவதாக அமைகிறது. சங்க அகப்பாடலில் தலைவி புதல்வனைப் பெறுங்காலத்தில் கூட தலைவன் பரத்தமை மேற் கொண்டிருந்ததையும் சங்கம் மருவிய கால அகப்பாடல் புதல்வனை பெற்ற காலத்திற்கு பிறகும், புதல்வன் காண தலைவன் தேர் ஏறி சென்ற நிலையையும் அறிய முடிகின்றது. ஐந்திணை எழுபது மருதத்திணை பாடல் ஒன்று தலைவன் புதல்வனை ஈன்ற தலைவியையும், மகனையும் மகிழ்ந்து இன்புற்றதாக அமையப்பெற்றுள்ளது. மேலும்

**"ஆற்றல் உடையன், அரும்பொறி நல்ஊரன்**
**மேற்றுச் சிறுதாய காய்வுஅஞ்சி, போற்று உருவிக்**
**கட்டக முத்தின் புதல்வனை மார்பின்மேல்**
**பட்டம் சிதைப்ப வரும்" (ஐந்.எழு.41)**

என்னும் பாடல் போர்வன்மையும், அரிய செல்வத்தையும் கொண்ட மருத நிலத்து தலைவன் ஆனவன் சிறியதாய் பொருந்திய வஞ்சிக் செடியினைப் போன்று கணுக்கள் சிதறுவதால் தோன்றும் முத்தினைப் போன்ற தன் மகனைத் தன் மார்பில் மேல் சேர்த்து அணைத்துக் கொண்டு, தன் மேலே அணிந்திருக்கும் உடை களைவதையும் பொருட்படுத்தாமல் வருகின்றான் என உரைக்கின்றது. வழக்கமான மருதத்திணை செய்யுள் போல் அமையால் தனிப்பெரும் சிறப்புடையதாக இப்பாடல் அமைகிறது. சங்க அகப்பாடலில் இருந்து இப்பாடல் மாறுபட்டதாகக் காணப்படுகிறது.

## தலைவி தோழிக்கு வாயில் நேர்தல்

தோழி தலைவனுக்கு, தலைவியின் துயர், தலைவி தலைவனைச் சார்ந்திருக்கும் நிலை ஆகியவற்றைக் கூறி அவனை வாயில் நேர்தல். பரத்தையிற் பிரிந்து வந்த தலைமகன், தலைவியை ஊடல் போக்கி உடம்படுக்குமாறு தோழியை தலைவன் இரந்தானாக அதற்கு உடம்பட்டு வந்து தலைவி தோழிக்கு கூறியது.

**"அருவி அன்ன பருஉறை சிதறி**
**யாறுநிறை பகரும் நாடனைத் தேறி**
**உற்றது மன்னும் ஒருநாள் மற்று அது**
**தவப்பல் நாள்தோறும் மயங்கி**
**வெளவும் பண்பின் நோய்ஆ கின்றே"** **(குறுந்.73)**

தோழியே! மலையருவி போன்ற பெரிய துளிகளைச் சிதறி ஆறுகள் தம் வெள்ளத்தை ஊர்கள்தோறும் கொடுத்தற்குக் காரணமான நாட்டை உடைய தலைவன் நல்லன் எனத் தெரிந்து அவனோடு நட்பு கொண்டது ஒரு நாளேயாகும். அவ்வொரு நாள் கேண்மை எந்நாளும் துன்பம் தருவது அன்று எனக் கூறி தலைவனை ஏற்கும்படி கூறிதோழி வாயில் நேர்கிறாள். சங்கம் மருவிய கால அகப்பாடலில் புதல்வனை முனிந்து தலைமகனுக்கு மறுத்தல் போலத் தோழிக்கு வாயில் நேர்ந்தது.

**"பெய்வளைக் கையாய்! பெருநகை யாகின்றே**
**செய்வய லூரன் வதுவை விழவியம்பக்**
**கைபுனை தேரேறிச் செல்வானைச் சென்றிவ**
**னெய்தி யிடருற்ற வாறு"** **(ஐந்.ஐம்.26)**

மருதநிலத்தலைவன் பரத்தையை புதுமணவிழாக் கொண்டாடும் பொருட்டு முழவினை ஒலிக்க அணிசெய்யப்பட்ட தேரின் மேல் ஏறி பரத்தையின் பால் செல்லவிருந்த தலைவனை புதல்வன் எதிர்சென்று கண்டதினால் இன்பமுற்று புதுமணப் பொருத்தம் பெறாது தலைவன்

வந்தது பெரும் நகைப்பை உண்டாக்குகிறது எனக்கூறி தலைவனை ஏற்றுக்கொள்ளலாயினாள். மேலும், தலைவன் புறத்தொழுக்கம் கொண்டாலும் தன் மேல் குறைவற்ற அன்புடையவன் எனத் தலைவி உணர்ந்தமையால் வாயில் வேண்டி நின்ற தலைவன்பால் தன் நெஞ்சு நெகிழ்ந்து செல்வதை நிறுத்த முடியாமல் ஏற்றுக் கொள்கிறாள். இதனை,

**“கோலச் சிறுகுருகின் குத்தஞ்சி யீர்வாளை**
**நிலத்துப் புக்கொளிக்கு மூரற்கு – மேலெலாஞ்**
**சார்தற்குச் சந்தனச் சாந் தாயினே மிப்பருவங்**
**காரத்தின் வெய்யவென் தோள்”** **(ஐந்.ஐம்.24)**

என்னும் இப்பாடலில் அழகிய சிறிய நாரையானது கொத்துதலுக்குப் பயந்து வாளை மீனானது நீலோம்பற் மலர்கட்டத்தினிடையே புகுந்து மறைந்துகொள்ளும் மருத நிலத்தூர்த் தலைவன் முன்பெல்லாம் யாம் புணர்வதற்கு சந்தனக் குழம்பைப் போன்று இருந்தோம். இப்பொழுதோ என் தோள்கள் புண்ணிற்கு இடும் காரத்தினைப் போன்று கொடிவையாக உள்ளது எனத் தலைவி பாணனிடம் கூறுகின்றாள். சங்க அகப்பாடலில் பரத்தமை மேற்கொண்ட தலைவனோடு தலைவி கொள்ளும் ஊடல் மிகுந்து காணப்படுவதைப் போலவே சங்கம் மருவிய காலத்திலும் உள்ளது. இருப்பினும் ஊடலினால் உண்டாகும் கோபம் சற்று அதிகமாக இருப்பதை உணர முடிகின்றது. சந்தனமாக இருந்து குளிர்ந்த தோள்கள், இப்பொழுது காரம்போல் உள்ளதால் தலைவன் பரத்தையிடம் சென்றான் என்பது தலைவி துன்பத்தின் உச்சக் கட்டத்தினை உணர்த்துகிறது.

புதல்வன் பிறந்த பிறகே தலைவன் பரத்தமை மேற்கொண்டதாக உள்ளது. புதல்வன் காணும் போது கூட பாரமுகமாய் தலைவன் பரத்தை இல்லம் நோக்கி ஆரவாரமிக்க தேரில் சென்றுள்ளமை

அறிய முடிகின்றது. தலைவியின் ஊடல் தணிக்கும் வாயிலாக பெரும்பான்மையாக பாணனே இடம்பெற்றுள்ளான்.

சங்கம், சங்கம் மருவிய கால தலைவியின் கூற்றுப் பாடல்கள் பெரும்பான்மையானவை பிரிவுகால மனநிலையைப் புனைவதாக அமைந்துள்ளன. சங்க இலக்கியத்தில் இடம்பெற்றுள்ள தலைவி கூற்றும் துறையும் சங்கம் மருவிய காலத்தில் பெரும்பான்மையாக பின்பற்றப்பட்டுள்ளது. சில துறைகள் புதியதாக இடம்பெற்றுள்ளன.

## சங்கம், சங்கம் மருவிய கால அகப்பாடல்களில் தோழி கூற்றும், துறையும்

அகத்திணை மாந்தர்களுள் தோழிக்கெனத் தனிச்சிறப்பிடம் இருப்பது குறிப்பிடத்தக்கதாகும். தலைவனும், தலைவியும் ஒன்றுக் கூடி வாழும் களவிலும், கற்பிலும் முக்கிய பங்காற்றுபவள் தோழி, அவள் சிந்தனைத் திறம் மிக்கவளாகவும், உலகியலை உற்று நோக்கி அறியக் கூடியவளாகவும் இருக்கின்றாள். அகத்திணையின் முதன்மையான துறைகளிலும், அகத்திணையில் பிறமாந்தர்கள் இடம்பெறும் சூழல்களிலும் முன்நிற்பவள் ஆவாள். இத்தகு சிறப்பிற்குரிய தோழியின் கூற்றுக்கள் தலைமை இலக்கியமாகிய சங்க இலக்கியத்தில் முதன்மைப்படுத்துவது போல சங்கம் மருவிய காலத்திலும் இடம்பெற்றுள்ளது. எனவே, சங்கம், சங்கம் மருவிய கால அகப்பாடல்களில் தோழியின் கூற்றும், துறையும் ஒப்பிட்டு ஆராயப்படுகின்றன.

### அகஇலக்கணங்களில் தோழி

தோழி பற்றிய செய்திகளை அகஇலக்கண நூல்கள் தெளிவாக விளம்பியுள்ளன.

**“தோழி தானே செவிலியது மகளே”** **(தொல்.கள.1071)**

தோழியானவள் செவிலியின் மகளாவாள் - இதனை நம்பியகப் பொருளும் சுட்டுகின்றது. தோழி என்பவள் தலைவன், தலைவியின் நன்மைகளை ஆராய்ந்து விளக்கும் திறமுடையவளாகவும், இன்ப துன்பத்தில் அருகில் இருந்து ஆறுதல் நிகழ்த்தும், துணையாகவும் செயல்படுபவள் என்பதனை,

**“சூழ்தலும் உசாத்துணை நிலைமையில் பொலியுமே”**

**(தொல்.களவு.1072)**

களவு வாழ்விலும், கற்பு வாழ்விலும் பல்வேறு இடங்களில் தோழி கூற்று நிகழ்த்துவாள் என்பதைத் தொல்காப்பியரின் களவியல், கற்பியல் பகுதிகள் விளக்குகின்றன. சங்கம், சங்கம் மருவிய கால அகப்பாடல்களில் தோழி கூற்று பாடல் அட்டவணை பின்வருமாறு

| **சங்க காலம் (780)** | | **சங்கம் மருவிய காலம் (190)** | |
|---|---|---|---|
| தோழி தலைவனுக்கு உரைப்பன | 417 | தலைவனுக்கு உரைப்பன | 77 |
| தலைவிக்கு உரைப்பன | 290 | தலைவிக்கு உரைப்பன | 98 |
| செவிலிக்கு உரைப்பன | 037 | செவிலிக்கு உரைப்பன | 12 |
| தோழி பிறகூற்றுகள் | 036 | பாணனுக்கு உரைப்பன | 01 |
| | | அன்றிலுக்கு உரைப்பன | 01 |
| | | குருந்தமரம் உரைப்பன | 01 |

சங்க அகப்பாடல்களில் தோழி தலைவனுக்கு உரைத்த கூற்று (417) மிகுதியாக உள்ளன. சங்கம் மருவிய காலத்தில் தோழி தலைவிக்கு உரைத்த கூற்றுகளே (98) மிகுதியாக உள்ளமை குறிப்பிடத்தக்கது. அவை பின்வருமாறு ஆராயப்படுகின்றன.

## குறைநயத்தல்

குறைநயத்தல் என்பது தலைவன் தனது குறையாகிய வேண்டுகோளை நிறைவேற்றி வைக்கும்படி தோழியை வேண்டிக்கொள்வது ஆகும். தோழியின் பால் தலைவன் குறையிரந்தானாக அதற்கு

உடன்பட்ட தோழி தலைவனை ஏற்றுக்கொள்க எனத் தலைவியிடம் கூறுதல் எனும் துறையில்,

**“விட்ட குதிரை விசைப்பி னன்ன**
**விசும்பு தோய் பசுங்கழைக்குன்ற நாடன்**
**யாம்தற் படர்ந்தமை அறியான் தானும்**
**வேனில் ஆனேறு போலச்**
**சாயினன் என்ப நம் மாணலம் நயந்தே”** **(குறுந்.74)**

என்ற பாடல் அமைகிறது. நெடுநாள் கட்டியிருந்து அவிழ்த்து விட்ட குதிரை துள்ளி எழுந்தாற் போன்று பிணித்துப் பின் விடப்பட்ட மூங்கிலை உடைய மலைநாட்டுத் தலைவன். காளை போன்ற நம் தலைவன் மாட்சிமைப்பட்ட நலத்தை விரும்பி பெறாமையால் மெலிந்தான் என்கிறாள் தோழி. இத்துறை சங்கம் மருவிய கால அகப்பாடலிலும் இடம் பெற்றுள்ளது.

**“புனைபூந் தழையல்குல் பொன்னன்யாய்! – சாரற்**
**நினைகாத் திருந்தேம்யா மாக – வினைவாய்த்து**
**மாவினவு வார்போல வந்தவர் நம்மாட்டுத்**
**தாம்வினவ லுற்றதொன் றுண்டு”** **(ஐந்.ஐம்.14)**

அழகிய பூக்களால் புனையப்பட்டு இலக்குமியை ஒத்த தலைவியே இம்மலையின் பக்கத்தில் உள்ள நம் தினைப்புனத்தை நாம் காத்துவந்தோம். அப்போது வேட்டையாட வந்த தலைவன் தப்பிச் சென்ற விலங்கைத் தேடி வந்தது போன்று நம்மிடம் வந்தான். அதன் உண்மைப் பொருள் வேறு. அவன் புணர்ச்சி விருத்தினைக் கொண்டானாக உள்ளான். சங்கம், சங்கம் மருவிய கால அகப்பாடல் இரண்டிலுமே தலைவனின் குறைநயத்தல் என்னும் துறை புணர்ச்சி விருப்பத்தை கூறுவதாக உள்ளது. தலைவனுடன் இன்புற்ற தலைவி அவனது பிரிவால் வருந்தி நிற்கிறாள் என்பதைத் தான் உணர்ந்து கொண்டதைத் தலைவிக்கு உணர்த்த விரும்பி ‘நம்’ என்னும்

தன்மை உளப்பாட்டுப் பன்மைச் சொல் இரண்டு பாடல்களிலுமே பயன்படுத்தப்பட்டுள்ளது.

**வரைவு கடாவுதல்**

தலைவியின் சூழலை விளக்கி மணம் புரியுமாறு தலைவனைத் தோழி வேண்டுவது வரைவுகடாதல் எனப்படும். இது களவைக் கற்பாக்கத் தோழி எடுக்கும் முன் ஏற்பாடு. தோழி வரைவு கடாவும் சூழலைத் தொல்காப்பியர் பின்வருமாறு வரையறுப்பர்.

- ❖ இற்செறிப்புக் கடுமையால் தலைவியின் காதல் மிகும் சூழல்.
- ❖ தலைவனின் ஆற்றாமை அறிந்து தலைவி கலங்கும் சூழல்
- ❖ தலைவனது நாடு, ஊர், இல், குடி, பிறப்பு, சிறப்பு ஆகியன கூறித் தோழி வரைவு வேண்டும் சூழல் இவற்றில் முதல் இரண்டும் வரைவு கடாதல் எழும் சூழலையும், இறுதி வரைவு கடாவும் முறையையும் கூறுகிறது.

**“மறைவொழுக்கத்தைச் சமுதாயப் பெருங்கண்கள் பார்த்துக் கொண்டிரா சுற்றுப்புறக் குளவிகள் கொட்டாதுவிடா; எண்ண ஊசிகள் துளையாது போகா. ஆதலின் காதற்களவுக்கு உலகில் புகலிடம் இல்லை. களவைக் கற்பாக்கினாலல்லது உலகுக்கு உறக்கம் இல்லை என்றும் காதலுக்குத் திருமண மின்றேல் சமுதாயத்துக்கு வாழ்வில்லை. அகத்திணை கண்ட தமிழ்ச்சான்றோர் வரைவுத் துறைகளாய் இருப்பதற்கும் திருமணக் கொள்கையே ஏதுவாம்”** என்கிறார் வ.சுப.மாணிக்கம். **(தமிழ்க்காதல், ப.64)**

வரையாது வந்தொழுகாநின்ற காலத்துத் தலைவன் கேட்ப தலைவிக்கு தோழி கூறியது. களவின்பமே காமுற்று வரைதல் கருத்தின்றி ஒழுகுந் தலைவனைத் சிறைப்புறமாக நிற்றலை உணர்ந்து அவன் கேட்கும்படி தலைவியை நோக்கிக் கூறியது எனும் துறையில்

**“வந்த வாடைச் சில்பெயற் கடைநாள்**

**……………………………………..**

**மன்றம் நண்ணிய மலைகிழ வோற்கே”** **(குறுந்.332)**

எனும் பாடல் அமைகிறது. மணங்கமழ்கின்ற உயிர்பினையும் மடப்பத்தினையும் உடைய பெண்யானையின் பெரிய கையினையுடைய களிற்று யானையை, மலையிடத்தேயுள்ள சிற்றூரின்கண் இறங்கி அம்பலத்திற் பொருந்தி வருவதற்கு உரிய மலைநாட்டுத் தலைவன். வாடைக் காற்று வருகின்ற கடை யாமத்தே வருவதனால் ஏற்படும் பெரும் துன்பத்தை நீக்கி, விரைவில் திருமணம் செய்து கொள்வாயாக எனக் கூறினாள். சங்கம் மருவிய காலத்திலும் இத்துறை இடம்பெற்றுள்ளது. சான்றாக,

**“கண்ணுறு நெய்தல் கமழுங் கொடுங்கழித்**
**தண்ணந் துறைவனோ தன்னில னாயிழாய்!**
**வண்ணகைப் பட்டதனை யாண்மை யெனக்கருதிப்**
**பண்ணமைத் தேர்மேல் வரும்”** **(ஐந்.எழு.61)**

எனும் பாடலில் தலைவியே நெய்தற்பூக்கள் மணக்கும் படியான வளைந்து செல்லும் கடற் கால்வாய்களை உடைய குளிர்ந்த துறைமுகத்துக்குரிய தலைமகன் தனது பழைய போக்கினை மேற்கொண்டிராதவனாய், அழகினையுடைய அவன் கைகளில் நாம் அகப்பட்டுக் கொண்டதனை. தனது ஆண்மையின் பாற்பட்டது என்று எண்ணி இறுமாப்புற்று ஒழுங்காக அமைக்கப்பட்ட தேரின் கண்அமர்ந்து இரவு வருதலை ஒழிவாயாக எனத் தோழி தலைவியிடம் கூறினாள். இப்பாடல்கள் இரண்டிலுமே தலைவனுக்கு, தலைவி மேல் உள்ள புணர்வு வேட்கையும், தோழிக்கு வரைவு வேட்கை உள்ளதை புலப்படுத்துகின்றன. மேலும் வரைவு கடாவுதல் பற்றி பாடல்கள் சங்கம், சங்கம் மருவிய கால அகப்பாடல்களில் ஒத்த தன்மை உடையனவாக உள்ளன.

**தோழி செவிலிக்கு அறத்தொடு நிற்றல்**

அறத்தொடு நிற்றல் என்பது களவை, கற்பாக மாற்றுவதற்கான முயற்சியாகும். தலைவி தன் களவை தோழிக்கு வெளிப்படுத்தியதை, தோழி செவிலிக்கு கூறுதல் ஆகும். தொல்காப்பியர் அறத்தொடு நிற்கும் மரபினை,

**"அறத்தொடு நிற்கும் காலத்தன்றி**
**அறத்தொடு மரபிலள் தோழி என்ப" (தொல்.பொருள்.12)**

**"எளித்தல், ஏத்தல், வேட்கை, உரைத்தல்**
**கூறுதல், உசாதல் ஏதீடு தலைப்பாடு**
**உண்மை செப்பும் கிளவியோடு தொகைஇ**
**இவ்வெழு வகைய என்மனார் புலவர்" (தொல்.பொருள்.13)**

எனச் சுட்டப்படுகிறது. மேலும் தோழி செவிலிக்கு அறத்தொடு நிற்கும் நிலை குறித்து பின்வரும் பாடல் அமைகிறது.

**"அன்னை வாழிவேண் டன்னையென் தோழி**
**சுடர்நுதல் பசப்பச் சாஅய்ப் படர்மெலிந்து**
**தண்கடற் படுதிரை கேட்டொறுந்**
**துஞ்சா ளாகுதல் நோகோ யானே" (ஐங்.107)**

தாயே வாழ்வாயாக, தோழியாகிய இவள் எய்திய நோய்க்கு காரணம், இரவு முழுவதும் உறங்காமல் விழித்திருந்ததால் அவள் நுதல் பசலை பாய்ந்தது, மேலும் குளிர்ந்த கடல் அலைகளால் ஏற்படும் ஆசையால் உறங்காதவளாய் ஆனாள். தலைவியின் காம குறிப்பும், தலைவனை நினைத்து வருந்துதலும் குறிப்பாக சுட்டப்பட்டுள்ளது. இத்துறை சங்கம் மருவிய கால அகப்பாடலிலும் குறிப்பிடப்பட்டுள்ளது.

**"வருக்கை வளமலையுண் மாதரும் யானு**
**மிருக்கை யிதண்மேலே மாகப் - பருக்கைக்**

**கடாஅமால் யானை கடிந்தானை யல்லாற்**

**றொடாஅவா லென்தோழி தோள்"     (திணை.நூற்.14)**

பலா மரங்கள் நிறைந்த மலையினிடத்தே தினைப்புனம் காத்தலுக்காக பரணில் இருந்த போது பருத்த துதிக்கையினையும், மதநீரால் மயக்கத்தினைக் கொண்ட யானையிடம் இருந்து காளை போன்ற தலைவனே காத்தான். அத்தலைவன் தோள் அன்றி வேறு எவரையும் தீண்டாது எனக் கூறி தோழி செவிலிக்கு அறத்தொடு நிற்கிறாள். அறத்தொடு நிற்றல் என்னும் துறையில் அமைந்த சங்க அகப்பாடல் குறிப்பாக சுட்டப்படும் நிலை சங்கம் மருவிய காலத்தில் வெளிப்படையாக அமைந்துள்ளன.

### தலைமகன் வரைவுமலிந்த தோழி தலைமகட்குச் சொல்லியது

தலைவியும், தோழியும் இருவரும் மகிழும் ஒரே துறை வரைவு மலிந்தது ஆகும். **"களவு நாடகத்தின் இறுக்காட்சியாய் இன்ப முடிவாய் இத்துறை அமைகிறது. இதனை இயக்கும் ஆற்றலாகத் தோழியும் துய்ப்போராகத் தலைவனும், தலைவியும் அமைவர். தான் மேற்கொண்ட முயற்சியால் பெற்ற வெற்றிப் பெருமிதம் தலைவியின் துன்பம் நீங்கும் என்ற உள்ளத்தின் மகிழ்ச்சி இத்துறையில் தோழி கூற்றின் வாயிலாக வெளிப்படும்"** என்கிறார் **சரளா. இராஜகோபாலன். (சங்க இலக்கியத்தில் தோழி, ப.232)** தலைவன், தலைவியை வரைந்து கொள்ள வருகின்ற நற்செய்தியை செவிலி தோழிக்கு கூறி, தோழி தலைவிக்கு கூறி செவிலியை வாழ்த்தியது. இதனை,

**"அரும்பெறல் அமிழ்தம் ஆர்பதம் ஆகப்**

**..................................**

**ஓங்குமலை நாடனை வரும் என் தோளே" (குறுந்.83)**

தமக்குரிய இல்லில் இருந்து தான் ஈட்டிய பொருளை, தென்புலத்தார் முதலியவர்களுக்கு பகுத்து கொடுத்து, தனக்கு உரிய

கூறுகளை கொண்டு மகிழ்ந்திருக்கும் மலைநாட்டுத் தலைவன், வரைதல் முயற்சியோடு வருவதைக் கண்டு அன்னை பெறுதற்கு அரிய உணவாகிய அமிழ்தத்தை உண்ணும் உணவாக பெற்று பெரும் புகழை உடைய மேனிலை உலகம் பெறவேண்டும் எனக் கூறினாள். சங்கம் மருவிய காலத்திலும் இத்துறை இடம் பெற்றுள்ளது. ஆனால் செவிலி கூறியதாக இல்லாமல் தோழியே தலைவியிடம் கூறியதாக அமைந்துள்ளது.

**"அஞ்சனக் காயா மலரக் குருகிலை**
**யொண்தொடி நல்லார் முறுவல் கவின்கொளத்**
**தண்கமழ் கோட றுடுப்பீனக் காதலர்**
**வந்தார் நிகழ்கநின் தோள்"** **(திணை.ஐம்.21)**

காயா செடிகள் மைபோன்ற மலர்களை கொண்டுள்ளன. ஒளிவீசும் வளையலை அணிந்த மகளிரின் முறுவலைப் போன்று குருக்கத்தி இலைகள் விளங்குகின்றன. வெண்காந்தள் பூக்கள் துடுப்பைப் போன்று மலர்க் கொத்துக்களைக் கொண்டுள்ளன. இவை கார்காலத்து வரவை தெரிவித்ததைப் போன்று, முலைவிலைக்குரிய பொருளோடு, பிரிவில் மெலிந்த தலைவியின் தோள் பூரித்து விளங்கும்படியாக தலைவன் வரைவு மலிந்ததை தோழி கூறினாள். சங்கம், சங்கம் மருவிய கால அகப்பாடல்கள் இரண்டிலும் வரைதலினால் ஏற்படும் மகிழ்ச்சி சுட்டப்படுகிறது.

### வரைவிடை ஆற்றாத தலைவியை ஆற்றுவித்தல்

தலைவன் பிரிந்த பின் ஆற்ற இயலாத தலைவியைத் தோழி ஆற்றுவிக்கும் பின்புலங்களாக மூன்று சூழல்களைப் பிரிக்கலாம். அவை.

- ❖ களவை வரைவிடை வைத்துப் பிரிந்த சூழல்
- ❖ கற்பில் பிரிவிடை ஆற்றாத சூழல்
- ❖ பருவம் கண்டு தலைவி ஆற்றாத சூழல்

போன்றவை ஆகும்.வரைவினை முன்னிறுத்தி பொருள் ஈட்ட சென்ற தலைவன் பிரிவை ஆற்றாத தலைவியை தோழி ஆற்றுவித்தலாக பின்வரும் பாடல் அமைகிறது.

**“கருங்கால் வேங்கை மாத்தட் டொள்வீ**
**ஒண்ணுதல் பசப்ப தெவன்கொ லன்னாய்”** **(ஐங்.219)**

வலிய அடிப்பாகத்தை உடைய கருங்கால் வேங்கை மரத்தில் இருந்து உதிரும் பொன்னிறமான மலர்கள், கற்பாறைகள் மீது பரந்து சிதறிக் கிடக்கும், நம் மலைநாட்டுத் தலைவன் பிரிந்த ஓரிரு நாட்களிலே, தலைவியின் நுதல் பசலை பாய்ந்தது. தலைவன் பிரிந்து சென்ற பொல்லா மறை ஒழுக்கத்தை நல்லொழுக்கம் செய்வதற்கே எனக் கூறி தலைவியைத் தோழி ஆற்றுவிக்கிறாள். சங்கம் மருவிய காலத்திலும் இத்துறை இடம் பெற்றுள்ளது. சான்றாக

**“நுண்ஞாண் வலையிற் பரதவர் போத்தந்த**
**பன்மீ னுணங்கல் கவருந் துறைவனுக்**
**கண்ணினாற்காண வமையுங்கொ லென்தொடு!**
**வண்ணந்தாவென்கந் தொடுத்து”** **(ஐந்.எழு.64)**

தோழியாகிய தலைமகளே! நுட்பமாகிய கயிறுகளாலே பிணிக்கப்பட்ட வலையினாலே நெய்தல் நிலமக்கள் பிடித்துகொண்டு வந்த பலவித மீன்களை பறவைகள் பற்றி செல்லா செல்லுதற்கு இடமாகிய கடற்கரை துறைமுகத்துத் தலைவனை நாம் காணும்படி இல்லாமல் சென்றான். அவ்வாறு காண நேருமாயின் அவனை விடாது பின் சென்று களவுப்புணர்ச்சியில் எடுத்துக்கொண்ட கன்னித்தன்மையை, அழகினை கொடுப்பாய் என நாம் கேட்போம் எனத் தோழி, தலைவியிடம் கூறினாள். சங்கம், சங்கம் மருவிய கால அகப்பாடல்கள் இரண்டிலும் தலைவனின் களவுப் புணர்ச்சி கூறப்படுகிறது. களவில் தலைவன் கொள்ளும் பொருள்வயிற் பிரிவு வரைவின் பொருட்டு மேற்கொள்ளப்படுவதாகும். தலைவன், தலைவிக்கு பொருள் தரும் மரபு

இரண்டிலும் காணப்படுகிறது. எனவே வரைவின் நோக்கத்திற்காகப் பிரிந்து சென்ற தலைவனின் மனது அறிந்து ஆற்றியிருக்கும்படி தோழி கூறுகிறாள்.

### தோழி தலைவனுக்கு வாயில் மறுத்தது

தலைவனின் பரத்தமை ஒழுக்கத்தினால் தோழி தலைவனுக்கு வாயில் மறுக்கிறாள். பரத்தமையால் ஊடியிருந்த தலைவியின் ஊடல் தீர்த்து, கூடும் பொருட்டு அதற்குத் துணை செய்யுமாறு தோழியை வேண்டிய தலைவனுக்கு உடன்படாது கூறியது என்னும் துறையில் அமைந்த (குறுந்.139, திணை ஐம்.33) இப்பாடல்கள் சங்கம், சங்கம் மருவிய கால அகப்பாடல்கள் இரண்டிலுமே தலைவனின் பரத்தமையை ஏற்க முடியாத தோழி தலைவனுக்கு வாயில் மறுப்பதாக அமைந்துள்ளன.

### தோழி தலைவனுக்கு வாயில் நேர்தல்

தோழி தலைவனிடம், தலைவியின் துயரமும் தலைவனைச் சார்ந்திருக்கும் நிலை ஆகியவற்றைக் கூறி அவனை வாயில் நேர்கிறாள். தலைவனைக் கடிந்து மீண்டும் பரத்தமை மேற்கொள்ளாதவாறு அறிவுரை கூறியும் வாயில் நேர்கிறாள் தோழி பரத்தையிற் பிரிந்து வந்த தலைவனுக்குத் தோழி வாயில் நேர்ந்து, அவன் தீமையை எடுத்துக்காட்டுதல் போன்ற செய்திகள் இத்துறையில் அமைந்துள்ளன.

சங்கம், சங்கம் மருவிய கால அகப்பாடல்கள் இரண்டிலுமே பரத்தமை கண்டிக்கப்பட்டாலும், வாயில் மறுத்தாலும், இறுதியில் தலைவியின் இல்லற வாழ்வு சிறக்க அதனை பொறுத்து ஏற்றுக் கொள்ளும் நிலையே காணப்படுகின்றன.

### பருவங் கண்டழிந்த தலைவியைத் தேற்றுதல்

தலைவன் தலைவியர்க்கு இடையேயான பிரிவுகாலத்து துன்பத்தை ஆற்றுவித்தல் தோழிக்குரிய செயலாகும். **“தலைவர், தலைவியைப்**

**பிரிந்து 'வினையே ஆடவர்க் குயிரே' என்ற நிலையில் செல்கின்ற காலத்தில், இளவேனிற் காலத்தும், கார்காலத்தும் வந்துவிடுவதாகக் கால எல்லை குறித்துச் செல்வர். அக்காலம் வரை தலைவியர் துன்பம் தாங்குவர். அக்காலம் நெருங்குகின்ற காலத்தும், அக்காலம் வந்ததும் தலைவர் வராத காலத்தும் தலைவியரின் துன்பம் மிகுதியாகும். தலைவர் விரைந்து வருகையைப் பலகாலும் எடுத்துக்கூறி, ஏதுக்களும் கூறி வற்புறுத்தி ஆறுதல் கூறுவதற்குரியோராக அமைவர்''** என்கிறார் **மு. மணிவேல். (தமிழ் இலக்கிய அகப்பொருள் மரபுகள், ப.79)** மேலும் இதனை,

**''கண்ணெனக் கருவிளை மலரப் பொன்னென**
**நற்றோள் மருவரற் குலமரு வோரே''          (ஐங்.464)**

கார் காலம் மறந்தான் ஆயினும் கருவிளை, பீர்க்கம் முதலான மலரும் காலம் வருவார் என்பதும், நின்னைத் தழுவுதற்கு இடையீடு ஏற்படின் தலைவனும் வருந்துவதாகவும் தலைவிக்கு கூறி தோழி ஆற்றுவிக்கிறாள். இத்துறை சங்கம் மருவிய காலத்திலும் இடம் பெற்றுள்ளது.

**''செல்வந் தரல்வேண்டிச் சென்றநங் காதலர்**
**வுல்லே வருத றெளிந்தாம் வயங்கிழாய்**
**முல்லை யிலங்கெயி றீன நறுந்தண்கார்**
**மெல்ல வினிய நகும்''          (கார்.14)**

முல்லைக் கொடிகள் மகளிரின் பற்களைப் போலும் அரும்புகளை ஈனும் வகை குளிர்ந்த மேகம் மெல்ல இனியவாக மின்னுகின்றன. பொருள் தேடிக் கொள்ளுதலை விரும்பி சென்ற நம் தலைவன் விரைவில் திரும்புவார் எனக் கூறி ஆற்றுவிக்கிறாள். களவில் தோழி ஆற்றுவிக்கும் போது தலைவன் வருவான் என்றும், கற்பில்

ஆற்றுவிக்கும் போது பருவத்தைக் கூறி விரைவில் வருவான் எனக்கூறும்படி அமைந்துள்ளது.

### தோழி தலைவனை இயற்பழித்தல்

வரையாது வந்தொழுகுந் தலைமகன் சிறைப்புறத்தானாக இருக்க தோழி தலைவனை இயற்பழித்தது. தலைவன் களவின்பமே காமுற்று வரைதல் கருத்தின்றி ஒழுகுவானாயின், தலைவியை நோக்கி பழித்துரைத்து ஆகும். இதனை,

**"பெருங்கடல் கரையது சிறுவெண் காக்கை**
**வரிவெண் பாலி வலைசெத்து வெரூஉம்**
**மெல்லம் புலம்பற் தேறி**
**நல்ல வாயின நல்லோள் கண்ணே" (ஐங்.166)**

பெரிய கடற்கரையில், வாழும் காக்கையானது அலைகளாலே ஒதுக்கப்பட்ட வரிகளை உடைய வலையில் கடல்வாழ் சிற்றுயிர்கள் உடலோடு சேர்த்து மிதவை கட்டைகளோடு மிதக்கும். அதனைக் கண்டு பறவைகள் அஞ்சி இரைத்தேடும். அத்தகு நெய்தல் நிலத்தலைவன் தலைவியின் பெண்மை நலம் முழுவதும் எடுத்துக்கொண்டான். மேலும் பறவைகள் வலையை கண்டு அஞ்சியதைப் போல் நம் மொழிகள் வஞ்சம் பொதிந்தனவோ என நினைத்து தலைவன் வரைவு நீட்டிப்பானோ என இயற்பழித்தால் தோழி. சங்கம் மருவிய காலத்திலும் இத்துறை இடம்பெற்றுள்ளது.

**"கேழ லுழுத கரிபுனக் கொல்லையுள்**
**வாழை முதுகாய் கடுவன் புதைத்தயருந்**
**தாழருவி நாடன் றெளிகொடுத்தா னென்தோழி**
**நேர்வளை நெஞ்சூன்று கோல்" (ஐந்.எழு.11)**

பன்றிகள் கொம்பால் கிளறியதும் வேடர்களில் சுட்டு எரிக்கப் பெற்றதுமான தினைப்புன நிலத்தில் ஆண் குரங்குகள் வாழையன்

முதிர்ந்த காய்களைப் பறித்துக் கனியச் செய்வதற்காக மண்ணில் புதைத்து வைத்திருக்கும். சில நாள் சென்று புதைத்த இடம் அறியாது வருந்தும். அத்தகு இடமும், கொட்டும் அருவியும் உரிய மலைநாடன் நெஞ்சில் அம்பு தைத்தது போல என் தோழிக்குக் உறுதிமொழிகளைக் கொடுத்தான் எனக் கூறினாள்.

சங்க அகப்பாடலில் தோழியின் மொழிகள் வஞ்சம் பொதிந்தனவோ என நினைத்து வரைவு நீட்டிப்பதாகவும், சங்கம் மருவிய காலத்தில் நெஞ்சம் தைப்பது போன்ற உறுதிமொழிகளைக் கொடுத்த தலைவன் வரைவு நீட்டிப்பதாக இயற்பழித்துக் கூறப்படுகிறது. சங்க அகப்பாடலைக் காட்டிலும் சங்கம் மருவிய காலத்தில் நயமாக தோழி இயற்பழிக்கிறாள்.

## தோழி இல்வாழ்வு கண்டு மகிழ்தல்

கற்பு வாழ்வு மேற்கொண்ட தலைவியின் இல்வாழ்வு சிறப்பினைக் கண்டு தோழி மகிழ்ந்து கூறுவது. கடிநகர் புக்க தோழி தலைமகன் புணர்ச்சி விதும்பல் கண்டு முன்னர்க் களவுக்காலத்து ஒழுகலாற்றை நினைத்து அழிந்துக் கூறியது.

**“அயிரை பரந்த அம்தண் பழனத்து**
**பேரிய நோன்றனிர் நோகா யானே”** **(குறுந்.178)**

இத்துறை சங்கம் மருவிய காலத்தில் வேறாக இடம் பெற்றுள்ளது. மகற்பெற்ற தலைமகளினைச் செய்பெருஞ் சிறப்பொடு சேர்தற்கெனத் தலைமகன் மகற்கண்டு மகிழ்ந்த வகையினைத் தோழி கண்டு மகிழ்ந்து கூறியது.

**“ஆற்ற லுடைய னரும்பொறி நல்லூரன்**
**மேற்றுச் சிறுதாய காய்வஞ்சி – போற்றுருவிக்**
**கட்டக முத்திற் புதல்வனை மார்பின்மேற்**
**பட்டஞ் சிதைப்ப வரும்”** **(ஐந்.எழு.41)**

அரிய செல்வத்தினை உடைய மருத நிலத்தூர்த் தலைவன் வஞ்சிக் கொடியினைப் போன்ற, கணுக்கள் சிதறுதலால் முத்தினைப் போன்ற தன் மகனை மார்பின்மீதே நெருக்கி தழுவிப் பிடித்து, தன் மேலாடை சிதையும் படி வருதலைக் கண்டு தோழி மகிழ்ந்து கூறியது. சங்கம், சங்கம் மருவிய கால அகப்பாடல் தோழி தலைவியின் இல்வாழ்வினை கூறும் இடத்து, சங்க அகப்பாடலில் தலைவன், தலைவியின் அன்பு வெளிப்பாட்டினையும், சங்கம் மருவிய காலத்தில் அன்பின் வெளிப்பாட்டால் புதல்வனை ஏந்தி வரும் சிறப்பும் சொல்லப்பட்டுள்ளது.

மேற்கூறப்பட்ட தோழிக்கூற்றும் துறையும் சங்கம், சங்கம் மருவிய கால அகப்பாடல்கள் இரண்டிலும் ஒத்துவந்துள்ளமை ஆராயப்பட்டுள்ளன. சங்க இலக்கியத்தில் பயன்படுத்தப்பட்ட பல துறைகள் சங்கம் மருவிய காலத்தில் மாறி வந்துள்ளமை குறிப்பிடத்தக்கதாகும்.

## சங்கம், சங்கம் மருவிய கால அகப்பாடல்களில் தலைவன் கூற்றும் துறையும்

அகத்திணை முதன்மை மாந்தர்களுள் குறைவான பாடல் எண்ணிக்கை கொண்டது தலைவன் கூற்றாகும். தலைவியின் இன்ப வாழ்வே தலைவன் குறிக்கோள் ஆகும். தலைவியைப் பிரிந்து தலைவன் கொள்ளும் வருத்தமும், கார்பருவம் வரும் முன்பாக தலைவியை மகிழ்விக்க விரையும் விரைவும் தலைவன் கூற்று நிகழ்த்துதலுக்கு உரியன. அவை சங்கம், சங்கம் மருவிய கால அகப்பாடல்களில் எவ்வாறு பயின்று வந்துள்ளன என்பது ஆராயப்படுகின்றன.

“சங்க இலக்கியத்தில் 336 பாடல்கள் தலைவன் கூற்றாக அமைந்தவை ஆகும். இவற்றில் மூன்றில் ஒரு பகுதிக்கும் மேலான

கூற்றுக்கள் நெஞ்சிற்குக் கூறுதலாக அமைந்திருக்கிறது. சங்கம், சங்கம் மருவிய கால தலைவன் கூற்று அகப்பாடல் அட்டவணை பின்வருமாறு

| | | | |
|---|---|---|---|
| **சங்க காலம்** | 336 | **சங்கம் மருவிய காலம்** | 39 |
| **தலைவன் நெஞ்சிற்கு உரைத்தது** | 166 | **தலைவிக்கு உரைத்தது** | 03 |
| **தோழிக்கு உரைத்தது** | 19 | **தோழிக்கு உரைத்தது** | 13 |
| **பாங்கற்கு உரைத்தது** | 31 | **பாங்கனுக்கு உரைத்தது** | 10 |
| **தலைவிக்கு உரைத்தது** | 34 | **நெஞ்சுக்கு உரைத்தது** | 10 |
| **பாணற்கு உரைத்தது** | 05 | **தேர்ப்பாகனுக்கு** | 01 |
| **தேர்ப்பாகனுக்கு** | 52 | **பாணனுக்கு** | 02 |
| **பிறகூற்றுக்கள்** | 29 | | |

## தலைவன் பாங்கற்கு உரைத்தல்

தலைவியோடு இன்ப உறவை நீட்டிக்க விரும்பும் தலைவன் தோழியின் துணையை நாடுதல் போலப் பாங்கன் துணையை நாடுவதில்லை. சங்க அகப்பாடலில் தலைவனின் களவை அறிந்தபோது பாங்கன் துணை நிற்பவனாகக் காட்டப்படாமல் அறிவுரைக் கூறுபவனாகவே காட்டப்படுகிறது. சங்க இலக்கியத்தில் தலைவன் பாங்கற்கு உரைத்தல் என்னும் துறையில் அமைந்த பாடல்கள் பெரும்பாலும் தலைவன், தலைவி இயற்கைப் புணர்ச்சியில் மீண்டும் காணப்பெறாமையால் தலைவன் வருந்தி பாங்கனுக்கு உரைப்பதாக உள்ளன. இதனை குறுந்தொகை 72வது பாடலிலும், திணைமொழி ஐம்பது 49வது பாடலிலும் அறியலாம். மேலும் சங்கம், சங்கம் மருவிய கால அகப்பாடல் இரண்டிலுமே தலைவன் பாங்கனிடம் கூறும்போது தலைவியை பார்த்த இடமும், தலைவியின் உறுப்பு வர்ணனையும் கூறி அத்தகு தலைவியின் அழகினால் துன்பம் ஏற்பட்டது எனக் குறிப்பிடப்படுகிறது.

## வினைமுற்றியத் தலைவன் தேர்ப்பாகனுக்கு உரைத்தது

வினைவயிற் பொருட்டு தலைவியைப் பிரிந்து சென்ற தலைவன் வினைமுற்றி மீண்டு வருவான். தலைவியைக் காண பெரிதும் விருப்புமுற்று பாகனை நோக்கித் தன் தேரினை விரைந்து செலுத்தும்படி கூறுவதாக இப்பாடல் அமைகிறது.

**"சாயிறைப் பணைத்தோள் அவ்வரி யல்குல்**
**சேயிழை மாதரை யுள்ளி நோய்விட**
**முள்ளிட் ரூர்மதி வலவ நின்**
**புள்ளியிற் கலிமாப் பூண்ட தேரே"** **(ஐங்.481)**

தேர்ப்பாகனே! பறவை போன்று நிலத்தை தீண்டாத குதிரையைப் பூட்டப்பட்ட நின்னுடைய தேரினை விரைந்து செலுத்துவாயாக ஏனெனில் நுண்ணிய மூங்கிலின் வரிகளை ஒத்த தோள்களையும், சிவந்த அணிகலன்களையும் உடைய பேரழகியான தலைவியை இன்றே சென்று சேர வேண்டும் என்பதை கருத்திற் கொண்டும் பெருந்துயரமானது என்னை விட்டகலும் படி தாற்றுக் கோலைக் குதிரை மேலிட்டு தூண்டி விரைந்து செல்வாயாக எனக் கூறினான். சங்கம் மருவிய காலத்திலும் இத்துறை இடம் பெற்றுள்ளது.

**"நூனவின்ற பாக! தேர் நொவ்விதாச் சென்றீக**
**தேன்வின்ற கான்த் தெழினோக்கித் - தானவின்ற**
**கற்புத்தாள் வீழ்த்துக் கவுண்மிசைக் கையூன்றி**
**நிற்பா னிலை யுணர்கம் யாம்"** **(ஐந்.ஐம்.10)**

நூல் நவின்ற பாகனே! தேன் கூடுகள் மிகுந்த காட்டினது கார் பெயலான் மிகுந்த அழகினைப் பார்ப்பது போல் தலைவன் வரவினை நோக்கி எதிர்பார்த்துக் கொண்டு, தன் சிறு பருவத்திருந்தே பழகி மேற்கொண்ட கற்பினை மனத்தகத்தே அடக்கி மோவாய் மீது தன் இடக்கையினை ஊன்றிய தலைவியினது நிலைமையைச் சென்று

உணரும்படியாக தேரினை விரைந்து செலுத்துவாயாக என பாகனிடம் கூறினான். சங்கம், சங்கம் மருவிய கால அகப்பாடல் இரண்டிலும் இத்துறை இடம்பெற்றிருந்தாலும், சங்கம் மருவிய காலத்தில் மட்டுமே நூல் நவின்ற பாக! என்னும் விளி இடம்பெற்றுள்ளது. வினைமுற்றிய தலைவன் தேர்ப்பாகனுக்கு கூறும் துறையில் தலைவன் தலைவிபால் வைத்து உள்ள அன்பின் வெளிப்பாடு தேரினை விரைந்து செலுத்துவாயாக, என்ற குறிப்பின் மூலம் அறிய முடிகின்றது. தலைவன் மனவேகத்திற்கு தேரினை செலுத்தும்படி கூறி விரைவுப்படுத்துகிறான்.

## தலைவன் தோழியை மதியுடன்படுத்தியது

தோழியின் அறிவுப்போக்கினைத் தலைவன் தனது விருப்பத்தினை நிறைவேற்றிற்குத் தகுதியாக மாற்றல் ஆகும். இயற்கைப் புணர்ச்சி புணர்ந்தபின் வாயில் பெற்ற தலைமகன் பின்னர்த் தலைமகளுந் தோழியும் ஓரிடத்திலிருப்பதையறிந்து மதியுடன்படுப்பான்.

சங்கம் மருவிய கால அகப்பாடல்கள் இரண்டிலுமே தலைவன் தோழியை மதியுடன்படுத்தி தன் விருப்பத்தை நிறைவேற்றும் படி கூறுவதாக உள்ளது.

## பொருள் வலிந்த நெஞ்சிற்கு சொல்லி செலவழுங்கியது

பொருள் காரணமாகப் பிரிகின்ற தலைவன், தன் பிரிவினால் தலைவிக்கு நேரும் மன வருத்தத்தையும், உடல் அழிவும் கருதிப் பார்த்துத் தன் பிரிவாகிய செலவினை தவிர்க்க முயல்வான். தலைவன் தன் பிரிவை தானே தவிர்ப்பதாக அமைவது செலவழுங்குதல் ஆகும். பொருள்கடைக்கூட்டிய நெஞ்சிற்குச் சொல்லியது என்னும் துறையில் அமைந்த பாடல்கள் (குறுந்.63, திணை. நூற்.76) இடம்பெற்றுள்ளன. சங்கம், சங்கம் மருவிய காலத்தில் தலைவன் பிரிய நேர்வதை முகக்குறிப்பினில் அறிந்த தலைவி பாலை நிலத்தின் கொடுமையை எண்ணி கண்ணீர் விடுகிறாள். இத்தகு தலைவியை எவ்வாறு பிரிவது

என்று எண்ணி தலைவன் செலவழுங்குகிறான். இவ்விரண்டும் ஒத்ததன்மை உடையனவாக உள்ளன.

சங்க அகப்பாடல்களில் தலைவன் கூற்றுப் பாடல்கள் 344 இடம்பெற்றுள்ளன. சங்கம் மருவிய காலத்தில் 39 பாடல்கள் மட்டுமே இடம் பெற்றுள்ளன. சங்க இலக்கிய தலைவன் கூற்றில் பயன்படுத்தப்பட்டுள்ள பல்வேறு துறைகள் சங்கம் மருவிய காலத்தில் இடம் பெறவில்லை. சிலதுறைகள் புதிதாகவும் இடம் பெற்றுள்ளன. திணைமாலை நூற்றைம்பதில் (150) ஆம் பாடலின் "புணர்ந்து மகிழ்ந்து பாணனிடம் கூறியது" என்னும் துறை இடம்பெற்றுள்ளது. இத்துறை சங்கம் அகப்பாடலில் இடம் பெறவில்லை. மேலும் திணைமாலை நூற்றைம்பது முப்பதாவது பாடலில் பகற்குறிக்கண் இடம்காட்டியது போன்ற துறைகள் புதிதாக இடம்பெற்றுள்ளது.

**சங்கம், சங்கம் மருவிய கால அகப்பாடல்களில் பிறர் கூற்றும், துறையும்**

அகவாழ்வில் பிற மாந்தர்களாகிய செவிலி, நற்றாய், பாங்கன், காமக்கிழத்தி, விறலி, போன்றோர் கூற்று இடம் பெற்றுள்ளன. இவை சங்கம், சங்கம் மருவிய கால அகப் பாடல்களில் அமைந்துள்ள பாங்கு ஒப்பிட்டு ஆராயப்படுகின்றன. அப்பாடல் அட்டவணை பின்வருமாறு

| **சங்க இலக்கியம் (133)** | **சங்கம் மருவிய காலம் (21)** |
|---|---|
| **செவிலிக் கூற்று (27)** | **செவிலிக் கூற்று (02)** |
| **நற்றாய் கூற்று (27)** | **நற்றாய் கூற்று (07)** |
| **பரத்தை கூற்று (42)** | **பாங்கன் கூற்று (03)** |
| **பாங்கன் கூற்று (03)** | **கண்டோர் கூற்று (04)** |
| **பாணன் கூற்று (05)** | **விறலி கூற்று (01)** |
| **கண்டோர் கூற்று (16)** | **காமக்கிழத்தி கூற்று (01)** |
| **பிற வாயில்கள் கூற்று (13)** | **வாயில்களுக்கு கூற்று (01)** |
| | **அறிவர் கூற்று (01)** |
| | **தலைவனுக்கு பாங்காயினார் (01)** |

சங்க இலக்கிய பிறர்க்கூற்றுப் பாடல்கள் நூற்றிமுப்பத்து மூன்று (133) இடம் பெற்றுள்ளன என **ஆ. இராமகிருட்டிணன்** குறிப்பிடுகிறார், **(அகத்திணை மாந்தர் ஓர் ஆய்வு : பின் இணைப்பு)**

**மகட்போக்கிய நற்றாய் கூறல்**

தலைவனையும், தலைவியையும் இணைக்கும் உறவாக தோழி இருப்பதைப் போல், தாய்க்கு செவிலி விளங்குகிறாள். தலைவியால் நேரடியாக கூற இயலாத களவொழுக்கத்தை தோழி அறத்தொடு நின்று செவிலிக்கு உரைப்பது போன்று, செவிலியும் தோழி கூறியதனை அறத்தொடு நின்று தாய்க்கு உரைக்கின்றாள். தலைவியின் பிரிவுத்துயரைத் தன்னுடையதாக எண்ணி தோழி புலம்புதல் போன்றே மகட்போக்கிய (நற்றாய்) மனநிலையை செவிலி வெளியிடக் காணலாம். தொல்காப்பியர் களவில் நற்றாய் கூற்று நிகழ்வதாகக் குறிப்பிடவில்லை.

**"ஏமப் பேரூர்ச் சேரியும் சுரத்தும்**
**தாமே செல்லும் தாயரும் ஊரே" (தொல்.அகத்.37)**

என்னும் நூற்பாவில் தாயர் என பன்மைப்படுத்திக் கூறியமை, மனைக்கு வெளியே சென்று தேடிய தாயைச் செவிலி எனப் பாகுப்படுத்த காரணமாக இருந்திருக்கலாம். மகட்போக்கிய நற்றாய் இல்லிருந்து புலம்புவதாக பாடல்கள் அமையப் பெற்றுள்ளன.

**"பாலும் உண்ணாள், பந்துடன் மேவாள்**
**……………………………………………**
**கழைதிரங்கு ஆர்இடை அவனொடு செலவே" (குறுந்.396)**

தலைவியானவள் பாலையும் பருகாதவளாய், பந்தினை விரும்பாது, தோழியர் கூட்டத்தோடு இறையறாது விளையாடும் இயல்புடைய என் மகள் ஓமை மரத்தை மருப்பினால் குத்தி ஏந்தும் மருப்பை உடைய யானை மலையிடத்து முழங்கும் வெப்ப மிகுந்த பாலை நிலத்தின்

வழியே செல்ல எவ்வாறு துணிந்தாளோ என நற்றாய் வருந்தினாள். சங்கம் மருவிய கால அகப்பாடலிலும் இத்துறை இடம் பெற்றுள்ளது.

**“ஏற்றிய வில்லி னெயினர் கடுஞ்சுரம்**
**பாற்றினஞ் சேரப் படுநிழற் கண்டஞ்சிக்**
**கூற்றின வல்வில் விடலையோ டென்மக**
**ளாற்றுங் கொ லைய நடந்து”           (திணை.ஐம்.20)**

தலைவனோடு சென்ற தலைவியாகிய என் மகள், வளைத்த வில்லினை உடைய வேட்டுவர் வாழும் கொடி பாலையின் கண்ணே பருந்துகள் ஒன்றாகப் பறக்கும், அத்தகு நிழலைக் கண்டு அச்சமுறுவாள். அவள் கூற்றுவனை ஒத்த வலிய வில்லுடைய காளையாகிய தலைவனோடு நடந்து சென்றதை எண்ணி நற்றாய் புலம்பினாள். மேலும்,

**“பாவையும், பந்தும் பவளவாய்ப் பைங்கிளியு**
**மாயமு மொன்று மிவைநினையாள் பால்போலு**
**மாய்ந்த மொழியினான் செல்லுங்கொல் காதலன்பின்**
**காய்ந்து கதிர்தெறூஉங் காடு           (ஐந்.ஐம்.33)**

பாலினைப் போன்ற ஆராய்ந்த மொழிகளை உடைய தலைவி தன் தலைவனின் பின்னால், சூரியனால் வெப்பத்தை மிகுவிக்கும் பாலை நிலத்தின் வழியே விளையாட்டிற்குரிய பொம்மையும், பவளம் போன்ற வாயினைக் கொண்ட பச்சைக் கிளிளையும், தோழியர் கூட்டத்தையும் நினைக்காதவளாய் எவ்வாறு சென்றாளோ என்று நற்றாய் வருந்திப் புலம்பினாள். சங்கம், சங்கம் மருவிய கால அகப்பாடல்கள் இரண்டிலுமே இத்துறை இடம் பெற்றுள்ளது. உடன் போக்கு சென்ற தலைவியை நினைத்து வருந்தும் நற்றாய் கூற்றில் தலைவியின் மென்மைப் பண்பும், அவளின் விளையாட்டு பொருட்களையும் விட்டு நீங்கிச் சென்றமையை குறிப்பிடப்படுகிறது. பாலைநிலத்தில் கொடுமை சுட்டப்படுகிறது. சங்கம், மருவிய காலத்தில் தலைவி உடன்போக்கு

சென்ற தலைவனைக் கூற்றின வல்வில் விடலையோ என நற்றாய் குறிப்பது அவளின் கோபத்தை குறிப்பிடுவதாக உள்ளது. சங்கம், சங்கம் மருவிய கால அகப்பாடல்கள் இரண்டிலுமே தலைவி உடன் போக்கு சென்றபின் மனையில் இருந்து வருந்துதலும், தலைவியின் கடந்த கால நினைவுகளையும், விளையாட்டுத்தனங்களையும் காட்சிப்படுத்தி வருந்துதலும் இடம் பெற்றுள்ளன.

### தலைவி இல்லற இயல்பைக் கண்டு மகிழ்ந்து செவிலி நற்றாய்க்கு உரைத்தது

தலைவனும், தலைவியும் இல்லறம் நடத்தும் மனைக்குச் சென்று மீண்ட செவிலித்தாய் அவர்கள் வாழ்க்கைச் சிறப்பை நற்றாய்க்குக் கூறியது. நம் மகள், மலர்கள் கமழும் முல்லை நிலத்தே அழகிய சிற்றூரின் கண்ணே தலைவனோடு இனிதே வாழ்கிறாள். அத் தலைவனோ அரசன் ஏவல் பெற்று வினைமேற் சென்றாலும் ஆண்டு தங்கி வருதலை அறியாது, விரைந்து தலைவியோடு உறையும் பேரன்பு மிக்கவனாய் உள்ளான் என்று செவிலி நற்றாயிடம் கூறினாள். இத்துறை சங்கம் மருவிய கால அகப்பாடலிலும் இடம் பெற்றுள்ளன.

**“தேங்கமழ் பொய்கை யகவய லூரனைப்**
**பூங்கட் புதல்வன் மிதித்துடிக்க – வீங்குத்**
**தளர்முலை பாராட்டி யென்றுடைய பாவை**
**வளர்முலைக் கண்ஞமுக்கு வார்”** **(ஐந்.எழு.45)**

மருதநிலத் தலைவனானவன் அழகிய கண்களை உடைய மகன் கால்களால் உதைத்து சிதைக்க மகப் பெற்றமையால் நெகிழ்ந்த முலைகளை உடைய தலைவியை விரும்பி மகிழ்ச்சியோடு உள்ளார் என செவிலி நற்றாயிடம் கூறினாள். சங்கம், சங்கம் மருவிய கால அகப்பாடல் இரண்டிலுமே தலைவியின் இல்லற இயல்பின் சிறப்பும், தலைவன், தலைவியின் மேல் கொண்டுள்ள பேரன்பும் வெளிப்படுவதைத் செவிலி நற்றாயும் கூறி மகிழ்கிறாள். மகட்போகிய செவிலிக் கூற்று

சங்கம் மருவிய கால அகப்பாடலில் இடம் பெறவில்லை. மாறாக செவிலி குராவொடு புலம்பியதும், தலைவியின் இல்லறச் சிறப்பினைக் கூறுதல் மட்டுமே இடம்பெற்றுள்ளது.

**பாங்கன் கூற்று**

தலைவன் மெலிவுகண்டு ஒருத்தி என் நெஞ்சம் கொண்டாலானக் கூற, அவளை நீயும் சென்று காண்பாயாக எனக் கூற குறிவழியே சென்று பாங்கன் சொல்லியது எனும் துறையில் அமைந்த பாடல்கள். திணைப்பயிர் செய்பவராகிய மலைநாட்டாரின் தங்கையின் பெரிய அகன்ற கண்களை பார்த்த தலைவன் அங்கிருந்து இங்கு வர எப்பாடுபட்டானோ, என வியந்து அவ்வாறு வந்த தலைவன் மலைப் போன்ற நிலைத்த நெஞ்சினன் ஆவான் எனக் கூறினான். சங்கம், சங்கம் மருவிய கால அகப் பாடல்கள் இரண்டிலுமே பாங்கனால் தலைவி காண்போர் வியக்கும் அழகு கொண்டவளாக உரைக்கப்படுகிறாள். அத்தகு தலைவியை கண்டு திரும்பி வந்த தலைவன் மனதின் உறுதிப்பாடும் சுட்டப்படுகிறது.

**இடைச் சுரத்து கண்டோர் செலவு விலக்கியது**

தலைவன், தலைவியை உடன்போக்கு அழைத்துச் சென்ற காலத்தே கண்டோர் கூறியது.

> **“பையங்காய் நெல்லி பலவுடன் மிசைந்து**
> **செங்கான் மராஅத்த வரிநிழ லிருந்தோர்**
> **யார் கொ லளியர் தாமே வார்சிறைக்**
> **குறுங்கான் மகன்றி லன்ன**
> **வுடன்புணர் கொள்கைக் காத லோரே”** (குறுந்.381)

தலைவனும், தலைவியும் பசுமையான நெல்லிக் காய்கள் பலவற்றையும், சிவந்த அடியினை உடைய மராமரத்தின் கீழ் உண்டு கொண்டிருந்தனர். இம் மேன்மக்களை காண்பதற்கு நீண்ட சிறகுகளையும்

குறிய கால்களையும் உடைய மகன்றிற் பறவையின் காதற் கேண்மையை ஒத்துள்ளது. மேன்மக்களாகிய இவர்கள் நெல்லிக்கனியை உண்டு இவ்விடம் வீற்றிருப்பது காணுதற்கு இரக்கப்படுவதற்குரியதாக உள்ளது. இத்துறை சங்கம் மருவிய காலத்திலும் இடம் பெற்றுள்ளது.

**“அந்த நெடிய அழற் கதிரோன் செம்பாக**
**மத்தமறைந்த தானிவ் வணியிழையோ – டொத்த**
**தகையினா லெஞ்சீறூர்த் தங்கினிராய் நாளை**
**வகையினராய்ச் சேறல் வனப்பு”** **(திணை.நூற்.69)**

இப்பாலை நில வழியானது நீண்டனவாயுள்ளன. அம் மலையின் கண்ணே, நெருப்பினைப் போன்ற கதிர்களை உடையவனாகிய பகலவன், பாதியளவு மறைந்து விட்டது. எனவே தலைவியோடு இச்சிற்றூரின் கண்ணே இன்று தங்கி மறுநாள் இவ்விடம் விட்டு நீங்கீப் போதல் நன்று எனக் கண்டோர் கூறினர். சங்கம், சங்கம் மருவிய கால அகப்பாடல்கள் இரண்டிலுமே தலைவன், தலைவியின் உடன்போக்கின் போது கண்டோர் கூற்று நிகழ்த்தப்படுகிறது. பெரும்பாலும் உடன் போக்கு தடுத்து நிறுத்தியதற்கான குறிப்புகள் இடம்பெறவில்லை. மேலும் செவிலி எதிர்பட்டுக் கண்டோர் கூறுதல், செவிலியை கண்டோர் சொல்லி ஆற்றுவித்தல் என்னும் துறைகளிலும் கண்டோர் கூற்று இடம் பெற்றுள்ளது.

## தொகுப்புரை

- ❖ சங்கம் மருவிய கால அகநூல்களான ஐந்திணை ஐம்பது நூலில் மட்டுமே தொல்காப்பிய திணை வைப்பு முறையான முல்லை, குறிஞ்சி, மருதம், நெய்தல் என அமைந்துள்ளது. தொல்காப்பியர் சுட்டாத பாலைத்திணை மருதத்திணைக்கு அடுத்ததாக அமைந்துள்ளது.

- ❖ சங்கம் மருவிய கால அகநூல்களின் அமைப்பு முறை பெரும்பாலும் ஐங்குறுநூறு நூலுடன் ஒத்துள்ளது. திணைக்குப் பத்துப்பத்தாக பாடும் மரபு இங்கிருந்தே தொடங்கியிருக்க வேண்டும்.

- ❖ ஐங்குறுநூற்றில் இடம் பெற்றுள்ள இளவேனிற் பத்திற்கு இணையாக சங்கம் மருவிய கால அகநூலான கார்நாற்பதின் வினைமேற் சென்று திரும்பும் தலைவன் பாகனோடு விரைந்து மீளுதல் என்னும் துறை உள்ளது.

- ❖ சங்க இலக்கியத்தில் தலைவி கூற்றில் இரவுக்குறி பற்றிய பாடல்கள் குறிஞ்சித்திணைக்கு உரியதாகும். சங்கம் மருவிய காலத்தில் நெய்தல் திணையிலும் இடம்பெற்றுள்ளது.

- ❖ வரைவிடை வைத்துப் பொருள்வயிற் பிரிதல் என்னும் துறையில் தலைவியின் பிரிவாற்றாமை கருப்பொருளின் வழியாகவும், குறிப்பாகவும் சுட்டப்படுகிறது. சங்கம் மருவியகாலத்தில் இத்துறைச் சார்ந்த பாடல்களில் தலைவியின் வருத்தம் வெளிப்படையாக உள்ளது.

- ❖ பிரிவிடை ஆற்றாள் எனக்கவன்ற தோழிக்கு தலைவி கூறல் என்னும் துறையில் அமைந்த பாடல்களில் பிரிந்து சென்ற தலைவன் பாலை நிலத்தில் காணும் அஃறிணை உயிர்களின்

அன்பின் வெளிப்பாடு கண்டு விரைவில் வருவான் என்பது சங்கம், சங்கம் மருவிய கால அகப்பாடல்களில் சுட்டப்படுகின்றன.

- தலைவி வாயில்களுக்கு வாயில் மறுத்தல் என்னும் துறையில் அமைந்த பாடல்கள், தலைவன் தலைவியின் மேல் கொண்ட அன்பு மிகுதியும், தலைவனின் இழிவான பரத்தமை கண்டிக்கப்படுதலும் கொண்டு அமைந்துள்ளன.

- மருதத்திணை பாடல்கள் பெரும்பான்மை ஊடலையும், பரத்தமையையும் முன்னிலைப்படுத்தி உரைக்க சங்கம் மருவிய கால ஐந்திணை எழுபது பாடல் ஒன்றில் புதல்வனைப் பெற்ற தலைவயோடு, தலைவன் மகிழ்ந்து சிறப்பு செய்வதாக அமைவது சங்க இலக்கியத்தில் இருந்து மாறுபட்டதாக காணப்படுகிறது.

- பிரிவிடை வற்புறுத்தும் பாணர்க்குக் கூறல் என்னும் துறை சங்க இலக்கியத்தில் இடம்பெற்றுள்ளது. இத்துறை சங்கம் மருவிய காலத்தில் இடம் பெறவில்லை.

- தலைவன் புறத்தொழுக்கத்தினை தலைவி தோழிக்குச் சொல்லியது என்னும் துறை சங்க இலக்கியத்தில் இடம்பெறவில்லை. இத்துறை சங்கம் மருவிய காலத்தில் இடம் பெற்றுள்ளது.

- ‘தலைவி, தலைவனுக்கு வாயில் நேர்தல்’ துறை சங்க இலக்கியத்தில் இடம்பெற்றுள்ளது. இத்துறை சங்கம் மருவிய காலத்தில் இடம்பெறவில்லை.

- சங்கம், சங்கம் மருவிய கால அகப்பாடல்கள் இரண்டிலும் குறைநயத்தல் என்னும் துறை தலைவனின் புணர்ச்சி விருப்பத்தை வெளிப்படுத்துவதாக உள்ளது.

- பருவங் கண்டழிந்த தலைவி தோழிக்கு கூறியது என்னும் துறையில் அமைந்த பாடல்களில் களவில் ஆற்றுவிக்கும் போது

தலைவன் வருவான் என்றும், கற்பில் ஆற்றுவிக்கும் போது பருவத்தைக் கூறி விரைவில் வருவான் என்றும் கூறப்படுகிறது.

❖ சங்கம், சங்கம் மருவிய கால அகப்பாடல்கள் இரண்டிலுமே தலைவன் பாங்கனுக்கு உரைத்தல் என்னும் துறையில் தலைவியை சந்தித்த இடமும், தலைவியின் உறுப்பு வர்ணனையும், சொல்லப்படுகிறது.

❖ வினைமுற்றியத் தலைவன் தேர்ப்பாகனுக்கு உரைத்தது என்னும் துறையில் தேர்ப்பாகனை அழைக்கும் போது நூல்நவின்றபாக என்னும் விளி இடம் பெற்றுள்ளது. இது சங்க இலக்கியத்தில் இடம் பெறாதது.

❖ சங்க இலக்கியத்தில் இடம் பெறாத படைத்துமொழிக் கிளவி என்னும் புதிய துறை சங்கம் மருவிய காலத்தில் இடம்பெற்றுள்ளது.

❖ சங்க அகப்பாடல் எழுதப்பட்ட பிறகு துறை பகுத்து பாடல்கள் பொறுத்தப்பட்டுள்ளமையால் அவை ஒத்த தன்மை உடையனவாக இருந்திருக்கலாம் என எண்ணத் தோன்றுகிறது. சங்கம் மருவிய காலத்தில் ஒரு துறையின் கீழ் பாடல்களை பகுத்து விளக்க இயலவில்லை. துறை ஒன்றாக இருந்தாலும், அவை சொல்லப்படும் சூழல் பல கோணங்களில் மாறுபடுகின்றன.

❖ சங்க அகப்பாடல்களில் தோழி தலைவனுக்கு உரைக்கும் பாடல்களே அதிகம். சங்கம் மருவிய காலத்தில் தோழி தலைவிக்கு உரைக்கும் பாடல்களே அதிகம்.

❖ சங்க அகப்பாடலில் தோழி கூற்று பாடலில் கையாளப்படும் உவமை, குறிப்பு, உள்ளுறை சங்கம் மருவிய காலத்தில் மிகக் குறைவாகவே உள்ளது.

- சங்க இலக்கியத்தில் இடம் பெறாத விறலிக் கூற்று, வாயில் கூற்று, அறிவர் கூற்று, சங்கம் மருவிய காலத்தில் இடம்பெற்றுள்ளது. இக்கூற்றுகள் அனைத்தும் திணைமாலை நூற்றைம்பதில் மட்டுமே இடம்பெற்றுள்ளன.

- சங்க அகப்பாடலில் தலைவன் கூற்றில் உள்ள பாடல்கள் மிகுதியாக பாலைத்திணையைச் சார்ந்தும், சங்கம் மருவிய காலத்தில் குறிஞ்சித்திணைச் சார்ந்தும் இடம்பெற்றுள்ளன. ஐந்திணை எழுபது, கைந்நிலை போன்ற நூல்களில் தலைவன் கூற்றுப் பாடல்கள் இடம்பெறவில்லை. சங்க அகப்பாடலில் பெரும்பான்மையானப் பாடல்கள் தலைவன் நெஞ்சிற்கு உரைத்தது (166) ஆகும். சங்கம் மருவிய காலத்தில் தலைவன் தோழிக்கு உரைத்த (13) பாடல்களே அதிகம். சங்க அகப்பாடலில் தலைவன் தன் நெஞ்சிற்கு சொல்லும் துறைகள் எல்லாம், சங்கம் மருவிய காலத்தில் தோழியிடம் சொல்லியதாக உள்ளது. சங்க இலக்கியத்தில் இடம் பெற்றுள்ள பிரிவுகள் சங்கம் மருவிய காலத்தில் இடம்பெறவில்லை. ஓதல், பகை, தூது, வேந்தற்குற்றுழி பிரிவு, காவல், போன்ற பிரிவுகுறித்த பாடல்கள் இடம் பெறவில்லை. பரத்தையற் பிரிவும், பொருள் வலித்த நெஞ்சிற்கு செலவழுங்கியது பற்றி மட்டுமே இரண்டு பாடல்கள் இடம்பெற்றுள்ளன.

இயல்-2

# சங்கம், சங்கம் மருவிய கால அகப்பாடல்களில் முதல், கரு, உரிப்பொருள்

அகத்திணைக்குரிய பாடல்களில் முதற்பொருள், கருப்பொருள், உரிப்பொருள் ஆகிய முப்பொருள்களுள் நிலமும், பொழுதும் முதற்பொருளாகும். தெய்வம், உணவு, மா, மரம், புள், பறை, தொழில், யாழ் முதலியன கருப்பெருள்கள் ஆகும். புணர்தல், பிரிதல், இருத்தல், இரங்குதல், ஊடல் ஆகியன உரிப்பொருள்கள் ஆகும். இவை சங்கம், சங்கம் மருவிய கால அகப்பாடல்களில் எவ்வாறு பயின்று வந்துள்ளன என்பவை ஒப்பிட்டு ஆராயப்படுகின்றன.

## முதற்பொருள்

தொல்காப்பியர் அகப்பொருள் மாந்தர்களின் வாழ்வினைக் கூறும் போது உலகோர் அறியும் வண்ணம் முதற்பொருள் கருப்பொருள், உரிப்பொருள் என்ற மூன்றையும் அடிப்படையாகக் கொண்டு சுட்டுகிறார். இதனை,

**“முதல், கரு, உரிப்பொருள் என்ற மூன்றே**
**நுவலுங் காலை முறை சிறந்தனவே**
**பாடலும் பயின்றவை நாடுங் காலை” (தொல்.அகத்.03)**

என்றும், முதற்பொருள் என்பது நிலமும், பொழுதும் ஆகும். இதனை,

**“அவற்றுள்**
**முதலெனப்படுவது நிலம், பொழுது இரண்டின்**
**இயல்பெனமொழிப இயல்புணர்ந் தோரே” (தொல். அகத்.14)**

நிலத்தைக் குறிஞ்சி, முல்லை, மருதம், நெய்தல் என நான்கு வகையாகப் பிரிப்பது தமிழ் இலக்கிய மரபாகும். இம்மரபினை ஒட்டியே உலகத்தை, நானிலம்’ என்ற சொல்லால் குறிக்கின்றனர். நிலத்தை

நான்கு பிரிவுகளாகத் தனித்தனியே நோக்கி வருணித்ததோடு, நிலவுலகம் முழுவதையும் ஒன்றாக நோக்கிய காட்சிகள் சங்க இலக்கியத்தில் காணப்படுகின்றன.

**தொல்காப்பியத்தில் நிலம்**

தொல்காப்பியத்தில் ஆறு இடங்களில், திணை என்னும் சொல் நிலத்தினை உணர்த்தி வருகின்றது. அவை

**"பல்லோர் குறித்த திணைநிலைப் பெயரே"**

**(தொல்.சொல்.11)**

**"திணையொடு பழகிய பெயரலங் கடையே"**

**(தொல்.சொல்.43)**

**"நடுவுநிலைத் திணையே நண்பகல் வேனிலோடு"**

**(தொல்.அகத்.11)**

**"பெயரும் வினையுமென்(று) ஆயிரு வகைய**
**திணைதொறும் மரீஇய திணைநிலைப் பெயரே"**

**(தொல்.அகத்.22)**

**"ஆயர் வேட்டுவர் ஆடுஉத் திணைப் பெயர்"**

**(தொல்.அகத்.22)**

**"ஆனா வகைய திணைநிலைப் பெயரே"**

**(தொல்.அகத்.24)**

என உணர்த்தப்படுகிறது.

**நிலம்**

மனித வாழ்க்கையின் ஒழுகலாறுகள் நிகழ்வதற்கு அடிப்படையாக அமைவது நிலமே. ஒரு நிலத்தின் ஒழுக்கம் அதன் காலத்தை

அடிப்படையாகக் கொண்டு அமையும். எனவே, நிலம், பொழுது இவ்விரண்டையும் முதற்பொருள் என்கிறார் தொல்காப்பியர். ஒரு திணைக்கு நிலம் மட்டுமே மாறுதல் இல்லாத முதன்மைக் கூறு. இதனாலேயே காலத்தை விடவும் நிலத்திற்கு முதன்மைத் தரப்பட்டுள்ளது.

**முதற்பொருள்**

சங்க இலக்கியங்களுள் முதற்பொருளில் நிலம் பற்றிய பல்வேறு சொற்கள் சங்கப் புலவர்களால் எடுத்துரைக்கப்பட்டுள்ளன. ஆனால் பொழுது பற்றிய சொற்கள் பலவாகக் குறிக்கப்படவில்லை. இந்நிலையில் சங்க இலக்கியங்களில் காணப்படும் நிலம் பற்றிய சொற்களும், சங்கம் மருவிய காலத்து நிலம் பற்றிய சொற்களும் ஒப்பாய்வு செய்யப்படுகின்றன.

**“மாயோன் மேய காடுறை யுலகமும்**
**சேயோன் மேய மைவரை யுலகமும்**
**வேந்தன் மேய தீம்புனல் லுலகமும்**
**வருணன் மேய பெருமண லுலகமும்**
**முல்லை, குறிஞ்சி, மருதம், நெய்தலெனச்**
**சொல்லிய முறையால் சொல்லவும் படுமே” (தொல்.பொருள்.05)**

இந்நூற்பாவில் **“தெய்வத்தின் அடிப்படையிலும், திணைப்பெயர் அடிப்படையிலும், நில அடிப்படையிலும்”** என மூவகையாகக் நிலங்களுக்குப் பெயர்கள் சுட்டப்படுகின்றன.

**குறிஞ்சி நில வருணனைகள்**

**மலை**

மலையையும் யானையையும் இணைத்து உவமைக் காட்சியாக குறிப்பிடும் இடங்கள் சங்க இலக்கியத்தில் பல உண்டு. மதம்

கொண்ட யானையின் கவுள், அருவி கொட்டும் உச்சி மலைக்கு உவமையாக,

**“கடாஅ யானைக் கவுள்மருங்கு உறழ**
**ஆம்ஊர்பு இழிதரு காமர் சென்னி”** **(அகம்.205)**

எனும் பாடல் வழி சுட்டப்படுகிறது.. மலைக் குன்றானது பிடியினை அடுத்து நிற்கும் களிறு போல் தோன்றுவதாக,

**“பிடிமிடை களிற்றின் தோன்றும்**
**குறுநெடுந் துணைய குன்றம்”** **(அகம்.99)**

என்றும், பொன்னாலான அணி பல சூடிப் பொலியும் யானை போல் பொன்னிற மலர்கள் பூத்துக் குலுங்கும் எழில் கொண்ட மலையை,

**“தண்ணறுங் கோங்கம் மலர்ந்த வரையெல்லாம்**
**பொன்னணி யானைபோல் தோன்றும்”** **(கலித்.42)**

என்றும் வருணிப்பர்.

மாலைப் பொழுதானது வந்தது. இருளானது போர்வையைப் போன்று பரப்பி மலையை மூடிற்று. அத்தகு இன்பம் தரும் மாலைப் பொழுதில் சிறிது, சிறிதாய் மறையும் மலை ஆழ்கடலில் மூழ்கிடும் என்பதை,

**“ஆடுமழை தவழும் கோடுயர் நெடுவரை”** **(நற்.385)**

**“மழைவினை யாடும் வளம்கெழு சிறுமலை”** **(நற்.353)**

**“கொண்டல் அவரைப் பூவின் அன்ன**
**வெண்தலை மாமழை சூடித்**
**தோன்றல் ஆனா... மணிநெடுங்குன்று”** **(ஐங்.209)**

**“தெண்டிரைக்**

**கடல்ஆழ் கலத்தின் தோற்றி**

**மாலை மறையும்.....மணி நெடுங்குன்று”** **(குறுந்.240)**

என்பர். உயர்ந்திருக்கும் மலையை,

**“வானுற நிவந்த பெருமலை”** **(நற்.53)**

**“விண்தொட நிவந்த விலங்குமலை”** **(குறுந்.262)**

**“வான்புகு தலைய குன்றம்”** **(அகம்.201)**

என்றும் வருணித்துள்ளனர். கரிய நிறத்தையும், பெருமிதமான தோற்றத்திற்கு உரிய மலையை யானையோடு உவமித்துப் பாடுவது சங்க பாடலில் மரபாக உள்ளது. மலையில் உள்ள பாறைகள் உறங்கும் பெண்யானைகள் போலக் காணப்படுகின்றன.

**“பிடிமடிந் தன்ன குறும்பொறை**

**பிடிதுஞ்சு அன்ன அறை”** **(கலித்.108)**

நீண்ட நாட்களாக மழை பெய்யாத பாறை மீது மண்படிந்து தூசியாக இருக்கும் காட்சியை யானை போல் இருப்பதை மருதனிளநாகனார்,

**“மழைகழூஉ மறந்த மாயிருந் துறுகல்**

**துகள்சூழ் யானையின் பொலியத் தோன்றும்”** **(குறுந்.297)**

என்கிறார் மருதனிளநாகனார். இதனை கபிலரும்,

**“மாசறக் கழீஇய யானை போலப்**

**பெரும்பெயல் உழந்த இரும்பிணர்த் துறுகல்”** **(குறுந்.13)**

என்று குறிப்பிடுகின்றார்.

**சுனை**

சுனைகளைப் பற்றிய வருணனை பல இடங்களில் வந்துள்ளது. தேன் ஊற்றி வைத்த அழகிய கலம் போல் காணப்படும். இடுகிய வாய் உடைய சுனை என்பதை,

**"மட்டம் பெய்த மணிக்கலத் தன்ன**
**இட்டுவாய்ச் சுனை" (குறுந்.193)**

என்றும், வெட்டி வைத்த நுங்கு போல் காணப்படுகிறது. சுனை,

**"நுங்கின்**
**தடிகண் புரையும் குறுஞ்சுனை" (கலி.108)**

என்றும் குறிப்பிடுகின்றனர்.

**அருவி**

குறிஞ்சி நிலத்தில் உள்ள அருவியின் தோற்றம் குறித்த வர்ணனையை பலப் பாடல்களில் காணலாம்.

**"தூவெள்ளருவி" (குறுந்.235)**

**"வயங்கு வெள்ளருவி" (அகம்.202)**

**"வாளிலங் கருவி" (அகம்.478)**

**"விட்டொளிர் அருவி" (அகம்.287)**

முதலான தொடர்கள் அருவியின் தூய்மையான வெண்ணிறத்தைக் காட்சிப்படுத்துகின்றன. எழுந்து பொங்கிவிழும் அருவியின் பெருமிதத் தோற்றத்தினை,

**"எழுந்து வீழ் அருவி" (நற்.228)**

என்னும் வரி உணர்த்துகின்றது. அருவியின் ஓசை பல இடங்களில் காணலாம். போர்ப்பறை முழக்கம் போல் அருவி ஒலி இருப்பதாகவும், மலைப் பகுதியில் ஓடும் தேரின் ஒலி அருவி ஒலிபோல் இருப்பதாகவும்.

**"கற்பால் அருவியின் ஒலிக்கும் நற்றேர்" (அகம்.134)**

குறிப்பிடுகின்றன.

**சங்கம் மருவிய காலத்தில் குறிஞ்சி நிலம்**

சங்கம் மருவிய காலத்தில் குறிஞ்சிநிலம் பற்றிய வர்ணனைகளில் பெரும்பான்மையும் மலை பற்றிய குறிப்புகளே இடம் பெற்றுள்ளன. சான்றாக,

**"பொன்னினர் வேங்கை கவினிய பூம்பொழிலு**
**நன்மலை நாட" (ஐந்.ஐம்.11)**

பொன்னிறம் போன்ற வேங்கை மலர்கள் பூத்திருக்கும் நல்ல மலை நாட்டு தலைவன் என்றும்,

**"மால்வரை வெற்ப" (ஐந்.ஐம்.12)**

பெரிய மலைநாட்டுக்குரிய தலைவன் என்றும்,

**"மஞ்சிவர் சோலை வளமலைநாடன்" (ஐந்.ஐம்.17)**

என்றும் மலை பற்றிய குறிப்புகளைக் காணமுடிகிறது.

**"கொல்லைப் புனத்த வகில் சுமந்து கல்பாய்ந்து**
**வானி னருவி ததும்பக் கவினிய"**

மழை பெருக்கெடுத்ததினால் நீர்வீழ்ச்சியானது மலையில் இருந்து இறங்கிச் சென்று தோட்டமாகிய தினைப் புனத்தின் கண்ணே அகில்

கட்டைகளை எங்கும் நிரப்பும் அழகுடைய மலைநாட்டுத் தலைவன் என்றும்,

**"மன்றப் பலவின் சுளைவிளை தீம்பழ**
**முண்டுவந்து மந்தி முலைவருடக் - கன்றமர்ந்த**
**தாமா சுரக்கு மணிமலை நாடன்" (ஐந்.எழு.04)**

குரங்கானது மன்றின்கண் நின்றுள்ள பலாமரத்தின் பலாச்சுளைகள் முதிர்ந்த தித்திப்பான பழத்தினை உண்டு நீர்வேட்கைக்காக கீழிறங்கி வந்து, அம்மரத்தின் அடியில் தங்கியுள்ள காட்டுப்பசுக்களின் பால் உள்ள மடியை தடவிகொடுக்க, கன்றிடத்து ஏற்பட்ட அன்பால் பால் சுரக்கும் படியான இயற்கைக் காட்சிகள் மிக்க மலைநாடன் என்றும்,

**"புகழ்மிகு சாந்தெறிந்து புல்லெரியூட்டிப்**
**புகை கொடுக்கப் பெற்ற புலவோர் துகள் பொழியும்**
**வானுயர் வெற்ப" (திணை.ஐம்.01)**

நறுமணம் மிக்க சந்தன மரங்களை வெட்டி நெருப்பு வைத்ததினால் புகை மணமானது விண் வெளியில் உயர்ந்து காணப்படும் மலைநாட்டுத் தலைவன். மேலும்,

**"விறன்மலை நாட" (திணை.ஐம்.02)**

என்றும் மலை பற்றிய வருணனைகள் அமைகின்றன.

**"வருக்கை வளமலை நாட" (திணை. நூற்.14)**

**"நாள்வேங்கை பொன்விளைவு நன்மலை நாட!" (திணை.நூற்.20)**

**"முறிகிளர் நன்மலை நாடன்!" (கைந்.11)**

**"புரைதீர் மலைநாடன்" (கைந்.06)**

என மேற்கூறப்பட்ட பாடல் வரிகள் அனைத்திலும் மலைவளமே சுட்டப்படுகிறது. நிலம் முதன்மைப்படுத்தப்படும் அனைத்திலும் தலைவன் விளிக்கப்படுகிறான். சங்கம் மருவிய கால அகப்பாடல்களில் பெரும் பான்மையாக நிலம் தலைவனோடு தொடர்புபடுத்தியே சுட்டப்படுகின்றது என்பது குறிப்பிடத்தக்கதாகும்.

**அருவி**

சங்கம் மருவிய காலத்தில் அருவி பற்றிய குறிப்புகள் குறைவாகவே காணப்படுகின்றன.

**“மாமலை நாட!” (ஐந்.ஐம்.18)**

ஒலிக்கின்ற அருவி நீர்வீழ்ச்சிகளை உடைய பெரிய மலைநாடன் என்றும்

**“நெடுமலை நன்னாட…..**
**…… கடுவிசை வாலருவி” (ஐந்.ஐம்.19)**

மிக்க விரைவாக செல்லும் வெள்ளிய நீர்வீழ்ச்சியைக் கொண்ட தலைவன் எனவும்,

**“வாழைமுதுகாய் கடுவன் புதைத்தயருந்**
**தாழருவி நாடன்” (ஐந்.எழு.11)**

வாழை மரத்தின் முதிர்ந்த காய்களை பழுப்பிக்க வேண்டி புதைத்து வைத்து பின்பு புதைத்த இடம் தெரியாமல் அத்தினைப்புனைத்தின் கண்ணே தாழ்ந்து ஓடும் அருவிகளைக் கொண்ட தலைவன் எனவும்,

**“மானீல மாண்ட துகிலுமிழ்வ தொத்தருவி**
**மானீல மால்வரை நாட” (திணை.நூற்.06)**

பெரிய நீண்ட நீலமணி போன்ற மலையில் நேர்த்தியான வெள்ளாடையினை உமிழ்வது போன்று நீர்வீழ்ச்சியைக் கொண்ட

தலைவன் என்றும், அருவி பற்றிய செய்திகள் இடம் பெற்றுள்ளன. மேலும்,

**"கல்லருவி நாட!"** **(திணை.நூற்.11)**

**"பாலொத்த வெள்ளருவி"** **(திணை.நூற்.19)**

**"ஒல்லென வோடு மலைநாடன்"** **(கைந்.07)**

**"சந்தன மேந்தி யருவி கொணர்ந்திடுஉம்**
**வஞ்சமலை நாடன்"** **(கைந்.02)**

என்றும் அருவி பற்றிய செய்திகள் இடம் பெற்றுள்ளன.

**"யாழுங் குழலு முழவு மியைந்தன**
**வீழு மருவி விறன்மலை நன்னாட"** **(திணை.ஐம்.07)**

என்ற பாடலில் யாழின் இசையும், குழலோசையும், முழவுவொலியும் ஒன்றாக சேர்ந்தன என்று சொல்லும் படியாக விழுந்து ஒலித்துக் கொண்டிருக்கும் படியான மலை நாட்டுத் தலைவன் என்றும் அருவிக் காட்சி இடம் பெற்றுள்ளது.

**சோலை**

குறிஞ்சி நிலத்தில் உள்ள மரம், செடி, கொடிகள் கொண்ட சோலைகளைப் பற்றியும் சில இடங்களில் குறிப்பிடப்பட்டுள்ளன.

**"கருங்கான் மராம்பொழிற் பாசடைத் துஞ்சுஞ்**
**சுரும்பிமிர் சோலை மலை நாடன்"** **(ஐந்.எழு.12)**

கரிய அடிப்பகத்தினைக் கொண்ட மராம் மரத்தின் நிழலில் உறங்கும் வண்டினங்கள் சூழ்ந்த சோலைகளை கொண்ட மலை நாட்டுத் தலைவன் என்றும்,

**“நீள்சோலை நாடன்”　　　(ஐந்.எழு.14)**

மேகம் சூழ்ந்த சோலைகளையும் மலைகளையும் கொண்ட தலைவன் என்றும்,

**“பொன்னினார் வேங்கை கமழு நளிசோலை**
**நன்மலை நாட”　　　(ஐந்.எழு.05)**

பொன் போன்ற வேங்கை மலர்கள் மணக்கும் படியான குளிர்ந்த சோலையும், மலையும் கொண்ட மலைநாட்டுத் தலைவன் என்றும் குறிஞ்சி நிலத்தின் சோலை வர்ணிக்கப்பட்டுள்ளது. சங்கம் மருவிய கால அகப்பாடல்களில் மலை, அருவி, சோலை இவை மட்டுமே இடம்பெற்றுள்ளன.

சங்க அகப்பாடல்களில் மலை, சுனை, அருவி போன்றவற்றின் வர்ணனைகள் காணப்படுவது போல் சங்கம் மருவிய காலத்தில் இடம்பெற்றிருந்தாலும் பெரும்பாலும் நிலவர்ணனை தலைவனை சார்ந்தே இடம்பெற்றுள்ளது குறிப்பிடத்தக்கதாகும்.

சங்க அகப்பாடல்களில் முதற்பொருளான நிலத்தைச் சுட்டும் போது அதிகமான வர்ணனைகள், உவமைகள், கையாளப்படுகின்றன. மேலும் மலை, அருவி, சுனை என்று நிலத்தை குறிப்பிடும் போது காட்சிப்படுத்தல் அதிகமாக உள்ளது. சங்கம் மருவிய காலத்தில் நேரடியாக சொல்லப்பட்டுள்ளது.

**முல்லை நில வருணனை**

சங்கம், சங்கம் மருவிய கால அகப்பாடல்கள் இரண்டிலும் முல்லை நிலத்திற்கு உரிய முதற்பொருளில் கார்காலமாகிய பெரும்பொழுதும், மாலையாகிய சிறுபொழுதும் பொருந்திய பின்னணியில் முல்லை நிலம் சொல்லப்பட்டுள்ளது. முல்லைத் திணையைப் பொறுத்த மட்டில் பொழுது சொல்லப்பட்ட அளவிற்கு நிலம் சொல்லப்படவில்லை.

**சங்க இலக்கியத்தில் முல்லைத்திணை**

கார்காலத்தில் புதுமழைப் பெய்தமையால் முல்லை மலர் மலர்ந்து கொழித்து முல்லை நிலம் புதுமையாகக் காட்சியளிப்பதினை,

**"சென்னில மருங்கின் பன்மலர் தாஅய்ப்**
**புலம்புதீர்ந்து இனிய ஆயின புறவே" (ஐங்.495)**

எனக் குறிப்பிடப்படுகிறது. மழைப் பொழிந்ததினால் தவளைகள் ஒலிக்கும் சத்தமானது இசைக்கருவிகள் ஒலிப்பது போன்று உள்ளது. இதனை.

**"படுமழை பொழிந்த பயமிகு புறவின்**
**நெடுநீர் வுவல பகுவாய்த் தேரை**
**சிறுபல் லியத்தின் நெடுநெறிக் கறங்க" (அகம்.154)**

எனும் வரிகளில் சுட்டப்படுகிறது.

முல்லையின் செந்நிலம் அரக்குப் போல் தோன்றுகிறது. இதனை

**"அரக்கத் தன்ன செந்நிலப் பெருவழி" (அகம்.154)**

எனக் குறிப்பிடப்படுகிறது. மேய்ச்சலுக்கு சென்ற பசுக்கள் அறுகம்புல் மேய்ந்து மாலையில் திரும்புகின்றன. மடிகனத்த பாலொடு தம் கன்றுகளை அழைத்து குரல் கொடுக்க, அவை மன்றில் வந்து சேர்கின்ற மாலைப்பொழுதினை,

**"பதவுமேயல் அருந்து மதவுடை நல்லான்**
**வீங்குமாண் செருத்தல் தீம்பால் பிலிற்றிக்**
**கன்றுபயிர் குரல மன்றுநிறை குதரும்**
**மாலை ……………" (அகம்.14)**

எனக் குறிப்பிடுவர். பசுவும் காளையுமான பெருங் கூட்டத்தை வீடு நோக்கிச் செலுத்தும் ஆயர்கள் புல்லாங்குழல் இசைத்து வருவதனை,

**“படுமணி மிடற்ற பயநிரை ஆயம்**
**கொடுமடி உடையர் கோல்கைக் கோவலர்**
**கொன்றையங் குழலர் பின்றைத் தூங்கு**
**மனைமனைப் படரும்”		(அகம்.54)**

எனும் அகப் பாடல் குறிப்பிடுகிறது. அகநானூற்றில் இடைக்காடனார் பாடிய பத்து பாடல்களுள் ஒன்பது பாடல்கள் முல்லை நிலக் காட்சியை பற்றியதாக உள்ளது. இடைக்காடனார் என்ற பெயரே இவர் முல்லைநிலத்துக்கு உரியவர் என்பதை விளக்குகிறது. மேலும் **“முல்லைத் திணைப் பாடல்களில் பல காட்சிகள் கூறியது கூறலாகத் திரும்பத் திரும்ப வருகின்றன. எனினும் நுண்ணிய விளக்கங்களைச் சொற்சுவை பொருட்சுவை கனியும் வகையில் அளிக்கும்போது, அதே காட்சிகள் பல்வேறு பட்ட கோலம் வழங்குவன போல அருமைப்பாடு உடையனவாகப் பொலிகின்றன”** என **மு. வரதராசன்** குறிப்பிடுவது இங்கு எண்ணத்தக்கது. **(பழந்தமிழ் இலக்கியத்தில் இயற்கை, ப.225)**

## சங்கம் மருவிய காலத்தில் முல்லைத்திணை

சங்கம் மருவிய காலத்திலும் நிலத்தைக் காட்டிலும், பொழுதே அதிகமாக இடம் பெற்றுள்ளன. முல்லை நிலத்திற்கு உரிய காடு என்ற சொல்லே பல பெயர்களை பெற்று வந்துள்ளது.

முல்லை நிலத்தினை குறிக்க

**“தண்பெயல் கான்ற புறவு”		(திணை.ஐம்.24)**

**“நெடுங்காடு”		(கார்.02)**

**“தண்புறவி”		(கார் 03)**

**“பூங்குலை யீன்ற புறவு”		(கார்.11)**

**“படாவு மகிழ்வண்டு பாண்முரலுங் கானம்”		(கார்.32)**

கெடுதலில்லாத மகிழ்ச்சியை உடைய வண்டுகள் பாடும் காடு.

**“கோடலங் கூர்முகை கோளரா நேர்கருதக்**
**காடெலாங் கார்செய்து முல்லை அரும்பீன**
**வாறெலா றுண்ணறல் வார வணியிழாய்**
**போதராய் காண்பாம் புறவு”          (திணை.ஐம்.29)**

முல்லை நிலத்தின் எல்லா பக்கங்களிலும் முகில்கள் முழங்கி மழை பெய்ததினால் காந்தள் மலர் மலர, முல்லைச் செடிகள் மொட்டுக்கள் மலர, மழை நீரினால் வழிகள் எல்லாம் கருமணல் வழிந்து கிடக்கும் முல்லை நிலம் காட்சிப்படுத்தப்படுகிறது.

**“ஆய ரினம்பெயர்த் தாம்ப லடைதரப்**
**பாய முழங்கிப் படுகடலு ணீர்முகந்து**
**மாயிரு ஞால மிருள்கூர் மருண்மாலை**
**சேயவர் செய்த குறி”          (திணை.ஐம்.27)**

எனும் பாடல் அமைகிறது. முல்லை நில இடையர்கள் பசுக்கூட்டங்களை வீட்டிற்கு திருப்பி ஓட்டிவர ஆம்பல் மலரில் செய்த பெரிய புல்லாங்குழல் இசை ஒலித்துக் கொண்டு வரும்படியான மாலை நேரம் எனக் குறிப்பிடப்படுகிறது. சங்கம், சங்கம் மருவிய கால அகப்பாடல்கள் இரண்டிலுமே முல்லைத்திணையின் நிலம் ஒன்றாகவே இடம் பெற்றுள்ளன. நிலத்தை முதன்மைப்படுத்தியைத் காட்டிலும் பொழுதே பெரும்பான்மையாகவும், கூறப்பட்டுள்ளது.

### சங்க இலக்கியத்தில் மருதத்திணை

வயலும் வயல் சார்ந்த இடமும் மருதத்திணை ஆகும். சங்க இலக்கிய மருதத்திணைப் பாடல்களில் முக்கிய இடத்தினைப் பெறுவது எருமை ஆகும். ஐங்குறுநூற்றில் ஒரு பதிகம் எருமைப்பத்து என்னும் பெயரினைக் கொண்டுள்ளது.

“கடுங்கோட் பெருமைச் செங்கட் புனிற்றாக்” (ஐங்.92)

“தடங்கோட் பெருமை” (ஐங்.94)

இப்பாடல்கள் அனைத்திலும் எருமைக் காட்சியினைக் காணலாம். மேலும்,

“ஈர்ந்தண் எருமைச் சுவல்படு முதுபோத்துத்
தூங்குசேற்று அள்ளல் துஞ்சிப் பொழுதுபடப்”
(அகம்.316)

எனும் பாடல் குளிர்ச்சி தரும் வகையில் வளர்ந்த எருமையானது மீன்கள் மேயும் பொய்கையிலே பூத்து செழித்த ஆம்பல் மலரை மேய்ந்தது. மேய்ந்ததோடு குழம்பிக் கிடந்த சேற்றிலே இரவெல்லாம் உறங்கிற்று. பொழுது புலா்ந்து தன்வயம் இழந்த எருமைக் கடாவின் கால்களில் வரால் மீன்கள் சிதைந்தன. அவ்வாறு வந்த எருமைக் கடா வழியில் பூத்திருந்த பகன்றைக் கொடியைச் சூடிக்கொண்டு வருவது பெரிய போர்களில் வெற்றி கொண்ட வீரனின் காட்சி போல் இருந்தது என தலைவனின் பெருமை அழிந்த நிலையை மருதநிலக் காட்சியோடு வா்ணிப்பதாக அமைகிறது. மீன் கொத்தி, ஆமை, நீா்நாய், வாளைமீன் போன்றவை பல இடங்களில் பேசப்பட்டுள்ளன. குளங்களிலும் வயல்வெளிகளிலும் நாரைகள் மேய்கின்ற காட்சியும், நெல்லும் கரும்பும் தழைத்து செழித்த கழனிகளிகளின் காட்சிகளும் மருதத்திணையில் இடம்பெற்றுள்ளன.

“கயல்ஆர் நாரை போர்வின் சேக்கும்
மடநடை நாரைப் பல்இனம் இரிய” (ஐங்.9)

“நெடுநீர்த் தண்கயம் துடுமெனப் பாய்ந்து” (நற்.330)

காஞ்சி, மருது, கமுகு முதலான மரங்களும், வயலை, பிரப்பங் கொடிகள் முதலானவையும் மருத நிலக் காட்சிகளாக அமைந்துள்ளன.

நீர்நிலைகள் பற்றி நெடுநீர், குண்டுநீர், முதலான அடைகள் இடம்பெற்றுள்ளன.

**“நறுவடி மாஅத்து விளைந்துகு தீம்பழம்**
**நெடுநீர்ப் பொய்கைத் துடுமென விழூஉம்**
**குண்டுநீர் ஆம்பல்” (குறுந்.122)**

கதிர்ப் பருவத்தில் ஆற்றுநீர் கலங்கவும், கோடையில் மணி போலத் தெளிந்து இருப்பதையும், இளவேனிற் காலத்தில் சிறிதளவு நீரோடும் காட்சி பாம்பு நெளிந்து செல்வது போல் இருப்பதையும்,

**“கூதிர் ஆயின் தண்க லிழ் தந்து**
**வேனில் ஆயின் மணிநிறம் கொள்ளும்” (ஐங்.45)**

**“பல்பொறி அரவின் செல்புறம் கடுப்ப**
**ஆற்றறல் நுணங்கிய நாட்பத வேனில்” (நற்.157)**

எனும் பாடல்கள் வருணிக்கின்றன.

### சங்கம் மருவிய காலத்தில் மருதத்திணை

சங்கம் மருவிய கால அகப்பாடல்களில் கழனிகள், தாமரை மலர் நிறைந்துள்ள நீர்நிலை பற்றிய குறிப்பு அதிகமாகவும். எருமை பற்றிய குறிப்பு அங்காங்கே சில இடங்களிலும் புலவர்களால் சுட்டப்பட்டுள்ளன.

**“போதார்வண் டூதும் புனல்வயலூரன்” (ஐந்.ஐம்.22)**

**“யான ரகல்வய லூரன்” (ஐந்.ஐம்.23)**

**“வளவயலூரன்” (ஐந்.எழு.51)**

**“நல்வயலுறன்” (திணை. ஐம்.38)**

**“புண் கயத் துள்ளும் வயலூர” (திணை.நூற்.142)**

**“தண்டுறையூரன்”** **(கைந்.44)**

**“தண்கலி வயல் ஊரன்”** **(கைந்.45)**

போன்ற வரிகள் அனைத்தும் வயல் வெளிகளை சூழ்ந்த மருத நிலத் தலைவனைக் குறிப்பதாக அமைந்துள்ளன. தாமரை மலா்ந்த நீா்நிலைகளைப் பற்றி குறிப்பிடும் போது,

**“அழலவிழ் தாமரை யாய்வயலூரன்”** **(ஐந்.ஐம்.25)**

**“ஒள்ளிகழ்த் தாமரைப் போதுற மூரனை”** **(ஐந்.எழு.48)**

**“போதுறழ் தாமரைக்கண் னூரனை”** **(ஐந்.எழு.49)**

**“செந்தாமரை மலருஞ் செய்வய னல்லூர”** **(திணை.ஐம்.36)**

**“போதவிழ் தாமரைப் பூந்துறை யூரனைத்”** **(கைந்.431)**

என குறிப்பிடப்படுகின்றன. மேலும்,

**“உழலை முருக்கிய செந்நோக் கெருமை**
**பழனம் படிந்துசெய் மாந்தி – நிழல்மதியுந்**
**தண்டுறை யூரன் மலரன்ன மாா்புறப்**
**பெண்டிா்க் குரைபாண : உய்த்து”** **(ஐந்.எழு.44)**

உழலை மரத்தினை நாசப்படுத்தி சிவந்த கண்களை உடைய எருமையானது மருத நிலத்தின் ஊடே தவழ்ந்து சென்று கழனியில் மேய்ந்து மருதமர நிழலில் தங்கியிருக்கும் படியான குளிா்ந்த இடத்தினை உடைய தலைவன் வண்டுகள் பலபடியும் வண்ணம் மலா்ந்து கிடக்கும் படியான ஊருக்கு புறத்தே இருக்கும் புறப்பெண்டிா் வாழும் சேரியில் சுற்றித்திறிந்தான் என்று அப்பாடல் குறிப்பிடுகிறது.

**“வேனிற் பருவத் தெதிர்மல ரேற்றூதுங்**

**கூனிவண் டன்ன குளிர்வய னல்லூரன்”** **(திணை.ஐம்.35)**

வேனிற் காலத்தே எதிரிலே அகப்பட்ட பூக்களை விரும்பி மேற்கொண்டு தேனினைக் கைக்கொள்ளும் வளைந்த சிறகாகிய கூனினை உடைய வண்டினையொத்த வாழ்க்கை நடத்தும் வயல்வெளிகளை சூழ்ந்த தலைவன் என மருதக்காட்சி அமைகிறது.

**“பழனம் படிந்த படுகோட் பெருமை**

**குழனி வினைஞர்க் கெறிந்த பறைகேட்**

**டுரனழிந் தோடு மொலிபுன லூரன்**

**கிழமை யுடைய னென் றோட்கு”** **(திணை.ஐம்.31)**

மருத நிலத்தின் கண்ணே தவழ்ந்து மேய்ந்து கொண்டிருந்த கொம்புகளை உடைய எருமையானது. வயல்களினிடத்தே தொழில் செய்யும் மள்ளர்கள் ஊக்கம் கொள்வதற்காக ஒலிப்பித்த மருதநிலப் பறையினது ஒலியினை கேட்டு அறிவின்றி மனை நோக்கி விரைந்து ஓடும் நீர்வளமிக்க மருதநிலத் தலைவனின் செயல் எருமையின் செயலோடு ஒப்பிடப்பட்டுள்ளதை,

**“செங்கட் கருங்கோட் பெருமை சிறுகனையா”** **(திணை.நூற்.147)**

**“இருணடந்த தன்ன விருங்தோட் பெருமை”** **(திணை.நூற்.148)**

போன்ற வரிகளும் தலைவனின் பரத்தமை எருமையின் செயலோடு சொல்லப்பட்டுள்ளது. கைந்நிலையில்

**“கழனி யுழவர் கலியஞ்சி யோடிக்**

**துழென மதவெருமை தண்கயம் பாயும்”** **(கைந்.37)**

வயலின் கண் உழுகின்ற உழவர்களின் ஆரவாரத்தைக் கேட்டுப் பயந்து விரைந்து சென்று செருக்குடைய எருமை குளிர்ந்த தடாகத்தில்

வீழும் இயல்புடைய மருத நிலத் தலைவன் என்னும் குறிப்பு திணைமொழி ஐம்பது, கைந்நிலை இரண்டிலும் இடம்பெற்றுள்ளது.

“**கயிலினம்** பாயுங் கழனி நல்லூர!” (கைந்.38)

“தொட்ட **வரிவரால்** பாயும் புனலூரன்” (கைந்.39)

“**தாரா** விரியுங் தகைவய லூரன்” (கைந்.40)

“கயநீர்பாய்ந் தோடுங் **காஞ்சி**நல்லூரன்”

எனும் வரிகள் கெண்டைமீன், விரால்மீன், தாரா என்னும் மருத நிலத்து பறவையும் மருத நிலத்திற்குரிய காஞ்சி மரம் பற்றிய குறிப்பும் அமையும் படி மருதத்திணைப் பாடல்கள் அமைந்துள்ளன.

மருதத்திணையில் மிகவும் இன்றியமைதாக குறிப்பாக எருமை பயன்படுத்தப்படுகிறது.

**“வேனிற் பருவத் தெதிர்மல ரேற்றூதுங்**
**கூனிவண் டன்ன குளிர்வய னல்லூரன்”** **(திணை.ஐம்.35)**

வேனிற் காலத்தே எதிரிலே அகப்பட்ட பூக்களை விரும்பி மேற்கொண்டு தேனினைக் கைக்கொள்ளும் வளைந்த சிறகாகிய கூனினை உடைய வண்டினையொத்த வாழ்க்கை நடத்தும் வயல்வெளிகளை சூழ்ந்த தலைவன் என மருதக்காட்சி அமைகிறது.

ஒல்லென்று ஒலிக்கும் நீர்நிலைப் பற்றியும் குறிப்பிடப்பட்டுள்ளது. சங்கம் மருவிய கால அகப்பாடல்களில் பெரும்பான்மையாக வயல் சார்ந்த பகுதியும், தாமரை மலர்ந்துள்ள நீர் நிலையும் சுட்டப்பட்டுள்ளது.

## சங்க இலக்கியத்தில் நெய்தல் திணை

கடலும் கடல் சார்ந்த நெய்தல் நிலம் பற்றிய வர்ணனைகள் பல உண்டு. அவற்றுள் கடற்கரைச் சூழலே பெரிதும் பாடப்பட்டுள்ளது.

கடலின் உட்பரப்பு குறித்த வர்ணனைகள் குறைவே ஆகும். **“ஷெல்லி, பைரன் முதலான மேலைநாட்டுக் கவிஞர்களுக்குக் கடல் என்றதுமே ஒருவகை எழுச்சியும் கருத்துக்கு விருந்தாகும் ஒட்டுறவு ஏற்படுமாம். அவ்வகையான எழுச்சியும் கவர்ச்சியும் தமிழ்க் கவிஞர்களுக்கு ஏற்படவில்லை என்றே சொல்ல வேண்டியுள்ளது.**

**தமிழகம் வடதிசை தவிர்த்த ஏனைய மூன்று திசைகளிலும் கடலால் சூழப்பட்ட நாடு. பண்டைய காலந்தொட்டுக் கடற் பயணத்திலே தமிழர்கள் தேர்ச்சி பெற்றிருந்தனர் என்பதும் உண்மை எனினும் கவிதை யுலகினருக்கு மட்டும் ஏனோ பேரளவில் கற்பனைக் கவர்ச்சியைக் கடல் ஊட்டவில்லை”** என்கிறார் **மு. வரதராசனார்.** (பழந்தமிழ் இலக்கியத்தில் இயற்கை, ப.234)

கடலினை நேராக வர்ணிப்பதைக் காட்டிலும் குறிப்பாக சொல்லக்கூடிய இடங்களும் உண்டு.

**“உலகுகிளர்ந் தன்ன உருகெழு வங்கம்**
**புலவுத்திரைப் பெருங்கடல் நீரிடைப் போழ**
**இரவும் எல்லையும் அசைவின் றாகி**
**விரைசெலல் இயற்கை வங்கூழ் ஆட்டக்**
**கோடுயர் திணிமணல் அகன்றுறை நீ கான்**
**மாட ஒள்ளெரி மருங்கறிந்து ஒய்ய”** **(அகம்.255)**

உலகமே பெயர்ந்து கடலில் பயணம் செய்கிறதோ என எண்ணும்படியாக, அச்சம் தரும் பெரிய கப்பல் கடல்நீரைக் கிழித்துக் கொண்டு போகிறது. இரவும் பகலும் எங்கும் நிற்காமல் காற்றில் விரைந்து இயங்குகிறது. அவ்வாறு செல்லும் கப்பலானது கடற்கரையின் உயரமான இடத்தில் தெரியும் கலங்கரை விளக்கை அடையாளமாகக் கொண்டு மாலுமி செலுத்துகிறான். மேலும் நீலப் பெருங்கடல் செறிந்த காரிருள் போல கடற்கரையிலே குவிந்துள்ள வெண்மணல் மேடு இரவில் பொலியும் நிலவொளியைக் குவித்து வைத்தது போல காணப்படுவதை

**“இருள்திணிந் தன்ன ஈர்ந்தண் கொழுநிழல்**
**நிலவுக்குவித் தன்ன வெண்மணல் ஒருசிறை”** (குறுந்.123)

எனும் பாடல் வழி அறியமுடிகிறது. கடற்கரைச் சோலைகளில் புன்னையும் மரமும், தாழை மரமும் இருப்பது இயற்கை. புன்னை மலர்களும் தாழை மலர்களும் கடலுக்கு நறுமணம் ஊட்டுகின்றன. இதனை,

**“எக்கர்ப் புன்னை இன்னழல்”** (அகம்.20)

**“உரவுக்கடல் உழந்த பெருவலைப் பரதவர்**
**மிகுமீன் உணக்கிய புதுமணல் ஆங்கண்**
**கல்லென் சேரிப் புலவல் புன்னை**
**விழவு நாறு விளங்கிணர் விரிந்துடன் கமழும்”** (நற்.63)

இவ் அடிகளின் வழி அறியலாம். தாழையும் புன்னையும் நறுமணம் பரப்பும் நெய்தலிலே ஞாழற் பூக்கள் வீழ்ந்து கிடக்கின்றன. ஞாழல் மலர்களிடையே நண்டுகள் விளையாடுகிறது. அலை நீரின் ஈரத்தால் நண்டுகளின் நகம்பட்டு மணற் பரப்பில் வரிகள் ஏற்படுகின்றன. அந்த வரிகளைச் சிதைக்கும் படியாக இடியென முழங்கும் அலைகள். இதனை குறுந்தொகை பாடல் ஒன்றில்.

**“சிறுவீ ஞாழல் வேரளைப் பள்ளி**
**ஆலவன் சிறுமனை சிதையப் புணரி**
**குணில்வாய் முரசின் இரங்கும்”** (குறுந்.328)

என விளக்குவர்.

கடலில் உருவாகும் அலைகள் கரையோடு மோதுதல் பற்றியும், வேகமாக வரும் அலைகள் பெரிதாக பெரிதாக கரையில் மோதிச் சிதறுதல் பற்றியும் வர்ணிக்கப்படுகின்றன என்பதை

**“பொங்குதிரை பொருத வார்மணல் அடைகரை”** (நற்.35)

இளஞ் சிறுமியர் கடற்கரையில் சிற்றில் இழைத்து விளையாடுகின்றன. கரைகளை வேகமாக வந்து மோதும் அலையானது அம்மனைகளை சிதைத்து விடுகின்றன. இக்காட்சியை மருதன் இளநாகனார், தோற்றத்தினாலும் செய்யும் செயலாலும் மூத்தோர் போன்று உள்ள அலைகள் என வர்ணிக்கின்றார். இதனை,

**“மூத்தோர் அன்ன வெண்தலைப் புணரி**
**இளையோர் ஆடும் வரிமனை சிதைக்கும்”** (அகம்.90)

கடலில் ஏற்படும் அலைகள் பற்றிக் குறிப்பிடும் போது போர்க்களத்தில் முழங்கும் முரசென அதிர்வதாக அலை ஓசை சுட்டப்படுகிறது. மேலும்,

**“வேந்து அடு களத்தின் முரசுஅதிரிந் தன்ன**
**ஓங்கல் புணரி”** (நற்.395)

**“இடிகுரல் புணரி பௌவம்”** (நற்.74)

என்றும் முரசுபோரில் கடல் முழங்குவதனையும், கடல் முழுவதையும் அரசன் ஒருவன் எழுச்சிப்பெற்று நடத்தி செல்லும் படை அணிப்போலவும், கடற்பரப்பிலே மிதக்கும் படகுகள் களிறாகவும், அலை ஒலியை படை முழக்கமாகவும், கரையில் மீனுக்காக காத்திருக்கும் பறவைகள் கூட்டத்தினை வீரர்களின் அணியாகவும் கலித்தொகை காட்டுகிறது.

**“நிரைதிமில் களிறாகத் திரைஒலி பறையாகக்**
**கரைசேர் புள்ளினத்து அஞ்சிறை படையாக**
**அரைசுகால் கிளர்ந்தன்ன உரவுநீர்”** (கலித்.149)

புன்னை, தாழை ஆகிய நெய்தல் நில மரங்களுக்கு இடையே மோதும் அலைகள் பற்றி குறிப்பிடும் போது,

**"நிரைபிதிர்ப் படுதிரை**

**பராஅரைப் புன்னை வாங்சினைத் தோயும்"** **(அகம்.270)**

என்றும், அலைமோதுவதால் ஏற்படும் வெண்நுரைகளின் பிசிர்கள் பரவுவது வில்லால் அடிக்கப்பட்ட நுண்மையும், மென்மையும் கலந்திருப்பது பஞ்சு பரவுவதுப் போல் உள்ளதாகப் பேரிசாத்தனார் பாடுகிறார்.

கடலின் இடைவிடாத ஓசை, அலையின் ஆர்ப்பரிப்பு, கடலும் வானம் கைக்கோர்க்கும் நீலநிறம், கடலில் எல்லையில்லாமல் விரிந்து கிடக்கும் நீர்ப் பரப்பு போன்றவற்றிற்கும் அடைமொழிகள் அமைந்துள்ளன என்பதை,

**"பாடிமிழ் பனிக்கடல்"** **(நற்.91)**

**"இவர் திரை"** **(அகம்.130)**

**"பொங்கு திரை"** **(நற்.335)**

**"தயங்கு திரை"** **(அகம்.293)**

**"நீலநிறப் பெருங்"** **(ஐங்.102)**

**"மணிக்கேழ் அன்ன மாநீர்"** **(குறுந்.49)**

**"இலங்குநீர்ப் பரப்பு"** **(குறுந்.318)**

**"வியலிரும் பரப்பு"** **(நற்.338)**

**"மாயிரும் பரப்பகம்"** **(நற்.31)**

இப்பாடலடிகள் குறிப்பிடுகின்றன.

இவ்வாறாக நெய்தல் திணைப்பாடல்களின் முதற்பொருள் அமையப் பெற்றுள்ளன.

**சங்கம் மருவிய கால அகப்பாடல்களில் நெய்தல் திணை**

சங்கம் மருவிய கால நெய்தல் திணைப் பாடல்களில் கடல் அலைகள், வளைந்த கால்களை உடைய நண்டு, உப்பங்கழிகள், நெய்தல் நிலத்து மரம், செடிகொடிகள் பற்றிய வர்ணனைகள் இடம் பெற்றுள்ளன.

கடல் பற்றிய குறிப்புகள் பல இடங்களில் சுட்டப்பட்டுள்ளன.

**"தெண் கடற்" (ஐந்.ஐம்.41)**

**"தாழ் கடற்" (ஐந்.ஐம்.43)**

**"காமரு சீர்" (திணை.நூற்.34)**

என அவை அமைகின்றன.

**"புலால்லகற்றும் பூம்புன்னைப் பொங்குநீர்ச்சேர்ப்ப**
**நிலாவகற்றும் வெண்மணற்றண் கானற்" (திணை நூற்.35)**

**"நெடுங்கழிச் சேர்ப்ப" (கைந்.52)**

**"தாழை தவழ்ந்துலாம் வெண்மணற் றண்கானன்"**
**(திணை.நூற்.45)**

**"கடும்புலால் புன்னை கடியுந் துறைவ" (திணை.நூற்.44)**

புன்னை மரங்கள் நிறைந்த அழகிய கடற்கரைச் சோலை, புலால் நாற்றத்தினை அகற்றும் வாசனை மிகுந்த புன்னை மரங்கள் நிறைந்து காணப்படும் சோலை, தாழை மரங்கள் படர்ந்து பரவி நிற்கும் வெள்ளிய மணல் நிரம்பிய குளிர்ந்த சோலை போன்றவை குறிப்பிடப்படுகின்றன. கடலில் செலுத்தும் மரக்கலம் பற்றிய செய்தி,

**“நாவாய் வழங்கு நளிதிரைத் தண்கடலுள்**

**ஓவா கலந்தார்க்கு மொல்லெ னிறாக்குப்பைப்”    (கைந்.49)**

எனும் பாடலில் அமைந்துள்ளது.

நெய்தல் நிலத்தை காட்சிப்படுத்தி தலைவனை மையப்படுத்தும் விதமாக சில பாடல்கள் அமைந்துள்ளன. மேலும்,

**“கடற்கானற் சேர்ப்ப! கழியுலாஅய் நீண்ட**

**வடற்கானற் புன்னைதாழ்ந் தாற்ற – மடற்கான**

**லன்றி லகவு மணிநெடும் பெண்ணைத்தெம்**

**முன்றி லிளமணன்மேன் மொய்த்து”    (திணை.நூற்.56)**

எனும் பாடல் கடற்கரை சோலைகளையுடைய மருத நிலத்தலைவன் எனச் சுட்டப்படுகிறது. மேலும்,

**“இடையெலா ஞாழலுந் தாழையு மார்ந்த**

**புடையெலாம் புன்னை புகன்று”    (திணை.நூற்.58)**

கடற்கரை சோலை சுற்றிலும் ஞாழல் மரமும், தாழை மரமும், புன்னை மரமும் சூழ அமைந்துள்ளது என பாடல்கள் அமைந்துள்ளன.

நெய்தல் திணைப் பாடல்களில் கடும்புலால் நாற்றத்தை போக்க, புன்னை மரமும், தாழைமரமும் வாசனைமிக்க பூக்களை தருவதாக குறிப்பிடப்படுவது எண்ணத்தக்கது. சான்றாக,

**“கடும்புலால் வெண்மணற் கானலுறு மீன்கட்”    (திணை.நூற்.51)**

**“கடும்புலால் புன்னை கடியுந் துறைவ!    (திணை.நூற்.44)**

எனும் பாடல் அமைகிறது.

மரக்கலம் யானையாகவும், கடல் அலை பறை வாத்தியமாகவும் முழங்க பறவைகள் உறக்கம் கெட்டது என்பதை

**"திரைபாக னாகத் திமில்களிறாகக்**
**கரைசேர்ந்த கானல் படையா – வரையது**
**வேந்து கிளர்ந்தன்ன வேலைநீர்ச் சேர்ப்ப! (திணை.நூற்.52)**

எனும் பாடல் குறிப்பிடுகிறது. அலைகள் யானைப் பாகனாகவும், தோணிகள் ஆண் யானையாகவும், கடற்கரையினை அடுத்துள்ள சோலைகள் சேனையாகவும் கொண்டு அரசன் புறப்பட்டாற் போன்று தலைவன் விரைந்து சென்றான் என கடல் முழுமையும் படைக்கு உவமையாக,

**"பாறு புரவியாப் பல்களிறு நீள்திமிலாத்**
**தேறு திரைபறையாப் புட்படையாத் - தேறாத**
**மன்கிளர்ந்த போலுங் கடற்சேர்ப்ப! (திணை.நூற்.53)**

எனும் பாடல் சிறப்பிக்கின்றது. மேலும் நெய்தல் நிலத்தில் காய வைக்கப்பட்டுள்ள மீன் முதலியவற்றைப் பற்றுவதற்காகப் பறந்து வரும் பருந்துகள் குதிரைகளாகவும், தோணிகள் பல யானைகளாகவும், தெளிந்த அலைகள் பறைவாத்தியமாகவும், கடற் பறவைகள் சேனையாகவும் கொண்டு அமைதியின் தன்மை அறியாத அரசர்கள் கிளர்ந்து எழுந்து படையெடுத்தது போலும் கடல் காட்சியளிப்பதாக புலவர்களால் குறிப்பிடப்படுகிறது. இத்தகையப் படிமப் படுத்தும் காட்சிச்சிறப்பு சங்கம் மருவிய கால அகப்பாடல்களுக்கே உரிய தனிச்சிறப்பாகும். இவ்வர்ணனைகள் திணைமாலை நூற்றைம்பதில் தொடர்ந்து இடம் பெற்றுள்ளன. உப்பங்கழிகள் பற்றிய சொற்கள் பல பாடல்கள் உள்ளன.

**"இருங்கழித் தண்சேர்ப்பன்" (ஐந்.ஐம்.45)**

**"அடும்பிவ ரெக்க ரலவன் வழங்குங்**
**கொடுங்கழிச் சேர்ப்ப" (ஐந்.எழு.56)**

**“தெண்ணீ ரிருங்கழி”** **(ஐந்.எழு.62)**

**“நெய்தற் படப்பை நிறைகழித் தண்சேர்ப்பன்”** **(திணை.ஐம்.41)**

**“இனம் னிருங்கழி யோத முலாவ”** **(திணை.ஐம்.44)**

**“குருகின மார்க்கும் கொடுங்கழிச் சேர்ப்ப”** **(திணை.ஐம்.46)**

**“நெடுங்கழிச் சேர்ப்ப”** **(கைந்.52)**

**“கொக்கர் கொடுங்கழிக் கடுநீர்த் தண்சேர்ப்பன்”** **(கைந்.55)**

போன்ற தொடர்கள் அனைத்தும் உப்பங்கழிகள் குறித்து இடம் பெற்றுள்ளன. சங்க அகப்பாடல்களை ஒப்பீட்டு ஆராயும் போது சங்கம் மருவிய கால நெய்தல் திணைப்பாடல்களில் வர்ணனை குறைவாகவே இடம் பெற்றுள்ளது. கடலும் வானமும் ஒன்றாக காட்சி தருதல், கடல் அலையில் பொங்கி வரும் நுரைகள், கடலில் உட்பரப்பு இவை சங்கம் மருவிய காலத்தில் இடம் பெறவில்லை. இருப்பினும் சில வர்ணனைகள் புதுமையாகவும் இடம் பெற்றுள்ளன. சங்க அகப்பாடல் பாடிய புலவர்கள் நெய்தல் திணையை நுட்பமாக வர்ணித்த அளவிற்கு சங்கம் மருவிய காலத்தில் இல்லை.

### சங்க இலக்கியத்தில் பாலைத்திணை

சங்க இலக்கியத்தில் பெரும்பான்மையானப் பாடல்கள் பாலைத்திணை சார்ந்ததாகும். கதிரவனின் வெப்பம் தாங்காமல் மூங்கிலின் கணுக்கள் வெடிக்கின்றன. கடுங்கொடையின் கொடுமையால் மலையின் அழகு அழிவதனை,

**“அத்தம்**
**காய்கதிர் கடுகிய கவின்அழி பிறங்கல்**
**வேய்கண் உடைந்த சிமைய**
**வாய்படு மருங்கின மலை”** **(அகம்.399)**

எனச் சுட்டப்படுகிறது. பெரிய மரக்கிளைகள் காய்ந்து இலைகளை அடித்துக் கொண்டு விரையும் கோடைக் காற்று. இதனை

**“நீடுசினை வறிய ஆக ஒல்லென**
**வாடுபல் அகல்இலை கோடைக்கு ஒய்யும்”** **(அகம்.143)**

எனும் பாடல் குறிப்பிடுகிறது. மூங்கில்கள் ஒன்றோடொன்று உராய்வதால் காட்டுத்தீ எங்கும் பரவுகிறது. கோடையின் கொடுமையால் இலைகளைக் இழந்து மரங்களெல்லாம் நிழலற்றுப் போயின. பறவைகளும் விலங்குகளும் நீர்வேட்கையாலும், பசியாலும் துன்புறுகின்றன. வெப்ப மிகுதியால் ஏற்படும் கானல்நீரை நீரெனக் கருதி ஓடி ஓடி இளைத்து இறுதியில் ஏமாற்றம் அடைந்து பசியாலும், நீர் தாகத்தையும், உயிரினங்கள் வருந்தும்.

**“கனைகதிர்**
**ஆவி அவ்வரி நீரெள நசைஇ**
**மாதவப் பரிக்கும் மால்திரங்கு நனந்தலை”** **(அகம்.327)**

**“கடுவை ஆராற்று அறுசுனை முற்றி**
**உடங்குநீர் வேட்ட உடம்புஉயங்கு யானை**
**கடுந்தாம்பு பதிபு வேறாகச் சாரல் சாரல்ஓடி**
**நெறிமயக் குற்ற”** **(கலி.12)**

**“வெண்தேர் ஓடும் கடம்காய் மருங்கு”** **(அகம்.179)**

**“பெருநீர் ஒப்பின் பேஎய் வெண்தேர்**
**மரனில் நீளிடை மான்நசை யுறூஉம்”** **(நற்.84)**

என பாடல்கள் விளக்குகின்றன. இவ்வாறாக பாலைநிலத்தின் கானல் நீரும், வெப்பமும் காட்சிப்படுத்தப்படுகின்றன. பாலைத்திணைப் பாடல்களில் **“பன்மலை அருஞ் சுரம்”** என்னும் சொல் அடிக்கடி இடம்பெறுகிறது.

**சங்கம் மருவிய கால அகப்பாடல்களில் பாலைத்திணை**

சங்கம் மருவிய கால பாலைத் திணைப் பாடல்களில் சுரம் பற்றிய செய்திகளே அதிகமாக இடம்பெற்றுள்ளன. சிறுபான்மையாக பாலைநிலத்தின் வழியின் தன்மையும், அஃறிணையின் துன்பமும் சொல்லப்பட்டுள்ளது.

**"அழற்பட் டசைந்த பிடியை – யெழிற்களிறு**
**சுற்சுனைச் சேற்றிடைச் சின்னீரைக் கையாற்கொன்**
**டுச்சி யொழுகுஞ் சுரம்" (ஐந்.ஐம்.32)**

எனும் பாடலில் காட்டுத் தீயிடத்தே அகப்பட்டு வருந்திய பெண் யானையை அதன் அழகிய ஆண்யானையானது, மலைச் சுனையின் சேற்றோடு கூடிய சிறிய நீரினை, தன் கையினாலே வாரியெடுத்து தலைவன் உச்சியில் வைத்தற்கு இடமான பாலை நிலவழி என்று அன்பினை வெளிப்படுத்தும் வகையில் நிலம் சுட்டப்படுகிறது.

**"கள்ளத்தி னூச்அஞ் சுரமென்பார்" (ஐந்.ஐம்.38)**

பாலை நில வழியானது ஆண்மான் சிறிதாகிய தண்ணீர் சுனையில் உள்ள நீரை குடிக்கப் பெறாமல், தன் பிணைமான் குடிக்க வேண்டி பொய்யாக உறிஞ்சும் பாலை நிலவழி என்பது அன்பின் உச்சம் காட்டும் நிலக்காட்சி.

**"கள்ளர் வழங்குஞ் சுரமென்பர்" (ஐந்.எழு.34)**

**"படுபகை பார்க்குஞ் சுரம்" (ஐந்.எழு.37)**

**"வழிநீ ரறுத்த சுரம்" (திணை.ஐம்.11)**

**"நெறியரு நீள்சுரம்" (திணை.ஐம்.15)**

**"ஏற்றிய வில்லி எயினர் கடுஞ்சுரம்" (திணை.ஐம்.20)**

**"செலற்கரிதாச் சேய சுரம்"** **(திணை.நூற்.87)**

**"வெஞ்சுரம்"** **(கைந்.24)**

என பாலைத்திணையின் சுரம் அதன் தன்மையோடு விளக்கம் பெறுகிறது.

**"............நெற்பொரியு நீளத்த**
**மஞ்ச லெனவாற்றி னஞ்சிற்றா – லஞ்சிப்"** **(திணை.நூற்.76)**

சூரியனின் வெப்பத்தால் நெற்களும் பொரிந்து போகும் படியான நீண்ட பாலை நிலவழி என்றும்,

**"ஒருகை யிருமருப்பின் மும்மதமால் யானை**
**பருகுநீர் பைஞ்சுனையிற் காணா – தருகல்**
**வழிவிலங்கி வீழும் வரையத்தஞ் சென்றா**
**ரழிவில ராக வவர்"** **(திணை.நூற்.78)**

துதிக்கை ஒன்றினையும், இரண்டு கொம்புகளையும், மும்மதங்களைக் கொண்ட பெரிய யானை சுனையிடத்தே தண்ணீர் குடிக்கப் பெறாமல் நடக்க இயலாமல் தளர்ந்து வீழ்ந்து கிடக்கும் படியான யானைப் போன்ற மலை உடைய பாலை நிலம் என்றும்,

**"செல்பவோ தம்மடைந்தான் சீரழியச் சிஃடுவன்றிக்**
**கொல்பபோற் கூப்பிடும் வெங்கதிரோன்-மல்கிப்**
**பொடிவெந்து பொங்கிமேல் வான் அடுங் கீழா**
**அடிவெந்து கண்சுடு மாறு"** **(திணை.நூற்.92)**

சிள்வண்டுகேள் நெருங்கி கொடிய ஒலியாலே ஒலிக்க வெப்பமிக்க ஞாயிற்றின் வெப்பத்தின் ஆவிகிளம்பி வான்நோக்கி சென்று தரையில் செல்லார் அடிகளையும், கண்களையும் சுடச் செய்யும் பாலைநிலவழி என்றும் பாலைநில வழி விளக்கம் பெறுகிறது.

சங்கம், சங்கம் மருவிய கால அகப்பாடல்கள் இரண்டிலுமே பாலை நிலத்தின் சுரம் பற்றிய செய்திகள் பெரும்பான்மையாக இடம் பெற்றுள்ளன. அ∴றிணைக் காட்சியின் துன்பமும், பாலை நிலத்தின் வெப்பமும் விளக்கப்பட்டுள்ளன.

இதுகாறும் முதற்பொருளான நிலம் பற்றி ஒப்பிட்டு விவரிக்கப்பட்டது இனி நிலத்திற்குரிய பொழுதுகள் ஆராயப்படுகின்றன.

## பொழுது

பொழுதானது இரண்டு வகைப்படும் அவை பெரும்பொழுது, சிறுபொழுது ஆகும். தொல்காப்பியர் ஒவ்வொரு நிலத்திற்கும் ஒரு குறிப்பிட்ட பொழுதினை இணைத்துக் காட்டியுள்ளார். **“ஐன்சுடைன் என்ற இயற்பியல் அறிஞரின் அண்டம், பொழுது ஆகிய இரண்டையும் இணைத்து நோக்கிய ஒப்பீட்டுக் கொள்கை முதற்பொருள் கருத்தோடு மிகவும் ஒத்துக் காணப்படுகிறது”** என்கிறார் **ந. சுப்புரெட்டியர். (தொல்காப்பியர் காட்டும் வாழ்க்கை, ப.07)**

முல்லை நிலத்திற்குக் கார் காலமாகிய பெரும்பொழும், மாலையாகிய சிறுபொழுதும் இணைத்துக் காட்டியுள்ளார். குறிஞ்சி நிலத்திற்குக் கூதிர் காலமும், பனியெதிர் பருவமாகி பெரும்பொழுதும், சிறுபொழுதான யாமம் இயைபுபடுத்தப்பட்டுள்ளன. மருத நிலத்திற்கு வைகறை விடியலும் என்னும் சிறுபொழுதும் உள்ளது. நெய்தல் நிலத்திற்கு ஏற்பாடு சிறுபொழுதாக உள்ளது. பாலை நிலத்திற்கு நண்பகல் சிறுபொழுதும் வேனில், பின்பனி பெரும்பொழுதும் கூறப்பட்டுள்ளது. இவ்வாறு தொல்காப்பியர் முதற்பொழுதிற்கு உரிய நிலம், பொழுது இவற்றை இணைத்துக் கூறியுள்ளார்.

## சங்க இலக்கியத்தில் முல்லைத்திணை பொழுது

காடும் காடு சார்ந்த இடமுமாகிய முல்லை நிலத்திற்குக் கார் காலமும், மாலைப்பொழுதும் சுட்டப்படுகின்றன. தலைவன் வருகையை

எதிர்பார்த்து இல்லில் காத்திருக்கும் தலைவிக்கு, வினை முடித்து அவன் விரைந்து வரும் காலம் கார்காலமும், முல்லை நிலத்த மலர்கள் மலர்ந்து மணம் பரப்பும் மாலைப் பொழுதாகும். இத்தகு சூழல் தலைவன் உள்ளத்தில் காதல் உணர்வினை ஏற்படுத்தக் கூடியதாக உள்ளது. தலைவியும் ஆவலோடு தலைவன் வரவினை எதிர்பார்த்துக் கொண்டிருக்க கூடியது முல்லைப் பொழுதாகும்.

**"புலன் அணி கொண்ட கார்எதிர் காலை" (அகம்.304)**

**"கார் கவின் கொண்ட காமர் காலை"**

**"கார்செய் தன்றே கவின்பெறு காலம்" (அகம்.334)**

முதலான தொடர் கார் காலத்தின் அழகினைச் சுட்டுகின்றன. கார்காலத்தின் வருகையை உணர்த்தும் விதமாக முல்லை, கொன்றை, தோன்றி, பிடவம், முதலான மலர்கள் பூத்துக் குலுங்குதலைச் சுட்டுகின்றனா். மான்கள் துள்ளிக் குதிப்பது இயற்கை. கார்கால மகிழ்ச்சியிலே சத்தமிடுதல் தவளைக்கே உரியது ஆகும். எனவே இடைவிடாமல் குரல் எழுப்பி பாடத் தொடங்கியதை,

**"வரிநுணல் கறங்கத் தேரை தெவிட்டக்**
**கார் தொடங் கின்றே காலை" (ஐங்.468)**

எனும் பாடலில் விளக்குகின்றது.

முல்லை நிலத்து மாலைக் காலத்து வருணனைகள் பெரும்பாலும் கார்காலத்துப் பின்னனியிலே தான் வருகின்றன. மேய்ச்சலுக்குப் பின் வயிறு நிரைந்து திரும்பும் ஆநிரை, தம் கூடுகள் நோக்கி விரையும் பறவைக்கூட்டம், மேல் திசையில் மறையும் கதிரவன், மெல்ல பரவும் இருள் போன்ற பின்னனியில் முல்லை நிலம் பொழுது விளக்கம் பெறுகிறது.

"மண்ணுடைக் கோட்ட அண்ணல் ஏஎறு
ஊடனிலை வேட்கையின் மடநாகு தழீஇ
ஊர்வயின் பெயரும் பொழுதின் சேர்புடன்
கன்றுபயிர் குரல் மன்றுநிறை புகுதரும்" (அகம்.64)

"பல்கதிர் மண்டிலம் பகல்செய் தாற்றிச்
சேயுயர் பெருவரைச் சென்றவன் மன
..................................
கொடுங்கோற் கோவலர் குழலொடு ஒன்றி
ஐதுவந்து இசைக்கும்...............மாலை" (நற்.60)

என நெய்தல் நிலப்பின்னனியில் மாலைக்கால வர்ணனை அமைந்த பாடல்களாக அமைகின்றன.

சங்க அகப்பாடல்களில் முல்லைத் திணைப் பாடல்களில் நிலம் இடம்பெற்றதைக் காட்டிலும், பொழுதே அதிகமாக உள்ளது. சிறுபொழுதான மாலை பற்றிய வர்ணனை குறைவே.

**சங்கம் மருவிய கால அகப்பாடலில் முல்லைத் திணைப் பொழுது**

சங்கம் மருவிய கால அகப்பாடலில் முல்லைத் திணைப் பாடலில்

"கருங்கடன் மாந்திய வெண்டலைக் கொண்மூ
விருங்கடன்மா கொன்றான்வேன் மின்னிப் - பெருங்கட
றீன்போன் முழங்கித் தளவில் குருந்தனைய" (திணை.நூற்.93)

எனும் பாடலில் கடலில் புகுந்து நீரினை நிறைய உண்ட வெண்மையான தலைப்பாகத்தை உடைய மேகங்கள் பெரிய கடலிடத்தே மாமர வடிவினைக் கொண்ட சூரபத்மனை வெட்டி வீழ்த்திய முருகனின் வேலைப் போன்று மின்னல் மின்னியது. குடலைப் போன்று ஆரவாரித்து செம்முல்லை மலர்ந்தன என முல்லைக்குரிய பொழுது சுட்டப்படுகிறது.

**“முல்லை யிலங்கெயி றீன நறுந்தண்கார்**
**மெல்ல வினிய நகும்”            (கார்.14)**

மகளிரின் பற்கள் போல விளங்கும் முல்லை மலர்கள், மலரும் காலத்தில் கார்காலமானது தொடங்கியது என்றும், கார்காலத்து மேகமானது

**“நெய்யணி குஞ்சரம் போன விருங்கொண்மூ**
**வைகலு மேரும் வலம்”            (கார்.13)**

என எண்ணெய் பூசப்பட யானைகள் போல காட்சியளித்தது என்றும் காட்டப்படுகிறது.

சங்கம் மருவிய கால முல்லைத் திணைப் பாடல்களில் சிலவற்றில் கார்காலமும், மாலைப் பொழுதும் குறிப்பாக சொல்லப்பட்டுள்ளது. சிறுபொழுதான மாலை பற்றிய செய்தி மிகக் குறைவே. சங்கம், சங்கம் மருவிய கால அகப்பாடல்களில் முல்லைத்திணை சார்ந்த பொழுது வர்ணனை மேலோட்டமாக அமையால் நுட்பமாகவும், அத்திணைக்குரிய மாந்தர்களின் மனவுணர்களை வெளிப்படுத்துவதாகவும் அமைந்துள்ளன. சில பாடல்களில் கார், மாலை என்னும் பொழுது குறித்த சொல் பயின்று வந்துள்ளது. சில இடங்களில் முல்லை நிலத்திற்கு உரிய கருப்பொருள்களில் வழியாக பொழுது உணர்த்தப்படுகிறது.

## சங்க அகப்பாடலில் குறிஞ்சித்திணை – பொழுது

கார்காலத்தை அடுத்து வருவது கூதிர்காலம் ஆகும். குறிஞ்சி நிலத்திற்கு உரிய காலமாக கூதிர்காலம் சுட்டப்படுகிறது.

**“காரும் மாலையும் முல்லை குறிஞ்சி**
**கூதிர் யாமம் என்மனார் புலவர்”            (தொல்.பொருள்.06)**

என்பர்.

ஈங்கையும் மலர்கின்ற கூதிர்காலத்தை,

**“வெள்ளிதழ்ப்………………**

**பகல்மதி உருவின் பகன்றை மாமலர்**

**வெண்கொடி ஈங்கைப் பைம்புதல் அணியும்**

**அரும்பனி அளைஇய கூதிர்” (ஐங்.456)**

எனும் பாடல் சுட்டுகிறது.

கூதிர் பருவத்தில் கலங்கிய நீர் நிறைந்து ஆறுகளில் ஓடும் கூதிர் பருவத்துக் கலங்கல் நீரையும், வேனிற் காலத்துத் தெளிவாக ஓடும் நீரையும் புலவர்கள் ஒப்பிட்டு உணர்த்துகின்றனர்.

**“கூதி ராயின் திண்கலிழ் தந்து**

**வேனி லாயின் மணிநிறம் கொள்ளும்**

**யாறு…………….” (ஐங்.45)**

கூதிர் காலத்து பனித்திவளைகள் பரவுதலை, களிறு மூச்சுவிடுதல் போல் உள்ளதாக

**“களிறு உயிர்த் தன்ன கண்ணழி துவலை” (அகம்.163)**

என விளக்குவர்.

மேலும் அவரைப் பூக்கள் மலர்வதும், மூங்கில் மலர்வதும் காந்தள் மலரின் நீண்ட இதழ்கள் உதிர்தலும், பனிக்காலத்திற்கு உரியதாகும். சாலைகளிலே தேர்ச் சக்கரங்கள் பதித்த சுவடுகளில் நீர் நிரம்பி வளைந்து வளைந்து செல்வது பாம்பு செல்வது போன்று உள்ளது.

**“நெடுந்தேர்**

**நோன்கதிர் சுமந்த ஆழியாழ் மருங்கின்**

**பாம்பென மூடுகுநீர் ஓட” (அகம்.339)**

என கூதிர்கால நிலை சுட்டப்படுகிறது.

**“சங்க இலக்கியத்தின் பல பாடல்களில் முன்பனிப் பருவத்தையும் பின்பனிப் பருவத்தையும் பிரித்துணர முடிவதில்லை. முன்பனிக்காலம் என்றோ பின்பனிக்காலம் என்றோ பருவ வரையறை இல்லாமலே மிகப் பல பாடல்களைப் பனிக் கால காவியங்களாகக் சங்கச் சான்றோர் பாடியுள்ளனர். முன்பனியின் எல்லை இது. பின்பனியின் எல்லை இது என்று திட்டவட்டமாகப் பிரிக்க முடிவதில்லை. அத்துணைத் தொடர்ச்சி யற்றனவாய் உள்ளன. இரண்டு பனிப் பருவங்களும் இடையீடுபட்டுப் பிரித்தலுக்கு இடம் கொடாமல் தொடர்ந்து அமைந்துள்ளமையே பாடல்களிலும் வரையறை இன்மைக்குக் காரணம் எனலாம்.”** என்கிறார் **மு.வ. (பழந்தமிழ் இலக்கியத்தில் இயற்கை, ப.246) (யாமம்)**

குறிஞ்சித்திணைக்குரிய நள்ளிரவு சிறப்புக்குரியதாகும். கார்காலத்து மழையும், இடியும், மின்னலும் கூடிய யாமம் குறிஞ்சித் திணையை அழகுப்படுத்துகிறது.

**“பெயல்கண் மறைத்தலின் விசம்புகா ணலையே**
**நீர்பரந்து ஒழுகலின் நிலம்கா ணலையே**
**எல்லை சேறலின் இருள்பெரிது பட்டன்று” (குறுந்.335)**

என்கிறது இப்பாடல்,

குறிஞ்சித்திணைக்குரிய யாமம் சங்கப் பாடலில் பின்வருமாறு சுட்டப்படுகிறது.

**“வியல் இருள் நடுநாள்” (அகம்.218)**

**“கனையிருள் நடுநாள்” (நற்.228)**

**“மயங்கிருள் நடுநாள்” (நற்.319)**

**“ஆரிருள் நடுநாள்” (நற்.285)**

**“நள்ளென் யாமம்” (அகம்.143)**

**“உட்குவரு நடுநாள்”                (நற்.383)**

இவ்வாறாக குறிஞ்சித்திணைக்குரிய பொழுது எடுத்துரைக்கப்படுகிறது.

## சங்கம் மருவிய கால அகப்பாடல்களில் குறிஞ்சித்திணை – பொழுது

சங்க அகப்பாடலில் பொழுது வர்ணிக்கப்பட்ட அளவிற்கு சங்கம் மருவிய காலத்தில் பொழுது இடம்பெறவில்லை. குறிஞ்சித்திணைப் பொழுது பதினேழு பாடல்களில் மட்டுமே குறிப்பிடப்பட்டுள்ளன அதிலும் சிறுபொழுதான யாமமே பெரிதும் புலவர்களால் வர்ணிக்கப்பட்டுள்ளது. சில பாடல்களில் நேரடியாக சுட்டப்படாமல் குறிப்பாகவே ‘பொழுது சொல்லப்பட்டுள்ளது.

**“………………. – நடுவிரு**
**ளின்னா………………”                (ஐந்.ஐம்.19)**

**“யராவழங்கு நீள்சோலை நாடனை நம்மி**
**லிராவார லென்ப துரை”                (ஐந்.எழு.14)**

பாம்புகள் உலவும் இரவுப் பொழுதில் தலைவியை சந்திக்க தலைவன் வருவதை தவிர்க்க வேண்டும் என்று கூறப்படுவதை,

**“வானுயர் வெற்ப! இரவின் வரல் வேண்டா”     (திணை.ஐம்.01)**

**“……………மாற்றா ளிரவரி**
**னூரறி கௌவை தரும்”            (திணை.ஐம்.07)**

**“……………..வேங்கை மலர்ந்துவண் பார்க்கும்**
**ஆணிநிற மாலைப் பொழுது”           (திணை.ஐம்.09)**

**“……………….யிரவின்**
**வழிகடாஞ் சால வரவரிய வார”                (திணை.நூற்.11)**

எனும் பாடல்கள் வழி அறிய முடிகின்றது. அனைத்திலுமே இரவுப் பொழுது சுட்டப்பட்டுள்ளது.

சங்கம் மருவிய காலத்தில் குறிஞ்சி நிலத்திற்குரிய பொழுது அவ்வளவாக இடம் பெறவில்லை. பெரும்பொழுதான கூதிர்காலம் எங்கும் சுட்டப்படவில்லை. யாமம் மட்டுமே புலவர்களால் பயன்படுத்தப்பட்டுள்ளது. சில பாடல்களில் வலிந்தே பொழுது வருவிக்கப்படுகிறது. சிறுபொழுதின் பயன்பாடு அனைத்து பாடல்களிலும் ஒரே மாதிரியாகவே இடம் பெற்றுள்ளன.

### சங்க அகப்பாடலில் மருதத்திணை – பொழுது

வயலும் வயல்சார்ந்த பகுதி மருதம் ஆகும். மருத நிலத்திற்கு என காலம் வகுக்கப்படவில்லை. ஊடல் என்பது எல்லா காலத்திலும் நிகழக்கூடியதாகும். மருதத் திணைக்கு வைகறையும், விடியலும் சிறுபொழுதுளாக வகுக்கப்பட்டுள்ளன. **"மருதப்பாடல்களில் பருவங்கள் எங்கும் சித்திரிக்கப் பெறவில்லை. சில பாடல்களில் கூதிர்பருவவாடைக் காற்றும் மாலைப் பொழுதும் கூறப்பட்டுள்ளன. தொல்காப்பிய உரையாசிரியர்கள், மருதத்திற்குரிய பொழுது வைகறையாகும். ஏனெனின் பரத்தையிடமிருந்து தலைவன் திரும்பி வரும் பொழுதாகும். எனவே இந்தப் பொழுதில் தலைவி அவனோடு ஊடல் கொள்வாள் என்று கூறுகின்றனர். ஆனால் இந்த மரபு பெரும்பாலான மருதப்பாடல்களில் இல்லை"** என்கிறார் **தமிழண்ணல் (சங்கமரபு, ப.259)**

### சங்கம் மருவிய காலத்தில் மருதத்திணை பொழுது

சங்கம் மருவிய காலத்திலும் பொழுது குறித்த செய்திகள் சில இடங்களில் மட்டுமே சுட்டப்பட்டுள்ளன. பெரும்பொழுதாக ஐந்திணை ஐம்பதில் கூதிர்காலம், வேனிற்காலம் ஆகியன இடம் பெற்றுள்ளன. சிறுபொழுதாக மாலை, யாமம் ஆகியன பயன்படுத்தப்பட்டுள்ளன.

**“குளிரும் பருவத்தே யாயினும் தென்றல்**
**வுளியெறியன் மெய்யிற் கினிதாம்” (ஐந்.ஐம்.30)**

**“வேனிற் பருவத் தெதிர்மல ரேற்றூ துங்” (திணை.ஐம்.35)**

தலைவி, தலைவன் மேல் கொண்ட ஊடலின் போதே பொழுதுகள் சுட்டப்பட்டுள்ளன. சிறுபொழுதான யாமம் தோழி தலைவனுக்கு இரவுக்குறியிடம் வருவதற்காக குறிப்பாக சொல்வதற்கான பொழுதாக அமைந்துள்ளது.

சங்கம், சங்கம் மருவிய கால அகப்பாடல்கள் இரண்டிலுமே நிலத்திற்கு கொடுக்கப்பட்ட முக்கியத்துவம் பொழுதிற்கு கொடுக்கப்படவில்லை. நிலத்தின் வழியாகவே தலைவனின் பரத்தமையொழுக்கம் கடிந்து கொள்ளப்பட்டுள்ளது குறிப்பிடத்தக்கதாகும்.

## சங்க அகப்பாடலில் நெய்தல்திணை – பொழுது

கடலும் கடல் சார்ந்த பகுதி நெய்தல் திணையாகும். நெய்தல் நிலத்துக்குரியப் பெரும்பொழுதாக எதுவும் வரையறை செய்யப்படவில்லை. நெய்தலுக்கு உரிய பொழுது பயின்று வந்துள்ளமை குறைவே ஆகும். **“நெய்தலும் குறிஞ்சியைப் போலவே களவுக் காதலைக் குறிப்பதால் இங்கு கூதிர் பருவமும் பற்றியும் (குறுந்.103, 107, அகம்.170) நள்ளிரவு பற்றிய குறிப்பும் (அகம்.170) உள்ளன.”** என்கிறார் **தமிழண்ணல், (சங்கமரபு, ப.215)** எற்பாடு, மாலை என்ன அடிக்கடி இடம்பெறுகின்றன. சில பாடல்களில் நெய்தல் நிலத்தின் நள்ளிரவு சித்தரிக்கப்படுகின்றன.

**“யாமம் உய்யாமை நின்றது**
**காமம் பெரிதே களைஞரோ இலரே” (நற்.335)**

முல்லைத் திணைக்குரிய மாலைப் பொழுது நெய்தல் திணையில் எடுத்துரைக்கப்படுகிறது.

**"ஆபுலம் புகுதிரு பேரிசை மாலைக்**
**கடல்கெழு மாந்தை அன்னஎம்**
**வேட்டனை அல்லையால் நலந்தந்து செல்மே"          (நற்.395)**

ஆநிரைகள் ஊர்க்குள் வந்து புகுவதற்குரிய பகல் மறையும் மாலை சுட்டப்படுகிறது. மேலும், 'எல் படு நேரம்' என்ற தொடரால் மாலை காலத்திலிருந்து வேறுபடும் பொழுதினை (நற்.117, 211, 369, கலித். 122, அகம்.190, 260, குறுந்.92, 195) பல பாடல்களில் காண முடிகின்றது. சங்க இலக்கிய நெய்தல் திணைப்பாடல்களில் எற்பாடு மட்டும் குறிக்கப்படாமல், மாலை, இரவு, யாமம், வைகறை ஆகிய நான்கு சிறுபொழுதும் பெரிதும் புனைந்துரைக்கப்பட்டுள்ளன.

## சங்கம் மருவிய காலத்தில் நெய்தல் திணை – பொழுது

சங்கம் மருவிய காலத்திலும் நெய்தல் திணைக்கான பொழுதாக இரவு, மாலை, வைகறை, ஆகிய சிறுபொழுதுகள் புனைந்துரைக்கப்-பட்டுள்ளன. பெரும்பொழுது எங்கும் இடம்பெறவில்லை.

**"நரன்றுயிர்த்த நித்தில வள்ளிருள்கால் சீக்கும்**
**வரன்றுயிர்த்த பாக்கத்து வந்து"          (திணை.நூற்.49)**

**"வறங்கூர் கடுங்கதிர் வல்விரைந்து நீங்க**
**நிறங்கூறு மாலை வரும்"          (திணை.ஐம்.48)**

இவ்விரண்டு பாடல்களிலும் குறிப்பிடப்பட்டுள்ள பொழுது தலைவனுக்கு இரவுக்குறி நயப்பித்தது ஆகும்.

**"அலவன் வழங்கு மடும்பிமி ரெக்கர்**
**நிலவு நெடுங்கான னீடார் துறந்தார்"          (கைந்.53)**

என கடலில் மீன்பிடிக்க செல்லும் பரதவர் கானலில் உறங்கி வைகறைப் பொழுதில் மீன்பிடிக்கச் செல்லுதலை இப்பாடல் விளக்குகிறது.

சங்க அகப்பாடலில் நெய்தல் திணைக்காக பெரும்பொழுதும், சிறுபொழுதும் அங்காங்கே பயன்படுத்தப்பட்டுள்ளன. சங்கம் மருவிய காலத்தில் பெரும்பொழுது புலவர்களால் எங்கும் கையாளப்படவில்லை. சிறுபொழுது மட்டுமே குறிப்பிடப்பட்டுள்ளது. சிறுபொழுதிலும் இரவுப் பொழுதே அதிகமாக புனைந்துரைக்கப்படுகிறது. சங்க இலக்கியத்தில் நெய்தல் திணைக்கு சுட்டப்பட்ட யாமம் சங்கம் மருவிய காலத்தில் இடம்பெறவில்லை.

## சங்க இலக்கியத்தில் பாலைத்திணை – பொழுது

அகப்பொருள் நூல்களில் ஏனைய திணைகளைக் காட்டிலும் மிகுதியாகப் பேசப்படுவது பாலைத் திணையே ஆகும். இந்நிலத்திற்கு உரிய பொழுதுகளாக முன்பனி, இளவேனில், முதுவேனில், நண்பகல் ஆகியன கூறப்படுகின்றன. பாலை நிலத்தின் பருவத்தாலும், பொழுதாலும் உண்டாகும் துன்பத்தினை பலப் பாடல்கள் எடுத்துரைக்கின்றன.

இளவேனிற் பருவம் குறித்து ஐங்குறுநூற்றில் இளவேனிற் பத்து என ஒரு பகுதியே வருகின்றது. மென்தளர் ஒளிரும் மரக்கிளையின் இடையே குயிலின் இனிய ஒசை பரவுவதை இப்பருவத்து பாடல்கள் சுட்டுகின்றன.

**“குயிற்பெடை இன்குரல் அகவ**
**நிலம்பூத்த மரமிசை நிமிர்பு ஆலும் குயில்” (கலித்.26)**

**“இளவேனிற் பருவம் ‘யாணர் வேனில்’ (அகம்.341)**

எனச் சுட்டப்படுகிறது.

இளவேனில், முதுவேனில் இடையே உள்ள வேற்றுமையினை,

**“செவ்வி வேனில்” (அகம்.277)**

**“முற்றாவேனில்” (நற்.86)**

**"முதிரா வேனில்"** **(நற்.337)**

**"நாட்பத வேனில்"** **(நற்.157)**

**"குழவிவேனில்"** **(கலி.03)**

என்னும் தொடர்கள் சிறப்பிக்கின்றன. சங்க இலக்கியத்தில் முதுவேனில் பற்றிய குறிப்பு பெரும்பான்மையாக இடம் பெற்றுள்ளன பிரிவின் தன்மையும், கோடையின் கொடுமையும் இணைத்துப் பாடுதல் சங்க அகப்பாடலின் மரபாக உள்ளன. வறட்சி நிறைந்த பாலை வழியிலே வெம்மையால் வதங்கி வாடும் உயிர்களும், பசியால் வருந்தும் பறவைகளும் துன்புறுவதை வேனிற்காலப் பாடல்கள் சுட்டுகின்றன.

**"செருமிகு சினவேந்தன் சிவந்திறுத்த புலம்போல**
**எரிவந்த கரிவறல் வாய்புகுவ காணாவாய்ப்**
**பொரிமலர்ந் தன்ன பொறிய மடமான்**
**திரிமருப்பு ஏறொடு தேரல் தேர்க்கு ஓட**
**மரல்சாய மலைவெம்ப மந்திஉயங்க**
**உரல்போல் அடிய உடம்புயங்கு யானை**
**ஊறுநீர் அடங்கலின் உண்கயம் நாணாது**
**சேறுசுவைத்துத்தம் செல்லுயிர் தாங்கும்**
**புயல்துளி மாறிய போக்கரு வெஞ்சுரம்"** **(கலி.13)**

என அப்பாடல் அமைகிறது.

சிறுபொழுதான நண்பகல் அரிதாகவே குறிப்பிடப்பட்டுள்ளது. அவ்வாறு குறிப்பிடும்போதும் பெரும்பொழுதின் பின்னணியில் தான் சொல்லப்பட்டுள்ளது.

## சங்கம் மருவிய காலத்தில் பாலைத்திணை – பொழுது

சங்கம் மருவிய கால பாலைத் திணைப் பாடல்களில் பெரும்பொழுதான இளவேனிற்காலம் மட்டுமே சுட்டப்பட்டுள்ளது. சிறுபொழுது குறித்த செய்தி எங்கும் இடம் பெறவில்லை.

**"உதிரந் துவரிய வேங்கை யுகிர்போ**
**லேதிரி முருக்கரும்ப வீர்ந்திண்கார் நீங்க – எதிருநர்க்**
**கின்பம் பயந்த விளவேனிக்......."** **(ஐந்.ஐம்.31)**

**"சிலையொலி வெங்கணையர் சிந்தியா நெஞ்சிற்**
**கொலைபுரி வில்லொரு கூற்றுப்போ லோடும்**
**இலையொலி வெங்கானத் திப்பருவஞ் சென்றார்."** **(கைந்.23)**

கொல்லத்தகுந்த வில்லுடன் எமனைப் போல வழிச் செல்வோரைத் தொடர்ந்து விரைந்து செல்லும் இயல்புடைய இலைகள் உலர்ந்து கலகலவென்று ஒலிக்கும் கொடிய கானத்து வழியாக இளவேனிற் பருவத்து தலைவன் சென்றான் என அப்பாடல் அமைகிறது.

பாலை நிலத்தின் இளவேனிற் பருவம் நேரடியாகச் சுட்டப்படவில்லை. குறிப்பாகவும், கருப்பொருளின் வழியாகவுமே பொழுது இடம்பெற்றுள்ளது.

## கருப்பொருள்

சங்கம், சங்கம் மருவிய கால அகப்பாடல்களில் கருப்பொருள் பயன்பாடு குறித்தும், இருவேறு காலக்கட்டங்களில் எழுந்த அகப்பாடல்களில் கருப்பொருள்களின் ஒற்றுமை வேற்றுமை குறித்தும் ஒப்பிட்டு ஆராய்வதாக இப்பகுதி அமைகிறது. தொல்காப்பியர்,

**"தெய்வம் உணாவே மாமரம் புட்பறை**
**செய்தி யாழின் பகுதியொடு தொகைஇ**
**அவ்வகை பிறவும் கருவென மொழிப்"**
**(தொல். பொருள். அகத்.20)**

என்ற நூற்பாவில் தெய்வம், உணவு, விலங்கு, மரம், பறவை, பறை, தொழில், யாழின் பகுதி ஆகியனவும் பிறவும் கருப்பொருள்கள் என்று தொல்காப்பியர் கூறியுள்ளார்.

இந்நூற்பாவில் இளம்பூரணர் **‘பிறவும்’** என்று தொல்காப்பியர் குறித்துள்ளமையைக் கொண்டு நீர் என்பதைக் கருப்பொருளாகக் கொண்டு கான்யாறு, சுனைநீர், அருவி நீர், அறுநீர்க்கூவல் (பாலை), சுனை, ஆற்றுநீர், பொய்கை நீர், கேணி நீர், கடல் நீர் ஆகியவற்றைக் குறிப்பிட்டுள்ளார். (தொல். பொருள். அக.20)

நச்சினார்க்கினியரும் இளம்பூரணர் போலவே நீர் என்பதைக் கருப்பொருள்களுள் ஒன்றாகக் கொண்டு கான்யாறு, அருவி, சுனை, ஆற்றுநீர், மனைக்கிணறு, பொய்கை, மணற்கிளை, உவர்க்குழி, அறுநீர்க்கூவல், சுனை ஆகியவற்றை அதனில் கூறியுள்ளார். மேலும் இளம்பூரணர் கூறாத ஊர் என்பதையும் கருப்பொருளாகக் கொண்டு பாடி, சேரி, சிறுகுடி, குறிச்சி, ஊர், பட்டினம், பாக்கம், பறந்தலை ஆகியவற்றை அதனில் சேர்த்துக் கூறியுள்ளார்.

நம்பியகப் பொருள் ஆசிரியரும் ஊர், நீர் ஆகியவற்றைக் கருப்பொருளில் சேர்த்துள்ளார். சிறுகுடி, பாடி, பேரூர், மூதூர், பாக்கம், பட்டினம், கல்கெடி குறும்பு ஆகியவற்றை ஊர்வகையோடு சேர்த்துள்ளார். அருவி, நறுஞ்சுனை, குறுஞ்சுனை, கானியாறு, ஆறு, மனைக்கிணறு, உவநீர்க்கேணி, கவர்நீர், குழிவறுங்கூவல் ஆகியவற்றை நீர்வகையோடு சேர்த்துக் கூறியுள்ளார்.

சங்கம், சங்கம் மருவிய கால அகப்பாடல்களில் பெரும்பான்மையாக இடம்பெற்றுள்ள விலங்கு, பிற உயிரினம், பறவை, தாவரம் இவை மட்டுமே கருப்பொருள் ஆராய்ச்சியில் எடுத்துக் கொள்ளப்பட்டன.

சங்க இலக்கிய கருப்பொருள் பற்றி பட்டியல்கள் குறித்து (பாட்டும் தொகையும், மற்றே அண்டு கம்பெனி 1958) வெளியிட்டமையால் சங்கம் மருவிய கால கருப்பொருள் பட்டியல்கள் மட்டும் இங்கு ஒப்பாய்வு நோக்கில் எடுத்தாளப்படுகின்றன.

## சங்கம் மருவிய கால அகப்பாடல்களில் விலங்குகள்

| திணை | விலங்குகள் |
| --- | --- |
| குறிஞ்சித்திணை | **யானை, புலி, பெற்றம், பன்றி, குரங்கு, மான், ஆடு ஆகியவை வந்துள்ளன**<br>1. யானை (திணை. ஐம். 6:1, திணை. நூற். 2:3, 11:4, 14:3, 22:1)<br>யானையின் மாற்றுப்பெயரான வேழம் (கைந். 8:1, 9:1, திணை. நூற்.25:1)<br>யானையின் மாற்றுப் பெயர் நாகம் (திணை. நூற். 7:1, 13:3)<br>ஆண் யானை களிறு (திணை. ஐம். 8:4, ஐந்.ஐம். 12:1)<br>பெண் யானை பிடி (கைந். 5:2)<br>2. புலி (திணை. நூற். 22:1)<br>வேங்கை (திணை. நூற். 7:2, 20:2, 26:2, 31:4)<br>குயவரி (திணை. நூற். 25:1)<br>3. பெற்றம் பொதுப்பெயர் காணப்படவில்லை<br>பெண்பாற் பெயர் ஆமா (ஐந்.ஐம். 4:3)<br>இளமைப் பெயர் கன்று (மேலது. 4:2)<br>4. பன்றி பொதுப்பெயர் காணப்படவில்லை<br>கேழல் (கைந். 11:1, ஐந்.ஐம். 11:1)<br>5. குரங்கு பொதுப்பெயர் காணப்படவில்லை<br>ஆண்பாற்பெயர் கடுவன் (கைந்.7:1, திணை.ஐம். 10:1, ஐந்.ஐம். 11:2)<br>பெண்பாற் பெயர் மந்தி (கைந். 3:2, 6:2, திணை.ஐம். 2:2, ஐந்.எழு. 4:2, திணை. நூற். 10:1)<br>கடுவன் இணை (திணை. நூற். 1:3)<br>முசு (கைந். 4:2, ஐந்.எழு. 9:1)<br>6. மான் (கைந். 1:2, திணை. நூற். 7:3, ஐந்.ஐம்.13:2)<br>மரை (ஆண் மான்) (திணை. நூற் 1:3)<br>மரையான் (பெண்மான்) (ஐந்.எழு. 10:2)<br>குழவி (இளமைப்பெயர்) (மேலது.) |

| | |
|---|---|
| **முல்லைத்திணை** | **மான், குதிரை, குரங்கு, பெற்றம், யானை, நரி, பன்றி ஆகியவை வந்துள்ளன.**<br>1. மான் பற்றிய பொதுப்பெயர் காணப்படவில்லை ஆண் மானாகிய கலை, இரலை, மடமான் ஆகியவை வந்துள்ளன.<br>கலை (ஐந்.எழு. 20:1)<br>இரலை (கைந்.29:2)<br>மடமான் (திணை.ஐம். 25:3)<br>மறி (இளமைப்பெயர்) (திணை.நூற். 102:1)<br>பிணை (பெண் மான்) (திணை.ஐம்.25:1, திணை.நூற். 102:1 கைந். 29:2)<br>2.குதிரை பற்றிய பொதுப்பெயர் காணப்படவில்லை.<br>குதிரை மாற்றுப் பெயரான மான், கலிமா, கலி, கடுமான் ஆகியவை வந்துள்ளன.<br>மான் (திணை.நூற். 113:4)<br>கலிமா (கார். 22:2)<br>கலி (கைந். 33:3)<br>2. குரங்கு பற்றிய பெயர் பொதுவாகக் காணப்படவில்லை. பெண்பாற் பெயரான மந்தி ஓரிடத்தில் வந்துள்ளது.<br>மந்தி (கைந். 36:2)<br>3. பெற்றம் பற்றி வரவில்லை. இதன் ஆண்பாற் பெயரான இடபம், பெண்பாற் பெயரான ஆன், இளமைப்பெயர் கன்று, குழுப்பெயரான ஆவினம், பெற்றம் வகையான எருமை ஆகியவை வந்துள்ளன.<br>இடபம் (கைந். 36:4)<br>ஆன் (ஐந்.எழு. 22:2)<br>கன்று (மேலது. 22:2)<br>ஆவினம் (திணை.ஐம். 27:1, ஐந்.எழு.22:2)<br>எருமை (கார். 31:2)<br>4. யானை பற்றிய பொதுப்பெயர் காணப்படவில்லை.<br>யானை பற்றிய பெயரான குஞ்சரம், வேழம், நாகம் ஆகியவை வந்துள்ளன. யானையின் ஆண்பாற் பெயர் களிறு, பெண்பாற் பெயர் பிடி ஆகியவை வந்துள்ளன.<br>குஞ்சரம் (கார்.12:3)<br>வேழம் (மேலது, 38:2)<br>நாகம் (திணை.நூற். 117:2)<br>களிறு (கார். 13:2, 24:2, திணை.நூற். 97:1)<br>பிடி (கார். 38:2) |

| | |
|---|---|
| | 5. நரி (திணை.நூற். 113:2)<br>6. பன்றி பொதுப்பெயர் வரவில்லை ஏனம் (திணை.நூற். 122:2) |
| **மருதத்திணை** | பெற்றம் என்பது பொதுவாகக் குறிப்பிடவில்லை. ஆண்பாற் பெயரான எருது, இளமைப் பெயரான கன்று, வகையான எருமை ஆகியன இடம் பெறுகிறது.<br>எருது (திணை.நூற். 139:2)<br>கன்று (திணை.நூற். 138:1, 148:3)<br>எருமை (கைந். 37:2, திணை.ஐம். 31:1, ஐந். ஐம். 46:1, திணை.நூற்.137:1, 147:1, 148:1) |
| **நெய்தல் திணை** | குதிரை மட்டும் வந்துள்ளது. குதிரை பற்றிய பொதுப்பெயர் காணப்படவில்லை. குதிரை பற்றிய பெயரான மா, பரிமா,கடுமான், புரவி ஆகியவை இடம் பெற்றுள்ளன<br>மா (திணை.நூற். 54:2)<br>பரிமா (ஐந்.ஐம். 50:1)<br>கடுமான் (ஐந்.எழு. 59:2)<br>புரவி (திணை. நூற். 53:1) |
| **பாலைத்திணை** | **நாய், யானை, பெற்றம், புலி, மான், எண்கு (கரடி) வெருகு (காட்டுப் பூனை) ஆகியவை இடம் பெற்றுள்ளன.**<br>1. நாய் (கைந். 14:1)<br>2. யானை (திணை.நூற். 78:1, 86:3, ஐந்.எழு. 37:2)<br>குஞ்சரம் (ஐந்.எழு. 29:1)<br>கோண்மா (ஐந்.எழு. 29:3)<br>வேழம் (கைந். 16:2, 17:2)<br>களிறு (கைந். 19:2, ஐந்.ஐம். 32:2, ஐந்.எழு. 41:1)<br>பிடி (கைந். 17:2, ஐந்.ஐம். 32:2, 36:2, ஐந்.எழு. 37:2)<br>3. பெற்றம் பொதுப் பெயர் வரவில்லை<br>எருது (கைந்.13:4)<br>ஆமா (பெண்பாற்பெயர்) (கைந். 18:1)<br>கடமா (பெண்பாற் பெயர்) (திணை.நூற். 84:1, கைந்.17:1)<br>இதடி(எருமை) (திணை.நூற். 83:3)<br>4. புலி (ஐந்.எழு. 29:1)<br>வேங்கை (கைந். 16:2 : திணை.நூற். 31:2)<br>கொடுவரி (ஐந்.எழு. 38:1, 39:1)<br>5. மான் (கை.24:1, திணை.ஐம். 19:1)<br>கலைமா (ஆண்பாற் பெயர்) (திணை.ஐம். |

| | |
|---|---|
| | 19:1, ஐந்.ஐம்.38:2)<br>பிணைமா (பெண்பாற்பெயர்) (ஐந்.ஐம்.38:2)<br>6. எண்கு (கரடி) (ஐந்.எழு.32:2)<br>7. வெருகு (காட்டுப்பூனை) (ஐந்.எழு.36:2) |

## சங்கம் மருவிய கால அகப்பாடல்களில் பறவைகள்

| திணை | பறவைகள் |
|---|---|
| குறிஞ்சித்திணை | **கிளி, மயில் ஆகியவை வந்துள்ளன. மயில் என்பது மஞ்சை என்னும் பெயரிலும் வந்துள்ளது.**<br>1. கிளி (கைந்.1:1, ஐந்.ஐம்.18:2, ஐந்.எழு. 13:1, திணை.நூற்.3:3)<br>2. மயில் (திணை.நூற். 3:3, 5:3)<br>மஞ்ஞை (கைந்.11:2) |
| முல்லைத்திணை | **கோழி, குயில், சிரல், அன்றில், மயில் ஆகியவை வந்துள்ளன. பொதுவாக ஆண், பெண், இளமைப்பெயர், குழு, வகை ஆகியவை இதனுள் அடங்கி வருவனவாகும்.**<br>1. கோழி பற்றிய பொதுப்பெயர் வரவில்லை சேவல் (கைந்.26:2)<br>2. குயில் (கார்.16:1)<br>3. சிரல் (கார். 36:3)<br>4. அன்றில் (திணை.நூற். 121:3)<br>5. மயில் (கைந்.36:2, கார்.16:1, ஐந்.எழு.19:2, திணை.நூற்.107:1, 111:3)<br>6. மஞ்ஞை (கார்.4:1, ஐந்.எழு.16:2, ஐந்.ஐம். 2:1) |
| மருதத்திணை | **தாரா, கொக்கு, குருகு, அன்னம், சிரல், கோழி ஆகியவை மட்டும் இடம்பெறுகிறது.**<br>1. தாரா (கைந்.41:1, திணை.நூற்.139:3)<br>2. கொக்கு (கைந்.48:1)<br>3. குருகு (ஐந்.ஐம்.24:1, திணை.நூற். 139:2)<br>4. அன்னம் (திணை.நூற்.139:2) அன்னச்சேவல் (ஆண்பாற்பெயர்) (திணை.நூற்.142:1), அன்னப்பெடை (பெண்பாற்பெயர்) (திணை.நூற்.142:1)<br>5. சிரல் (திணை.நூற். 141:2)<br>6. கோழி (திணை.நூற். 143:3) |
| நெய்தல்திணை | **அன்றில், நாரை, கொக்கு, குருவி,குயில், மயில், பருந்து ஆகியவை மட்டும் இடம்பெறுகிறது.**<br>1. அன்றில் (கைந்.50:2,57:1, ஐந்.எழு. 64:2)<br>கோழி (அன்றிலின் ஆண்பெயர்) (ஐந்.ஐம். 41:3)<br>2. நாரை (ஐந்.எழு.68:2, கைந்.54:4)<br>நாரைப்பிள்ளை (ஐந்.எழு. 68:2)<br>3. குருகு (கை.ந்.59:1, ஐந்.எழு. 57:1, 65:4, திணை.நூற்.36:3, ஐந்.ஐம்.45:4), குருகுப்பார்ப்பு |

| | |
|---|---|
| | (திணை.நூற். 36:2)<br>4. கொக்கு (கைந். 55:1)<br>5. குயில் (திணை.ஐம். 49:2)<br>6. மயில் (திணை.ஐம். 49:1)<br>7. பருந்து (பாறு) (திணை.நூற்.53:1) |
| **பாலைத்திணை** | **குயில், புறவு, பருந்து, கிளி, கழுகு, ஆந்தை, இதல் (காடை) கோழி ஆகியவை இடம்பெறுகிறது.**<br>1. குயில் (திணை.ஐம். 13:4, 14:2)<br>2. புறவு (திணை.ஐம். 15:1)<br>புறவுச் சேவல் (திணை.நூற். 74:1)<br>புறவுப் பெடை (திணை.நூற். 74:1)<br>3. பருந்து (திணை.நூற். 74:1)<br>பாற்றினம் (பருந்து குழுப்பெயர்) (திணை.ஐம்.20:2)<br>4. கிளி (ஐந்.ஐம்.33:1)<br>தத்தை (திணை.நூற். 73:3)<br>5. கழுகு (திணை.நூற். 91:3)<br>6. ஆந்தை (கைந்.21:1, ஐந்.எழு. 110:1)<br>7. இதல் (ஐந்.எழு. 35:2)<br>8. சேவல் (கோழியின் ஆண்பெயர்) (ஐந்.எழு. 31:1, 35:2) |

## சங்கம் மருவிய கால அகப்பாடல்களில் ஊர்வன

| திணை | ஊர்வன |
|---|---|
| **குறிஞ்சித்திணை** | **சங்கம் மருவிய கால அகப்பாடல்களில் ஊர்வன உயிரினங்களில் பாம்பு மட்டும் கூறப்பட்டுள்ளது. இதனுள், பாம்பு என்பது வந்துள்ளது. இது நாகம், சுரா என்னும் பெயரில் சுட்டப்படுகிறது.**<br>1. பாம்பு (கைந் 8:1, திணை.ஐம். 3:2)<br>2. நாகம் (திணை.நூற். 13:4)<br>3. அரா (ஐந்.எழு. 14:3) |
| **முல்லைத்திணை** | பாம்பு என்பதும், பாம்பின் பெயரான அரா, நாகம் என்பனவும் வந்துள்ளன. மேலும் தேரை என்பதும் வந்துள்ளது.<br>1. பாம்பு (கார். 11:3, 17:1, திணை.நூற். 119:3)<br>அரா (திணை. ஐம்.29:1, திணை.நூற். 96:3)<br>நாகம் (திணை.நூற். 107:3, 117:1, திணை.ஐம். 28:2)<br>2. தேரை (ஐந்.எழு. 23:1) |
| **மருதத்திணை** | 1. அரவம்(திணை.நூற். 145:2)<br>2. தவளை (திணை.நூற். 147:4) |
| **நெய்தல்திணை** | பாம்பு, பல்லி ஆகியவை வந்துள்ளன.<br>1. படம் (பாம்பு பற்றிய பெயர்) (திணை. ஐம்.45:2)<br>2. பல்லி (ஐந்.ஐம்.43:1) |

| | |
|---|---|
| **பாலைத்திணை** | 1. மாசுணம் (பாம்பின் வகை) (திணை.நூற். 75:3)<br>2. அணில் (ஐந்.எழு. 35:1)<br>3. பல்லி (ஐந்.எழு 41:4, கைந்.18:4) |

## சங்கம் மருவிய கால அகப்பாடல்களில் நீர்வாழ்வன

| திணை | நீர்வாழ்வன |
|---|---|
| **குறிஞ்சித்திணை** | **நீர்வாழ்வன** காணப்படவில்லை |
| **முல்லைத்திணை** | அலவன் என்பது ஓரிடத்தில் வந்துள்ளது<br>1. அலவன் (கார். 39:1) |
| **மருதத்திணை** | மீன் என்பதும் மீனின் வகையான கயல், வாளை, வரால், இறால் ஆகியனவும் வந்துள்ளன.<br>1. மீன் (கைந். 38:1, 39:2, திணை.நூற். 147:3)<br>கயல் (திணை.நூற். 149:3)<br>வாளை (திணை.ஐம்.39:2, ஐந்.ஐம். 24:1)<br>வரால் (ஐந்.எழு. 54:3)<br>இறால் (திணை.நூற். 131:1, 131:2) |
| **நெய்தல்திணை** | மீன், நண்டு என்பன வந்துள்ளன. பொதுவாக இதனுள் ஆண், பெண், இளமைப்பெயர், குழு, வகை ஆகியவை வருவதற்குரியன.<br>1. மீன் (கைந்.53:3, 56:2, திணை.ஐம். 44:1, ஐந்.ஐம்.47:2, ஐந்.எழு.66:2, 68:1)<br>**<u>மீனின் வகைகள்</u>**<br>அ. கயல் (கைந்.55.3)<br>ஆ. சுறா (கைந்.58:1, திணை.ஐம்.43:1, ஐந்.எழு. 65:1)<br>சுறாவின் பெயரான மகரம் (திணை.நூற். 46:3)<br>மறிமகரம் (இளமைப்பெயர்) (மேலது)<br>இ. இறால் (கைந்.49:2, 54:1, 58:2, திணை. ஐம். 43:2)<br>2. அலவன் (ஐந்.எழு.67:2, திணை.நூற். 40:1)<br>பெண்நண்டு அலவன் பெடை (ஐந்.எழு.67:2)<br>அலவன் துணை (திணை.நூற்.40:1) |
| **பாலைத்திணை** | நீர்வாழ்வன, ஈண்டுக் காணப்படவில்லை. |

## சங்கம் மருவிய கால அகப்பாடல்களில் பூச்சிவகைகள்.

| திணை | பூச்சி வகைகள் |
|---|---|
| குறிஞ்சித்திணை | வண்டும், இதன் பெயரான சுரும்பு என்பதும் இதனுள் வந்துள்ளன.<br>1. வண்டு (திணை.ஐம். 9:3, ஐந்.எழு. 3:2)<br>2. சுரும்பு (ஐந்.எழு. 12:3) |
| முல்லைத்திணை | தும்பி, வண்டு அகியவை வந்துள்ளன.<br>1. தும்பி (ஐந்.ஐம்.6:1, கார். 15:3)<br>2. வண்டு (கார் 4:3, 15:2, 29:2, 32:3 ஐந்.எழு. 15:2, 25:2 திணை.நூற்.93:3, 101:1, 101:2, 102:3, 111:2,120:3)<br>3. தேன் (திணை நூற். 102:3, 106:3, 120:3) |
| மருதத்திணை | வண்டு (கைந்.44:2, திணை.ஐம்.35:2, ஐந்.ஐம்.22:1) |
| நெய்தல்திணை | இதனுள் வண்டைக் குறிக்கும் தேன் என்பது (திணை.நூற்.47) வந்துள்ளது |
| பாலைத்திணை | 1. வண்டு (திணை.16:2, திணை.நூற்.63:2,72:3)<br>சிதடி (வண்டின் பெயர்) (திணை.நூற். 83:4)<br>சிள் (வண்டின் பெயர்) (திணை.நூற். 92:1) |

## சங்கம், சங்கம் மருவிய கால அகப்பாடல்களில் தாவரம்

| திணை | மரங்கள் |
|---|---|
| குறிஞ்சித்திணை | சந்தனம், சந்தனத்தின் மாற்றும் பெயரான சாந்தம் என்பதும், வேங்கை, வேங்கையின் மாற்றுப் பெயரான திமிசு என்பதும், வாழை என்பதும் பயின்று வந்துள்ளன. மேலும் பலா, பலாவின் பெயரான வருக்கை என்பதும் அகில், நாகம், பனை தகரம், வகுளம், விசை, செயலை, சுள்ளி, அமை, மராம் ஆகியவையும் அமைந்துள்ளது.<br>1. சந்தனம் (கைந். 2:2)<br>சாந்தம் (திணை.நூற்.1:1,3:1,3:2,28:1)<br>2. வேங்கை (கைந்.10:1, திணை.ஐம்.8:1,9:3, ஐந்.ஐம்.11:1,15:1, ஐந்.எழு.6:1, திணை.நூற்.18:1, 20:1, 26:1, 27:1, 33:3)<br>திமிசு (திணை.நூற். 28:1)<br>3. வாழை (கைந்.7:1, ஐந்.எழு.11:2)<br>4. பலா (திணை.ஐம்.10:1, ஐந்.எழு.4:1, திணை.நூற்.29:1, கைந்.4:1)<br>5. வருக்கை (திணை.நூற்.14:1,28:1)<br>6. நாகம் (கைந்.2:1, திணை.நூற்.28:2)<br>7. பனை (திணை.ஐம்.9:1, திணை.நூற்.12:4)<br>8. தகரம் (திணை.நூற். 24:1)<br>9. வகுளம் (திணை.நூற். 24:1) |

| | |
|---|---|
| | 10. விசை (திணை.நூற். 28:1)<br>11. செயலை (திணை.நூற்.2:1)<br>12. சுள்ளி (திணை.நூற்.2:1)<br>13. அமை (திணை.நூற். 2:1)<br>14. மராம் (ஐந்.எழு. 12:2) |
| முல்லைத்திணை | **குருந்து,கொன்றை, அசோகம், மூங்கில், வாகை, ஈச்சம், சந்தனம், புன்னை, பிடவம், நொச்சி, பாதிரி, கருவிளம், குமிழம் ஆகியவை இதனுள் வந்துள்ளன.**<br>1. குருந்து (கைந்.25:2, 26:1, 29:1, 36:1, கார் 15:2, திணை.நூற்.93:3, 105:4, 112:3, 114:3, 116:1)<br>2. கொன்றை (ஐந்.எழு.18:2, 22:1, திணை.நூற்.(104:4, 109:2, 116:1)<br>கடுக்கை (கொன்றை) (கார்.4:2, திணை.நூற்.98:1, 120:2)<br>3. அசோகின் பெயர்கள் செயலை, பிண்டி செயலை (கார்.16:3) பிண்டி (கைந்.36:1)<br>4. பனை (மூங்கில்) (ஐந்.எழு.16:1, திணை.நூற்.115:1)<br>வேய் (திணை.நூற்.116:3)<br>5. பாண்டில் (வாகை) (ஐந்.எழு.25:1)<br>6. இந்து (ஈச்சமரம்) (கார்.40:3)<br>7. ஆரம் (சந்தனம்) (திணை.நூற்.106:2)<br>8. நாகம் (புன்னை) (திணை.நூற்.117:1)<br>9. பிடவம் (கைந்.26:2, 36:1, கார்.32:4)<br>10. நொச்சி (கார்.39:2)<br>11. கருவிளம் (கார்.9:1)<br>12. பாதிரி (கார்.3:1)<br>13. குமிழம் (கார்.28:1) |
| மருதத்திணை | **காஞ்சி, மருது, வாழை, புளி, சாந்து (சந்தனம்) கோல் (மூங்கில்), உழலை, வஞ்சி ஆகியவை இடம்பெறுகிறது.**<br>1. காஞ்சி (கைந்.46:1, திணை.ஐம்.33:1, திணை.நூற்.139:1)<br>2. மருது (திணை.ஐம்.32:1, திணை.நூற்.139:1)<br>3. வாழை (திணை.நூற்.140:1)<br>4. புளி (திணை.நூற்.142:3)<br>5. சாந்து (திணை.நூற்.143:1)<br>6. கோல் (திணை.நூற். 151:1)<br>7. உழலை (ஐந்.எழு.46:1)<br>8. வஞ்சி (ஐந்.எழு.43:2) |
| நெய்தல்திணை | **பனை, புன்னை, தாழை, ஞாழல், தில்லை, கண்டல் ஆகியவை இத்திணையில் இடம்பெறுகிறது.**<br>1. பனை (கைந்.50:2,57:1)<br>பெண்ணை (பனை) (ஐந்.எழு.64:2)<br>2. புன்னை (கைந்.52:2, 54:2, திணை.ஐம்.42:1, ஐந்.ஐம்.43:1, ஐந்.எழு.58:3, திணை.நூற்.35:1, |

| | |
|---|---|
| | 44:1)<br>3. தாழை (கைந்.59:1)<br>கைதை (தாழை) (திணை.ஐம்.41:2)<br>4. ஞாழல் (திணை.நூற்.44:3)<br>5. தில்லை (திணை.நூற்.61:2)<br>6. கண்டல் (திணை.நூற்.61:3) |
| **பாலைத்திணை** | **ஓமை, மரா, குருந்து, நுணா, மூங்கில், கடு, பிண்டி, கோங்கம், புன்கு, குரவம், முருங்கை, முருக்கம், முருக்கு, முதுமரம் (ஆலமரம்) ஆகியவை இத்திணையில் இடம்பெற்றுள்ளது.**<br>1. ஓமை (கைந்.191, ஐந்.எழு.37:2, திணை.நூற்.91:1)<br>2. மரா (திணை.ஐம்.13:2, 16:2)<br>3. குருந்து (திணை.ஐம்.13:1)<br>4. நுணா (திணை.ஐம்.16:1)<br>5. ஆமை (மூங்கில்)(ஐந்.ஐம்.34:1)<br>வேய் (திணை.நூற்.77:2, 91:2)<br>வெதிர் (திணை.ஐம்.18:2)<br>6. கடு (ஐந்.எழு.39:2)<br>7. பிண்டி (திணை.நூற்.63:1)<br>8. கோங்கம் (திணை.நூற்.63:3, 65:1, 70:2)<br>9. புன்கு (திணை.நூற்.64:4)<br>10. குரவம் (திணை.நூற்.65:2)<br>11. முருங்கை (திணை.நூற்.91:1)<br>முருக்கம் (திணை.நூற்.67:3)<br>முருக்கு (ஐந்.ஐம்.31:2, திணை.நூற்.64:3, 66:1)<br>12. முதுமரம் (ஐந்.எழு.40:1) |

## சங்கம் மருவிய கால அகப்பாடல்களில் செடிகள்

| திணை | செடிகள் |
|---|---|
| **குறிஞ்சித்திணை** | காந்தள் (திணை.ஐம். 2:1, 3:1) |
| **முல்லைத்திணை** | காயா, காந்தன், குருக்கத்தி ஆகியவை வந்துள்ளன.<br>1. காயா (திணை.ஐம்.21:1, கார்.8:3, திணை.நூற்.107:1)<br>2. காந்தளின் பெயரான கோடல், தோன்றி வந்துள்ளன<br>கோடல் (திணை.நூற்.21:3, திணை.ஐம்.29:1, ஐந்.எழு.17:1)<br>தோன்றி (கைந்.26:1, கார்.26:3, திணை.நூற்.118:2)<br>3. குருகு (திணை.ஐம். 21:1, 30:1, கார். 27:2) |
| **மருதத்திணை** | 1. முளரி (திணை.நூற்.126:2)<br>2. கரும்பு (திணை.நூற்.137:2) |
| **நெய்தல்திணை** | செடி ஈண்டுக் காணப்படவில்லை |

| | |
|---|---|
| **பாலைத்திணை** | 1. கள்ளி (திணை.நூற்.91:1)<br>2. மரல் (ஐந்.எழு. 31:1)<br>3. காந்தன் (திணை.நூற். 72:2) |

## சங்கம் மருவிய கால அகப்பாடல்களில் கொடிகள்

| திணை | கொடிகள் |
|---|---|
| **குறிஞ்சித்திணை** | **அவரை, குளவி, கறி (மிளகு) ஆகியவை இடம்பெற்றுள்ளன.**<br>1. அவரை (ஐந்.எழு.1:1)<br>2. குளவி (ஐந்.எழு.8:1)<br>3. கறி (ஐந்.எழு.82, திணை.நூற்.7:1) |
| **முல்லைத்திணை** | பீர், வள்ளி, தெறுழ், கழல், முல்லை ஆகியவை இடம்பெற்றுள்ளன<br>1. பீர் (ஐந்.ஐம்.2:4, திணை.நூற். 116:3, 118:2)<br>2. வள்ளி (ஐந்.ஐம். 8:1)<br>3. தெறுழ் (கார்.25:2)<br>4. கழல் (திணை.நூற்.98:3)<br>5. முல்லை (கைந்.25:1, 34:1, கார் 14:3, திணை.நூற்.112:3)<br>6. தளவம் (முல்லை) (ஐந்தி.எழு. 24:2, திணை.நூற். 105:3, 110:3) |
| **மருதத்திணை** | முல்லை, தாமரை, ஆம்பல், அல்லி, நீலம் (நீலோற்ப மலர்), குவளை, செங்கழுநீர் ஆகியவை இடம்பெறுகிறது.<br>1. தாமரை (கைந்.43:1,47:1, திணை.நூற்.36:1,40:4, ஐந்.ஐம்.25:1, ஐந்.எழு.50:1, 51:2 திணை.நூற்.129:1, 138:1, 140:2, 12:1)<br>2. ஆம்பல் (கைந் 47:1, திணை.ஐம். 40:3)<br>3. அல்லி (கைந். 47:2)<br>4. நீலம் (திணை.ஐம்.32:2, 39:1, 40:3 ஐந்.ஐம்.24:2)<br>5. குவளை (திணை.நூற்.147:3)<br>6. செங்கழுநீர் (திணை.நூற். 144:2) |
| **நெய்தல்திணை** | அரும்பு, பீர்க்கம், தாமரை, நீலம், நெய்தல், முண்டகம் ஆகியவை இடம்பெறுகிறது.<br>1. அடும்பு (கைந்.53:1, ஐந்.எழு.62:1)<br>2. தாமரை (திணை.நூற்.32:1)<br>3. நீலம் (திணை.நூற்.32:1)<br>4. நெய்தல் (கைந்.51:1, திணை.ஐம்.41:1, ஐந்.எழு.60:1, 63:1)<br>பானல் (நெய்தல்) (திணை.நூற்.32:1)<br>5. முண்டகம் (ஐந்.எழு. 61:3) |
| **பாலைத்திணை** | 1. முல்லை (திணை.நூற். 81:1)<br>2. பீர் (ஐந்.எழு. 32:1) |

**சங்கம் மருவிய கால அகப்பாடல்களில் கருப்பொருள்**

சங்கம் மருவிய கால அகப்பாடல்களில் பெற்றம், பன்றி, குரங்கு, மான், குதிரை, யானை, பன்றி இவற்றின் பொதுப்பெயர் காணப்படவில்லை. பெற்றம், குறிஞ்சி, முல்லை, மருதம், பாலைத் திணைகளில் பயின்று வந்துள்ளது. குதிரை நெய்தல் திணையில் மட்டும் வந்துள்ளது. மருதத்திணையில் பெற்றம் மட்டுமே வந்துள்ளது. நாய், பூனை, கரடி ஆகியவை பாலைத்திணையில் மட்டுமே வந்துள்ளது.

குறிஞ்சி, முல்லை, மருதம், நெய்தல், பாலை உட்பட ஐந்திணைகளிலும் பாம்பு பயின்று வந்துள்ளது. தேரை முல்லைத்திணையில் மட்டும் வந்துள்ளது. தவளை மருதத்திணையில் மட்டும் வந்துள்ளது. நெய்தல், பாலைத் திணைகளில் பல்லி பயின்று வந்துள்ளது. அணில் பாலைத் திணையில் மட்டும் சுட்டப்பட்டுள்ளது.

குறிஞ்சி, முல்லை, பாலை ஆகிய திணைகளில் நீர்வாழ்வன காணப்படவில்லை. முல்லை, நெய்தல் திணையில் அலவன் வந்துள்ளது. மருதம், நெய்தல் திணையில் மீன் மற்றும் மீனின் வகைகள் பயின்று வந்துள்ளன. சுறா, நெய்தல் திணையில் மட்டுமே வந்துள்ளது.

ஐந்திணைகளிலும் வண்டு பயின்று வந்துள்ளது. முல்லைத் திணையில் தும்பி வந்துள்ளது. வண்டின் மாற்றுப் பெயரான சிதடி, சிள் பாலைத் திணையில் வந்துள்ளது.

கிளி, குறிஞ்சி, பாலைத்திணைகளிலும் குறிஞ்சி, முல்லை, நெய்தல் திணைகளில் மயிலும், முல்லை, மருதம், பாலைத் திணைகளில் குயிலும் பயின்று வந்துள்ளன. தாரா, அன்னம் மருதத்திணையிலும் நாரை நெய்தல் திணையிலும், பருந்து நெய்தல், பாலைத்திணைகளிலும், புறவு பாலைத் திணையிலும், கழுதை, ஆந்தை, காடை முதலியவை பாலைத் திணையிலும் பயின்று வந்துள்ளன.

ஐந்திணைகளிலும் மரங்களைப் பற்றிய அதிகமான குறிப்புகள் திணைமாலை நூற்றைம்பதில் இடம் பெற்றுள்ளன.

காந்தள் மலரைப் பற்றிய குறிப்புகள் குறிஞ்சித் திணையிலும் காயா, காந்தள், குருக்கத்தி, குருகு பற்றிய குறிப்புகள் முல்லைத்திணையிலும் முளரி, கரும்பு பற்றிய குறிப்புகள் மருதத்திணையிலும், கள்ளி, மரல், காந்தள் பற்றிய குறிப்புகள் பாலைத் திணையிலும் இடம் பெற்றுள்ளன. நெய்தல் திணையில் செடிகள் பற்றிய குறிப்புகள் காணப்படவில்லை.

கறி (மிளகு) குறிஞ்சி நிலத்தில் மட்டுமே உள்ளது. முல்லைக் கொடி பற்றி முல்லை, மருதம், பாலை நிலத்திலும், பீா பற்றி முல்லை, நெய்தல், பாலை நிலத்திலும், தாமரை மருதம், நெய்தல் நிலத்திலும் இடம் பெற்றுள்ளன.

**உரிப்பொருள்**

முதலும், கருவும் ஒரு பாடலில் காட்சியை உருவாக்குவதற்கான அடிப்படைகளாக உள்ளன. வெறும் காட்சிபடுத்தல் மட்டும் ஒரு பாடலின் நோக்கமன்று. ஒரு கருத்தினை வெளிப்படுத்துவதே பாடலின் நோக்கம் ஆகும். பாடலின் காட்சிக்குள் இருக்கும் கருத்தே பாடுபொருள் ஆகும். அப்பாடுபொருளை தொல்காப்பியர் உரிப்பொருள் என்கிறார். இதனை,

> **“புணர்தல் பிரிதல் இருத்தல் இரங்கல்**
> **ஊடல் இவற்றின் நிமித்தம் என்றிவை**
> **தேருங்காலை திணைக்குரிப் பொருளே”** **(தொல்.அகத்.16)**

என ஐந்திணைகளுக்கும் உரிய உரிப்பொருளைத் தொல்காப்பியம் சுட்டுகின்றது. இந்த உரிபொருளின் மூலமாகத்தான் பாடலின் உணர்ச்சியை புரிந்து கொள்ள முடிகிறது. முதற்பொருள், கருப்பொருள் ஆகியவை உரிப்பொருளுக்கு எவ்வாறு உதவுகின்றன என்றும்,

அவ்வுரிப்பொருள் சங்கம், சங்கம் மருவிய கால அகப்பாடல்களில் எவ்வாறு அமையப்பெற்றுள்ளன என்றும் ஆராயப்படுகின்றன.

## சங்க இலக்கியத்தில் உரிப்பொருள்

சங்க இலக்கியங்களில் உரிப்பொருள் அற்ற பாடல்கள் இல்லை. இதனை **"சங்க இலக்கியங்களில் உரிப்பொருள் அற்ற பாடல் எதையும் காண முடியாது. ஆனால் முதல், கருப்பொருள்கள் இல்லாத பாடல்கள் பலவற்றைக் (குறுந்.146, 206, 280, 337, 397) காண இயலும், கருப்பொருள் பயின்று வந்த பாடல்களும் கருப்பொருளுக்கான திணையைப் பெறாமல் உரிப்பொருள் சார்ந்து திணை பெற்றுள்ளன. (குறுந். 196, 202) உரிப்பொருளை வெளிப்படையாகக் சுட்டாமல் முதல், கருப்பொருள்கள் மட்டும் ஒரு காட்சியை விளக்கிவிட்டுச் செல்லும்"** என்கிறார். **கே. பழனிவேலு (கூற்றுக் கோட்பாடும் தமிழ்க் கவிதையியலும், ப.24)**

தலைவன், தலைவி உறவில் ஏற்படும் உணர்ச்சிகளான புணர்தல், பிரிதல், இருத்தல், இரங்கல், ஊடல் என்பவை முதன்மைப் பொருளாக உள்ளன. மக்களின் ஒழுக்கமும் உணர்வும் சார்ந்த பகுதி உரிப்பொருள் என்பதாகும். புணர்தல், பிரிதல் என்னும் இந்நூற்பாவிற்கு உரையாசிரியர்கள் பின்வருமாறு விளக்கம் கூறுகின்றனர்.

## இளம்பூரணர் விளக்கம்

புணர்தல், பிரிதல், இருத்தல், இரங்கல், ஊடல் இவற்றின் நிமித்தம் என்னும் தொல்காப்பிய நூற்பாவிற்கு இளம்பூரணர் "இவ் உரிப்பொருளை ஆராயும் காலத்து ஐந்திணைக்குரிய உரிப்பொருளில் பிரிவு பாலைக்குத் தொல்காப்பியரால் சொல்லப்பட்டமையால் புணர்தல் என்பது குறிஞ்சிக்கும், இருத்தல் என்பது முல்லைக்கும், இரங்கல் என்பது நெய்தலுக்கும், ஊடல் என்பது மருதத்திற்கும் பெரும்பான்மையும் உரியதாகவும், சிறுபான்மை எல்லாப் பொருளும் எல்லாத்திணைக்கும் உரியதாகவும் சொல்லப்படும்" என்று கூறியுள்ளார்.

## நச்சினார்க்கினியர் விளக்கம்

நச்சினார்க்கினியர் புணர்தலும், புணர்தல் நிமித்தமும், பிரிதலும் பிரிதல் நிமித்தமும், இரங்கலும் இரங்கல் நிமித்தமும், ஊடலும், ஊடல் நிமித்தமும், இருத்தலும் இருத்தல் நிமித்தமும் என்பதையும் ஆராயுங்கால் ஐந்திணைகளுக்கும் உரியப் பொருளாம் என்று கூறியுள்ளார். அகப்பொருளாவது புணர்ச்சியாதலாலும் அது தலைவன் தலைவி இருவருக்கும் உரியதாதலாலும் புணர்ச்சியை முதலில் கூறியுள்ளார் என்றும் புணர்தல் இல்லா பிரிவு இல்லாமையானும் அது தலைவனிடத்து நிகழும் சிறப்பாலும் தலைவி பிரிவுக்குப் புலனெறி வழக்கம் இல்லாமையாலும் பிரிவினை இரண்டாவது கூறினார் என்றும் (தலைவன்) பிரிவில் தலைவி ஆற்றியிருப்பது முல்லை ஆதலின் அதனை மூன்றாவதாகக் கூறியுள்ளார் என்றும், அவ்வாறு ஆற்றி இருக்காமல் தலைவன் ஏவலில் சிறிது வேறுபட்டிருந்து இரங்குதல் பெரும்பான்மை தலைவிக்கே உரியதாதலின் இரங்கல் பொருளை நான்காவதாகக் கூறி இந்நான்கு பொருளுக்கும் பொதுவாதலாலும் காமத்திற்குச் சிறந்ததாதலாலும் ஊடலை ஐந்தாவதாகக் கூறி இவ்வாறு முறைப்படுத்தினர் என்பதும் நச்சினார்க்கினியர் விளக்கும் கருத்துக்களாகும்.

## சங்கம், சங்கம் மருவிய கால அகப்பாடல்களில் உரிப்பொருள்

### குறிஞ்சித்திணைப் பாடலும் உரிப்பொருளும்

தலைவன், தலைவியின் களவு ஒழுக்கம் புணர்தல் உரிப்பொருள் கொண்டதாகும். ஐங்குறுநூறு பாடலொன்றில்

**“சிலம்புகமழ் காந்த ணறுங்குலை யன்ன**
**நலம்பெறு கையினென் கண்புதைத் தோயே**
**பாயலின்றுணை யாகிய பணைத்தோட்**
**டோகை மாட்சிய மடந்தை**
**நீயல துளரோவென் னெஞ்சமர்ந் தோரே”** **(ஐங்.293)**

எனும் இப்பாடலில் சிலம்பிட மெல்லாம் மணம் கமழும் காந்தளின் நறிய பூக்குலை போன்ற அழகிய கைவிரல்களினாலே என் கண்களை புதைத்தவளே, பாயலின் கண் இனிய துணையாகிய பனைத் தோள்களையும், மயில் போன்ற சாயலையும் கொண்ட மடந்தையே, என் நெஞ்சிடத்தே அமர்ந்தோர் நீயே அல்லாது மற்று எவரேனும் உள்ளாரோ என இப்பாடலில் தலைவன் தன் நெஞ்சில் தலைவியைத் தவிர யாருமில்லை என்று அன்பினைக் குறிப்பால் உணர்த்தித் தலைவியின் மென்மையையும் சாயலையும் பாராட்டுவது வெளிப்படையாகக் தலைவன், தலைவியின் நலம் பாராட்டிக் கூறுவதாலும் புணர்தல் உரிப்பொருள் பயின்று வருவதைக் காணமுடிகின்றது.

சங்கம் மருவிய கால அகநூல்களில் ஒன்றான திணைமாலை நூற்றைம்பதில்,

**"கொல்யானை வெண்மருப்புங் கொல்வல் புலியதளு**
**நல்யானை நின்னையர் கூட்டுண்டு – செல்வார்தா**
**மோரம்பி னானெய்து போக்குவர் யான் போகாம**
**லீரம்பி னாலெய்தா யீன்று" (திணை.நூற்.22)**

நல்ல யானையைப் போன்ற உன் தமையன்மார்கள் கொல்லுகின்ற யானையின் வெண்மையான கொம்புகளையும், கொல்லும் வலிமைமிக்க புலியின் தோல்களையும் திரையாகக் கொண்டு செல்லும் பிறரை ஓர் அம்பினாலேயே தாக்கி அழிப்பர். ஆனால் நீயோ என்னைப் போகவிடாமல் நின் இரண்டு அம்பினால் எய்து விட்டாய் என அமைகிறது. இப்பாடலில் தலைவனும், தலைவியும் இணைந்த முதல் சந்திப்பில் தலைவன் தலைவியைக் கண்டதால் தனக்கு நேர்ந்த துன்பத்தை எடுத்துரைப்பதை உணரலாம். இந்நிலையில் பாடலில் புணர்தல் உரிப்பொருள் அமைந்து வருவது உணரத்தக்கது ஆகும்.

சங்க அகப்பாடலில் உரிப்பொருளுக்கு வலிமை சேர்க்கும் விதமாக முதற்பொருள், கருப்பொருளும் அமையப்பெற்று நீண்ட

வர்ணனைகளைக் கொண்டுள்ளது. சங்கம் மருவிய காலத்தில் உரிப்பொருளுக்கு அரண் செய்யும் விதமாக கருப்பொருள் மட்டுமே பயன்படுத்தப்பட்டுள்ளது.

## முல்லைத்திணைப் பாடலும் உரிப்பொருளும்

தலைவன், தலைவியின் கற்பொழுக்கத்திற்கு உரியது இருத்தல் உரிப்பொருளாகும். இதனை

**"அஞ்சிறை வண்டி னரியின மொய்ப்ப**
**மென்புல முல்லை மலரு மாலைப்**
**பையு ணெஞ்சிற் றைய லுவப்ப**
**நுண்புரி வண்கயி றியக்கிநின்**
**வண்பரி நெடுந்தேர் கடவுமதி விரைந்தே" (ஐங்.489)**

எனும் இப்பாடலில் அழகிய சிறகுகளையுடைய அழகிய வண்டினங்கள் சூழ்ந்து மொய்க்கும் படியான மென்மையுடைய நிலத்தில் முல்லைக் கொடிகள் மலர்ந்து நிற்கும் மாலைப் பொழுதில் நம் வரவினை எதிர்பார்த்து துன்புறுகின்ற நெஞ்சினை உடைய தலைவி மகிழும் படி குதிரையின் கடிவாளத்தில் உள்ள நுண்ணிய கயிற்றை இழுத்து பிடித்து விரைந்து தேரை செலுத்துவாயாக எனும் இப்பாடல் இருத்தல் உரிப்பொருள் வெளிப்படுத்துகிறது. இவ்வுரிப்பொருள் வெளிப்பாடு இதே நிலையில் சங்க மருவிய கால அகப்பாடலிலும் காணப்படுகிறது.

**"தேரோன் மலை மறைந்து செக்கர்கொள் புன்மாலை**
**யாரான்பி னாய னுவந்தூதுஞ் - சீர்சால்**
**சிறுகுழ லோசை செறிதொடி! வேல்கொண்டு**
**டெறிவது போலு மெனக்கு" (ஐந்.ஐம்.07)**

எனும் இப்பாடலில் ஒற்றையாழித் தேரோனாகிய சூரியன் மேற்குமலைத் தொடரில் மறைதலால் உண்டாகிய செவ்வானத்தைக் கொண்டுள்ள சிறுபொழுதாகிய மாலைக் காலத்தே, பசுக்கூட்டங்களின் பின்னாக வரும்

இடையன் மகிழ்ச்சி மிக்கவனாய் ஊதும்படியான சிறப்புமிக்க புல்லாங்குழலினது இனிய ஓசையானது தலைவிக்கு வேல்படை கொண்டு தாக்குவது போன்ற வருத்தத்தைத் தந்தது.

சங்கம், சங்கம் மருவிய கால முல்லைத் திணைப் பாடல்கள் இரண்டிலுமே இருத்தல் உரிப்பொருள் கூறும்போது சிறுபொழுதான மாலை பயின்று வந்துள்ளது. சங்க இலக்கிய முல்லைத்திணைப் பாடலில் தலைவி ஆற்றிருக்கும் உணர்வு தலைவன் தேர்பாகனை விரைவுபடுத்துவதன் மூலமாக உரிப்பொருளாகக் காட்சிப்படுத்தப்படுகிறது.

### மருதத்திணைப் பாடலும் உரிப்பொருளும்

கற்பு வாழ்வில் தலைவன், தலைவிக்கு இடையே நிகழும் ஊடலை உரிப்பொருளாகக் கொண்டது மருதத்திணை ஆகும். சான்றாக

**"துறைவ னணங்கும் யாமுற்ற நோயே**
**சிறையழி புதுப்புனல் பாய்ந்தெனக் கலங்கிக்**
**கழனித் தாமரை மலரும்**
**பழனவூர நீயுற்ற சூளே"          (ஐங்.53)**

எனும் இப்பாடலில் அணையை உடைத்துப் பாய்ந்துவரும் நீரானது கழனிகளில் உள்ள தாமரை மலர்களில் சேர்ந்து கலக்கிய பின்னர். மருத நிலத்திற்கு உரிய பொதுவான நிலத்தில் பாய்ந்து ஓடும் மருத நிலத் தலைவனானவன், தலைவியிடம் கூறிய சூள் மொழிகளை மறந்து பரத்தமை மேற்கொண்டதே தலைவியுற்ற நோய்க்கு காரணமாம் என்பது வெளிப்படுகிறது.

இவ்வுரிப்பொருள் சங்கம் மருவிய காலத்தில் திணைமாலை நூற்றைம்பது பாடலொன்றில்,

**"மருதோடு காஞ்சி யமர்ந்துயர்ந்த நீழ**
**லெருதோ குழல்கின்றா ரோதை – குருகோடு**

**தாராத்தோ ராய்ந்தெடுப்புந் தண்ணங் கழனித்தே**

**யூராத்தே ரான்றந்தை யூர்''                (திணை.நூற்.139)**

என அமைகிறது. ஊர்தற்கியலாத சிறுதேரினை உடையோனாகிய என் மகனின் தகப்பனது மருத நிலத்து ஊரானது மருத மரங்களும், காஞ்சி மரங்களும் பொருந்தி உயர்ந்து விளங்குவதால் உண்டாகும் நிழலில் காளைகளுடன் உழைப்பவர்களாகிய உழவர்களின் ஒலியும், நாரை, வாத்து போன்ற பறவைகள் ஒலியும் கேட்கும் படியான மருத நிலத்தை உடைய தலைவன் என சிறப்பிக்கப்படுகிறது.

சங்க மருதத்திணைப் பாடலில் தலைவன் பரத்தமை மேற்கொண்ட நூல் ஏற்பட்ட ஊடலும், அதனை பொறுத்துக் கொண்டு ஆற்றியிருத்தலும் சுட்டப்படுகிறது. சங்கம் மருவிய கால அகப்பாடல்களில் ஊடல் தீர்ந்து புணர்ந்து மகிழ்ந்த தலைவி அப்புணர்ச்சிக்கு காரணமான மகனையும், கணவனையும் புகழ்வதாக இப்பாடல் அமைகிறது. சங்கம், சங்கம் மருவிய கால அகப்பாடல்கள் இரண்டிலுமே உரிப்பொருள் பயன்பாட்டில் கருப்பொருள் முதன்மை இடம் பெறுகிறது. சங்க மருதத்திணைப் பாடல் தலைவி தலைவன் மேல் கொண்ட ஊடலோடு நிற்க, சங்கம் மருவிய காலத்து தலைவி, அவ்வூடல் நீங்கப் பெற்று அன்புமிகுதியால் தலைவனை ஏற்று மகிழ்ந்திருக்கும் நிலையைக் காணமுடிகின்றது. சங்க மருதத்திணைப் பாடல் பெரும்பான்மையானவை பரத்தமையால் ஏற்படும் ஊடலும், சிறுபான்மையாக புதல்வனை வாயிலாகப் பெற்று நீங்கப் பெறுதலும் உண்டு.

சங்கம் மருவிய கால மருதத்திணைப் பாடல்களில் தலைவி புதல்வனைப் பெற்ற பிறகு தலைவன் பரத்தையை நாடிச் சென்று திரும்புதலும், அன்பு மிகுதியால் அவ்வூடல் நீங்கப் பெற்று மகிழ்ந்து இல்லறம் நடத்துதலும் இடம் பெற்றுள்ளன. மருதத்திணைப் பாடலின் உரிப்பொருள் ஊடலாக இருந்தாலும், அவ்வூடல் அன்பாக பரிணமிக்கும்

அடுத்த மாற்றத்தினை நோக்கி சங்கம் மருவிய கால அகப்பாடல்கள் உள்ளதை அறிய முடிகின்றது.

**நெய்தல்திணைப் பாடலும் உரிப்பொருளும்**

தலைவனை நினைத்து தனிமையில் வருந்தும் தலைவியின் இரங்குதலை உரிப்பொருளாகக் கொண்டது நெய்தல் திணைப் பாடலாகும்.

**"அம்ம வாழி தோழி நன்று**
**மெய்யா மையினேதில பற்றி**
**யன்பிலன் மனற் பெரிதே**
**மென்புலக் கொண்கள் வாரா தோனே"** **(ஐங்.119)**

எனும் இப்பாடலடிகள் மென்மை உடைய நெய்தல் நிலத் தலைவன், நம்முடைய நிலையை உணராமையினாலே, பிற நெறிகளை மேற்கொண்டு வரைதல் எண்ணம் இல்லாதவன் ஆயினான். எனவே தலைவன் உறுதியான அன்பும், மொழியும் இல்லாதவன் ஆயினான் என உணர்த்துகின்றன. இவ்வுரிப் பொருள் சங்கம் மருவிய கால நெய்தல் திணைப் பாடலில்,

**"மணிநிற நெய்த லிருங்கழிச் சேர்ப்ப**
**னுணிநல முண்டகன்றா னென்றுகொ லெம்போற்**
**றிணிமண கலக்கர்மே லோதம் பெயரத்**
**துணிமுந்நீர் துஞ்சா தது"** **(ஐந்.எழு.58)**

என அமைகிறது. தலைமகனை இரவுக்குறிக்கண் சார்ந்து திரும்பி வந்து உறக்கங் கொள்ளாத எம்மைப் போல கடலும், உறங்காமை மேற்கொண்டது. நீலமணி போன்ற நிறத்தையுடைய நெய்தற் பூக்கள் மலர்ந்த பெரிய உப்பங்கழியையுடைய கடற்கரைத்தலைவன், தனது அழகிய நலமாகிய இன்பத்தை மேற்கொண்டு நீங்கிவிட்டான் எனத் தலைவியின் இரங்கல் உரிப்பொருள் பயின்று வந்துள்ளன.

சங்கம், சங்கம் மருவிய கால நெய்தல் திணை அகப்பாடல்கள் இரண்டுமே இரங்கல் உரிப்பொருளை மிகுதிப்படுத்துவதாக அமைந்துள்ளன. இத்திணைக்குரிய முதற்பொருள் இரண்டிலுமே பயின்று வந்துள்ளது.

## பாலைத்திணைப் பாடலும் உரிப்பொருளும்

பாலைத்திணைப் பாடல்கள் பிரிதல் உரிப்பொருளை அடிப்படையாகக் கொண்டு அமையப்பெற்றுள்ளன. சான்றாக

**"உள்ளுதற் கினிய மன்ற செல்வர்**
**யானை பிணித்த பொன்புனை கயிற்றி**
**னொள்ளெரி மேய்ந்த சுரத்திடை**
**உள்ளம் வாங்கத் தந்தநின் குணனே"** **(ஐங்.356)**

எனும் பாடலைக் குறிப்பிடலாம். ஒள்ளிய காட்டுத்தீயாற் சுட்டழிக்கப்பட்ட வெம்மை மிக்க பாலைப் பரப்பினிடையே தலைவன் வரும் பொழுது, செல்வமிக்கவர் தங்கள் யானைகளைக் கட்டி வைத்த பொன்னிறத்தாலே அழகு செய்யப்பட்ட அழகிய கயிறுகளைப் போன்ற, என் நெஞ்சத்தை நின்பாற் கவர்ந்துகொள்ள தலைவி தலைவனுக்கு தந்த பெண்மை நலன்கள் நினைத்தற்கே இன்பத்தை தரவல்லதாக அமைந்துள்ளன என அப்பாடல் அமைகிறது. இப்பாடலில் சங்கம் மருவிய கால பாலைத்திணைப் பாடலின் உரிப்பொருள்.

**"கதிர்சுடக் கண்ணுடைந்து முத்த சொரியும்**
**வெதிர் பிணங்குஞ் சோலை வியன்கானஞ் செல்வார்க்**
**கெதிர்வன போலிலவே உயல்வளையோ கொன்னே**
**யுதிர்வன போல வுள"** **(திணை.ஐம்.18)**

எனும் பாடல் வழி, வெயில் மிகுந்து அடித்தலால், கணுக்கள் உடைந்து முத்துக்களை கொட்டுகின்ற மூங்கிற் புதற்கள் கலந்து காணும்படியான சோலைகளையுடைய பெரிய காட்டுவழியே செல்ல விரும்பிய காதலர்

உடன்படுவன போல இல்லாமல் கைகளில் உள்ள வளையல்கள் கழன்று வீழ்ந்தன என அமைகிறது.

சங்கம், சங்கம் மருவிய கால அகப்பாடல்கள் இரண்டிலுமே பாலை நில உரிப்பொருளோடு முதற்பொருள் பொருத்தமுறப் புனையப்பட்டுள்ளது. பாலை நிலத்தின் வெப்பம் பிரிதல் உரிப்பொருளை தாண்டிய ஒருவித இரங்குதல் உணர்வை ஏற்படுத்துவதாக அமைந்துள்ளன. சங்க பாலைத்திணைப் பாடலில் பாலை நில வெப்பத்தில் தலைவியின் குணநலன்களை நினைத்தலே குளிர்ச்சியை ஏற்படுத்துவதாகவும், சங்கம் மருவிய காலத்தில் தலைவன் பிரிவிற்கு உடன்படாத தலைவியின் வளையல்கள் எதிர்ப்பது போன்று கழன்று வீழ்ந்தன என்பதாகவும் இவ்விரண்டு பாடல்களிலும் பாலைத்திணை உரிப்பொருள் உயிர்ப்புடன் இயங்க வைக்கின்றன.

## தொகுப்புரை

- சங்க இலக்கியத்தில் குறிஞ்சி நிலத்தில் மலை சார்ந்த பகுதியும், அருவி, சுனை, அருவிநீர் விழும் ஓசை, மலை யானைக்கு ஒப்புமைப்படுத்தல், முகில் தவழும் மலை என பலகோணங்களில் புலவர்களின் மனம் கவர்ந்த இடமாக குறிஞ்சி நிலம் பல்வேறு வர்ணனைகளில் நுட்பமாக காட்சிப்படுத்தப்பட்டுள்ளன. சங்கம் மருவிய காலத்தில் மலை, அருவி, சுனை இம்மூன்று மட்டுமே இடம் பெற்றுள்ளது. குறிஞ்சி நிலம் வர்ணிக்கக்கூடிய பெரும்பான்மையான பாடல்களில் தலைவன் விளக்கப்படுகின்றான்.

- சங்கம், சங்கம் மருவிய கால அகப்பாடல்கள் இரண்டிலுமே முல்லை நிலம் பற்றி குறிப்பு மிகக்குறைவே. நிலம் சொல்லப்பட்டாலும் பொழுதின் வழியாகவே சொல்லப்பட்டுள்ளது. சங்க இலக்கியத்தில் நேரடியாக நிலத்திற்கு உரிய சொல் பயின்று வந்துள்ளமை குறைவே சங்கம் மருவிய காலத்தில் காடு, புறவு, கானம் போன்ற சொற்கள் முல்லை நிலத்தை உணர்த்துகின்றன.

- சங்க இலக்கிய மருதத்திணைப் பாடல்களில் வயல்சார்ந்த பகுதியும் எருமை பற்றிய குறிப்பும் இடம் பெறும் போது தலைவனின் பரத்தமை செயல் குறிப்பாக கண்டிக்கப்படுகிறது. சங்கம் மருவிய காலத்தில் வயல்சார்ந்த பகுதியும் தாமரை மலர்ந்துள்ள நீர்நிலைகளும் பற்றிய குறிப்பே அதிகம். மேலும், தலைவனின் பரத்தமை செயல் வெளிப்படையாகவே கடிந்துரைக்கப்படுகிறது.

- சங்க இலக்கியத்தில் நெய்தல் திணையில் கடல் சார்ந்த நிலப்பகுதி, கடற்கரை உயிரினம், கடல் அலையால் ஏற்படும் நுரை இவற்றின் தனித்துவம் ஆகியன இடம் பெற்றுள்ளன.

சங்கம் மருவிய காலத்தில் இவை குறைவே. நெய்தல் திணை மேலோட்டமாகவே வர்ணிக்கப்பட்டுள்ளது.

- ❖ சங்கம், சங்கம் மருவிய கால அகப்பாடல்கள் இரண்டிலுமே பாலை நிலத்தின் தன்மை, வெப்பம், அ.்.றிணை உயிர்களின் துன்பம் ஆகியன ஒத்த தன்மை உடையனவாக உள்ளன.

- ❖ சங்கம், சங்கம் மருவிய கால முல்லைத் திணைப்பாடல்கள் பெரும்பொழுதே பெரும்பான்மையாக இடம் பெற்றுள்ளது. சிறுபொழுது குறிப்பாகவும், கருப்பொருளின் வழியாகவும் குறிப்பிடப்பட்டுள்ளது.

- ❖ சங்க அகப்பாடலில் குறிஞ்சித்திணைக்குரிய நிலம் சொல்லப்பட்ட அளவிற்கு சங்கம் மருவிய கால இலக்கியத்தில் இடம்பெறவில்லை. குறிஞ்சி நிலத்திற்கு உரிய பெரும்பொழுது எங்கும் இடம்பெறவில்லை. சிறுபொழுதான யாமம் மட்டுமே சில இடங்களில் பயின்று வந்துள்ளது.

- ❖ சங்கம், சங்கம் மருவிய கால பாலைத்திணைப் பாடல்களில் பெரும்பொழுதான வேனிற்காலம் அதிகமாகவும், சிறுபொழுதான நண்பகல் அரிதாகவே காணப்படுகின்றன. சங்கம் மருவிய காலத்தில் சில பாடல்களில் பொழுது கருப்பொருளின் வழியே குறிப்பிடப்படுகின்றன.

- ❖ கடலை யானைப்படையோடு படிமப்படுத்தும் காட்சிச் சிறப்பு சங்கம் மருவிய கால அகப்பாடலுக்கு உரிய தனிச்சிறப்பாகும்.

- குறிஞ்சித் திணையில் யானை, புலி, பெற்றம், குரங்கு, மான் ஆகியவை சங்கம், சங்கம் மருவிய அகப்பாடல்கள் இரண்டிலும் இடம் பெற்றுள்ளன. ஆளி, கரடி, குதிரை, சிங்கம், நரி, போன்றவை சங்க காலத்தில் மட்டுமே சுட்டப்பட்டுள்ளது. ஆடு சங்கம் மருவிய காலத்தில் குறிஞ்சித்திணையில் வந்துள்ளது. சங்க காலத்தில் குறிஞ்சித் திணையில் சுட்டப்படவில்லை.

- முல்லைத் திணையில் சங்க அகப் பாடல்களில் ஆடு, செம்மறியாட்டின் பெயரான துரு, புருவை போன்றவை இடம் பெற்றுள்ளன. சங்கம் மருவிய கால அகப்பாடலில் குரங்கு, பெற்றம், யானை போன்றவை இடம்பெற்றுள்ளன. இவை சங்க கால முல்லைத்திணை பாடலில் காணப்படவில்லை. மான், குதிரை, நரி, பன்றி போன்றவை இருகாலக் கட்டங்களிலும் இடம் பெற்றுள்ளன. பூனை, முயல் சங்க காலத்தில் மட்டும் இடம் பெற்றுள்ளது.

- மருதத்திணையில் பெற்றம் இரு காலக் கட்டங்களில் இடம் பெற்றுள்ளது. சங்க காலத்தில் பெற்றம் பெயரான பகடு இடம்பெற்றுள்ளது. சங்கம் மருவிய காலத்தில் எருது, கன்று, எருமை போன்றவை இடம்பெற்றுள்ளன. சங்க காலத்தில் நீர்நாய், பூனையின் பெயரான வெருகு, மான் போன்றவை இடம் பெற்றுள்ளன.

- நெய்தல் திணையில் குதிரை இரு காலக் கட்டங்களிலும் இடம் பெற்றுள்ளது. கழுதை (அத்திரி), நாய் (ஞமிலி), பெற்றம் (பகடு) போன்றவை சங்க காலத்தில் மட்டும் இடம் பெற்றுள்ளன.

- பாலைத் திணையில் நாய், யானை, பெற்றம், புலி, மான், எண்கு, வெருகு போன்றவை இருகாலக் கட்டங்களிலும் இடம் பெற்றுள்ளன. ஆடு, ஆளி, கழுதை, குதிரை, குரங்கு (முசு) நரி,

பன்றி போன்றவை சங்க காலத்தில் மட்டும் இடம் பெற்றுள்ளன. சங்கம் மருவிய காலத்தில் இடம் பெறவில்லை.

- குறிஞ்சித் திணையில் உள்ள கிளி, மயில் இரு காலக் கட்டங்களிலும் இடம் பெற்றுள்ளன. அசுணம், அன்றில், அன்னம், கானாங் கோழி (வாரணம், பூழ்), குருகு, குருவி (குரீஇ), கொக்கு, கோட்டான் (கூகை), பருந்து, புறாவின் பெயரான புறவு, மீன்கொத்திப் பெயரான சிரல் போன்றவை சங்க காலத்தில் மட்டும் இடம் பெற்றுள்ளது.

- முல்லைத் திணையில் கோழி, குயில், மயில், மீன்கொத்தி போன்றவை இருகாலக் கட்டங்களிலும் இடம் பெற்றுள்ளன. சங்க காலத்தில் அன்னம், காக்கை, கானங்கோழி, கிளி, குருவி பருந்து, புறா போன்றவை சுட்டப்பட்டுள்ளது. அன்றில் சங்கம் மருவிய காலத்தில் சுட்டப்பட்டுள்ளது.

- மருதத் திணையில் கொக்கு, குருகு, அன்னம், கோழி போன்றவை இரு காலக்கட்டங்களிலும் இடம் பெற்றுள்ளன. குருவி, கோட்டான், நாரை, பருந்து, மயில் போன்றவை சங்க காலத்தில் இடம் பெற்றுள்ளது. தாரா என்ற பறவை சங்கம் மருவிய காலத்தில் மட்டுமே இடம் பெற்றுள்ளது.

- நெய்தல் திணையில் அன்றில், குருகு, கொக்கு, நாரை, பருந்து போன்றவை இருகாலக் கட்டங்களிலும் இடம் பெற்றுள்ளன. அன்னம், காக்கை, கூகை, வாவல் போன்றவை சங்க காலத்தில் சுட்டப்பட்டுள்ளது. குயில், மயில் போன்றவை சங்கம் மருவிய காலத்தில் சுட்டப்பட்டுள்ளது.

- பாலைத் திணையில் குயில், புறவு, பருந்து, கிளி கழுகு, கவுதாரி போன்றவை இருகாலக்கட்டங்களிலும் இடம் பெற்றுள்ளன.

அன்றில், அன்னம், காக்கை, கானங்கோழி, குருவி (குரீஇ), கோட்டான் (குடிஞை), மயில், மீன்கொத்தி போன்றவை சங்க காலத்தில் இடம் பெற்றுள்ளது. ஆந்தை சங்கம் மருவிய காலத்தில் இடம் பெற்றுள்ளது.

❖ சங்க காலத்தை ஒப்பிடும் போது சங்கம் மருவிய காலத்தில் மரங்கள் அதிகமாக காணப்படவில்லை. சங்கம் மருவிய காலத்தில் குறிஞ்சித் திணையில் காந்தள் மலர் மட்டுமே சுட்டப்பட்டுள்ளது. சங்க அக இலக்கியத்தில் எருக்கு, கரும்பு, காந்தள், கோரை, சேம்பு, கூதாளம், நாணல், பருத்தி போன்றவை சுட்டப்பட்டுள்ளது. சங்க அக இலக்கிய முல்லைத் திணையில் அறுகு, களவு, கள்ளி, காந்தள், செங்காந்தளின் பெயரான கோடல், தோன்றி ஆகியவையும் முல்லை, வெட்சி போன்றவையும் இடம் பெற்றுள்ளன. சங்கம் மருவிய கால அக இலக்கியத்தில் காயா, காந்தள், குருக்கத்தி, குருகு மட்டுமே இடம் பெற்றுள்ளது.

❖ சங்க அக இலக்கியத்தில் மருதத் திணையில் அலரி, கரும்பு, கோரை பற்றிய பெயரான பைஞ்சாய், செங்காந்தள், நெருஞ்சி, முள்ளி போன்றவை உள்ளன. சங்கம் மருவிய கால அக இலக்கியத்தில் முளரி, கரும்பு இடம் பெற்றுள்ளன.

❖ சங்க இலக்கியத்தில் நெய்தல் திணையில் எருக்கு இடம் பெற்றுள்ளது. சங்கம் மருவிய காலத்தில் நெய்தல் திணையில் செடிகள் பற்றிய குறிப்புகள் ஏதும் இடம் பெறவில்லை.

❖ சங்க இலக்கிய பாலைத்திணையில் அறுகு, எருக்கு, கரும்பு, கள்ளி, காந்தள், செங்காந்தள், கூதாளம் ஆகியவை இடம் பெற்றுள்ளன. சங்கம் மருவிய காலத்தில் கள்ளி, மரல், காந்தள் ஆகியவை இடம்பெற்றுள்ளது.

❖ சங்கம், சங்கம் மருவிய கால அகப்பாடல்களில் குறிஞ்சித் திணையில் அவரை, குளவி, மிளகு போன்றவை இடம் பெற்றுள்ளன. முல்லைத் திணையில் மீா, முல்லை போன்றவையும் மருதத் திணையில் அல்லி, ஆம்பல், தாமரை போன்றவை இரு காலக்கட்டங்களிலும் இடம் பெற்றுள்ளன. சங்க காலத்தில் மருதத்திணையில் நெய்தல், பகன்றை, பசலையின் பெயரான வயலை, பாகல், வள்ளை போன்றவை இடம் பெற்றுள்ளன.

❖ சங்கம், சங்கம் மருவிய கால அகப்பாடல்களில் ஐந்திணைகளிலும் பாம்பு சுட்டப்பட்டுள்ளது. குறிஞ்சித் திணையில் அணில், ஆமை, பல்லி போன்றவை சங்க கால அகப்பாடல்களில் சுட்டப்பட்டுள்ளது. முல்லை நிலத்திற்கு உரிய தேரை இருகாலக் கட்டங்களிலும் சுட்டப்பட்டுள்ளது. எறும்பின் வகையான முயிறு, உடும்பு, தவளை, முதலை (கராம்) போன்றவை சங்க காலத்தில் சுட்டப்பட்டுள்ளது. சங்க இலக்கியத்தில் மருதத்திணையில் எலி, ஆமை, முதலை போன்றவை சுட்டப்பட்டுள்ளது. தவளை சங்கம் மருவிய கால இலக்கியத்தில் சுட்டப்பட்டுள்ளது. சங்க இலக்கியத்தில் ஆமையும், சங்கம் மருவிய காலத்தில் பல்லியும் சுட்டப்பட்டுள்ளது. பாலைத் திணையில் அணில், பல்லி போன்றவை இரு காலக் கட்டங்களிலும் சுட்டப்பட்டுள்ளன. ஆமை, ஏறும்பு, ஓணான் (ஓதி), தேரை, வெள்ளெலி போன்றவை சங்க காலத்தில் சுட்டப்பட்டுள்ளது.

❖ சங்க அக இலக்கியத்தில் குறிஞ்சி, முல்லை, மருதம், நெய்தல் திணைகளில் மீனும், மீனின் வகைகளும் இடம் பெற்றுள்ளன. பாலை நிலத்தில் இருவேறு காலக் கட்டங்களிலும் நீர்வாழ்வன காணப்படவில்லை. சங்கம் சங்கம் மருவிய காலத்தில் மருதத் திணையில் நண்டு சுட்டப்பட்டுள்ளது. நெய்தல்

திணையில் அலவன் இரு வேறு காலக் கட்டங்களிலும் சுட்டப்பட்டுள்ளது.

- ❖ சங்கம் மருவிய காலத்தில் ஐந்து திணைகளிலும் வண்டு சுட்டப்பட்டுள்ளது. சங்க காலத்தில் குறிஞ்சி, முல்லை, பாலைத் திணைகளில் மட்டுமே வண்டு சுட்டப்பட்டுள்ளது. சங்க மருதத் திணையில் மூதாய் சுட்டப்பட்டுள்ளது. குறிஞ்சித் திணையில் ஈயல், மின்மினி போன்றவை சுட்டப்பட்டுள்ளது.
- ❖ சங்கம், சங்கம் மருவிய கால நெய்தல் திணைப் பாடல்களில் அரும்பு, தாமரை, நெய்தல், முண்டகம், பீர்க்கம் பற்றிய பெயரான பீர் போன்றவை இடம் பெற்றுள்ளன. சங்க அகப்பாடல்களில் அவரை, அதிரல், ஆம்பல், பாகல், பிரண்டை, பீர்க்கு, முல்லை (மௌவல்), வயலை, வள்ளி போன்றவை இடம்பெற்றுள்ளன.
- ❖ சங்கம், சங்கம் மருவிய கால அகப்பாடல்களில் கருப்பொருள் பயன்பாட்டினை ஒப்பிட்டு ஆராயும் போது சங்க அகப்பாடல் மிகுந்து இருப்பதை அறியமுடிகின்றது. சங்கம் மருவிய காலத்தில் கருப்பொருள் பயன்பாடு குறைந்தே காணப்படுகிறது. இதற்கு அடிவரையறையே காரணம்.
- ❖ ஒரு பாடலின் அழகினை காலம் கடந்தும் நிலைப்பெறச் செய்வது உரிப்பொருள் ஆகும். அவ்வுரிப்பொருளை உயிர்ப்புடன் விளங்கச் செய்வது கருப்பொருள். சங்கப்பாடலில் உரிப்பொருளுக்கு வலுச்சேர்க்கும் விதமாக முதல், கரு பயன்படுத்தப்பட்டுள்ளது. சங்கம் மருவிய காலத்தில் கருப்பொருள் மட்டுமே புலவர்களால் கையாளப்பட்டுள்ளது.
- ❖ ஒரு குறிப்பிட்ட திணையில் அத்திணைக்குரிய கருப்பொருள் அன்றி பிறநிலக் கருப்பொருளும் பயின்று வந்துள்ளமை

குறிப்பிடத்தக்கதாகும். இது புலவர்களின் பல்திணைச் சார்ந்த அறிவினை புலப்படுத்துகிறது.

- ❖ சங்க இலக்கிய குறிஞ்சித்திணைப் பாடலில் உரிப்பொருளோடு முதற்பொருளும், கருப்பொருளும் பயின்று வந்துள்ளது. சங்கம் மருவிய கால குறிஞ்சித்திணைப் பாடலில் உரிப்பொருளோடு கருப்பொருள் மட்டுமே பயின்று வந்துள்ளது.

- ❖ சங்கம், சங்கம் மருவிய கால அகப்பாடல்களில் முல்லைத்திணைப் பாடலோடு சிறுபொழுது மட்டும் பயின்று வந்துள்ளது.

- ❖ சங்க மருத்திணைப் பாடலின் உரிப்பொருள் ஊடலோடு நிற்க, சங்கம் மருவிய கால மருதத்திணைப் பாடலில் ஊடல் அன்பாக பரிணமித்து, ஊடல் நீங்கி மகிழ்ந்து இல்லறம் நடத்தும் நிலையை அறிய முடிகின்றது.

- ❖ சங்கம், சங்கம் மருவிய கால அகப்பாடல்களில் இரண்டிலுமே நெய்தல் திணைக்கும், பாலைத் திணைக்கும் உரிய உரிப்பொருளோடு முதற்பொருளும் சிறப்பிக்கப்பட்டுள்ளது.

இயல் – 5

# மதிப்பீட்டு நிலையில் சங்கம், சங்கம் மருவிய கால அகப்பாடல்கள்

‘சங்கம், சங்கம் மருவிய கால அகப்பாடல்கள்’ என்னும் தலைப்பில் அமைந்த இந்த ஆய்வில், 1) திணை, துறை, கூற்று, 2)முதல், கரு, உரி 3) பா 4) சமுதாய நிலை என்ற நான்கு இயல்களும் ஒப்பீட்டு நிலையில் அமைய ஐந்தாவதாக அமையும் இவ்வியல் மேற்சொன்ன இயல்களின் முடிவுகளை மதிப்பீடு செய்வதாக அமைகின்றது.

திணை, துறை, கூற்று அடிப்படையில் சங்கப் பாடல்களும், சங்க மருவிய கால பாடல்களும் ஒப்பீடு செய்யப்பட்ட நிலையில் பின்வரும் தரவுகள் மதிப்பீடு செய்யப்படுகின்றன.

## திணைவைப்பு முறையும், கோட்பாடும்

தொல்காப்பிய திணைவைப்பு முறை சங்க இலக்கியத்தில் பின்பற்றப்படவில்லை, சங்கம் மருவிய கால ஐந்திணை ஐம்பது நூலைத் தவிர பிற அகப்பாடலில் பின்பற்றப்படவில்லை. திணை வைப்பு முறை என்பது தொகையாக்க காலம் சார்ந்ததாகும். சங்கப் பாடல் பாடப்பட்ட காலத்திற்கும், தொகுக்கப்பட்ட காலத்திற்கும் நீண்ட இடைவெளி இருந்திருக்க வேண்டும். எனவே திணை, துறை, கூற்று பகுப்பு என்பது பிற்காலத்தைச் சார்ந்ததேயாகும். எனவேதான், **“இவ்வகப்புறப் பாடல்களுக்கு திணை, கூற்று, துறை பிற்காலத்தே தரப்பட்டிருக்கலாம் என உ.வே.சா அவர்கள் கருதுகின்றார். எனவே பாடல்கள் மட்டுமே சங்ககாலத்திற்கு உரியனவாகக் கொண்டு ஆராய்வது பொருத்தமாகத் தோன்றுகிறது”** என்கிறார் **அ.அ. மணவாளன். (சங்க இலக்கியக் கொள்கைகள், ப.43)**

சங்க அகப்பாடல் காலத்திற்கு பிறகான காலக்கட்டங்களில் திணைக் கோட்பாடு அடிப்படையில் எழுதப்பட்டிருந்தாலும் அவை

தொல்காப்பியத்தை அடியொற்றி இருந்தன எனக் கூற இயலாது. திணை வைப்பு முறை என்பது பாடல் பாடக்கூடிய புலவனின் கருத்தாக்கங்களுக்கும், சிந்தனைக்கும், மனவுணர்களுக்கும் ஏற்ப திணை முதன்மைப்படுகிறது. மேலும் திணை வைப்பு முறை என்பது நிலைத்த தன்மை உடையது அன்று, நெகிழும் தன்மை கொண்டதாகும்.

## ஐங்குறுநூற்றின் மரபு

சங்கம் மருவிய கால அகநூலான ஐந்திணை ஐம்பதில் தொல்காப்பிய திணை வைப்பு முறையான முல்லை, குறிஞ்சி, மருதம், நெய்தல் என்பது அமைந்துள்ளது. மேலும் தொல்காப்பியர் சுட்டாத பாலைத்திணை மருதத்திணைக்கு அடுத்ததாக அமைந்துள்ளது. தவிர ஐந்திணை ஐம்பதின் திணை வைப்பு முறை தொல்காப்பிய திணைக் கோட்பாட்டினை பின்பற்றியுள்ளது. இது பழமையைப் போற்றும் மரபாகவும் தொல்காப்பிய இலக்கண மரபை பின்பற்றி எழுதப்படவேண்டும் என்ற நோக்கமாகவும் இருக்கலாம். ஐங்குறுநூற்றின் ‘இளவேனிற் பத்திற்கு’ இணையாக கார்நாற்பதில் ‘வினைமேற் சென்று திரும்பும் தலைவன் பாகனோடு விரைந்து மீளுதல்’ என்னும் துறை உள்ளது. ‘இளவேனிற் பத்து’ பாலைத்திணையில் இடம் பெற்றிருந்தாலும் முல்லைத்திணை உரிப்பொருள் சார்ந்து உள்ளது. இப்பாடலின் கருத்துக்கள், ‘வினைமேற் சென்று திரும்பும் தலைவன் பாகனோடு விரைந்து மீளுதல்’ என்னும் துறையின் கருத்தினை ஒத்துள்ளது. மேலும் திணைக்கு பத்து பத்தாக பாடல் பாடும் மரபும் இங்கிருந்தே வந்திருக்க வேண்டும்.

## கருப்பொருள் பயன்பாடு

பிரிவிடை ஆற்றாள் எனக் கவன்ற தோழிக்கு கூறல் என்னும் துறைப் பாடல்களில் பிரிந்து சென்ற தலைவன் பாலை நிலத்தில் காணும் அஃறிணை உயிர்களின் அன்பின் வெளிப்பாடு கண்டு விரைவில் வருவான் எனும் கருத்து சங்கம், சங்கம் மருவிய கால அகப்பாடல்கள் என இரண்டிலுமே காணமுடிகிறது. கவிதை என்பது உள்ளதை உள்ளவாறு சொல்வது அன்று உள்ளத்தில் உள்ள உணர்வுகளை கிளர்ந்து எழச் செய்வதாகும். அதுபோல பாடலின் கருப்பொருள்

பயன்பாடு என்பது வெறும் சிற்றுயிர்களின் காதலை சொல்வது மட்டும் அன்று, பிரிந்து செல்லும் தலைவன் உள்ளத்தை செம்மைப்படுத்தி மீண்டு வருதலை அறிவுறுத்துதலும் கருப்பொருள் பயன்பாட்டின் நோக்கமாகும்.

## வாயில் மறுத்தலும், வாயில் நேர்தலும்

தலைவி வாயில்களுக்கு வாயில் மறுத்தல் என்னும் துறையில் அமைந்த பாடல்கள். தலைவன், தலைவியின் மேல் கொண்ட அன்பின் மிகுதியை வெளிப்படுத்துவதாகவும், தலைவியால் தலைவனின் இழிவான பரத்தமை கண்டிக்கப்படுவதாகவும் சங்கம், சங்கம் மருவிய கால அகப்பாடல்கள் அமைந்துள்ளன. களவு வாழ்வில் தலைவன் மனம் ஒன்றி இருந்தான். அவ்வாறு இருந்த தலைவனின் ஒழுக்க குறைபாட்டு செயல்கள் தலைவியாள் ஏற்கமுடிவதில்லை. சங்க அகப்பாடலில் தலைவி புதல்வனைப் பெறுங்காலத்தில் கூட பரத்தமை மேற்கொண்டிருந்ததையும், சங்கம் மருவிய காலத்தில் புதல்வன் பெற்ற காலத்திற்கு பிறகும் கூட, புதல்வன் காண ஆரவாரமிக்க தேரில் தலைவன் பரத்தையை நாடிச் சென்றதாகவும் பாடல்கள் உள்ளன. தலைவனின் இச்செயல் தலைவியின் மனதில் அன்பினை குறைத்து ஊடலைத் தாண்டிய துயர நிலையை ஏற்படுத்துதலால் வாயில்களுக்கு வாயில் மறுக்கிறாள் தலைவி.

தலைவி தோழிக்கு வாயில் நேர்தல் என்னும் துறை வேறுவேறு சூழலில் சங்கம், சங்கம் மருவிய கால அகப்பாடல்களில் இடம்பெற்றுள்ளது. அவற்றிற்கான காரணங்கள் பின்வரும்மாறு தலைவன் புறத்தொழுக்கம் கொண்டாலும் தன்மேல் குறைவற்ற அன்புடையவன் எனத் தலைவி உணர்கிறாள். வாயில் வேண்டி நின்ற தலைவன்பால் தன் நெஞ்சம் நெகிழ்ந்து செல்வதை நீக்க முடியவில்லை. வாயிலாகப் புகும் தலைவனோடு புதல்வன் உடனிருக்கும் சூழலால் தலைவி ஊடல் தணிகிறாள். மேலும், தலைவனின் இச்செயலால் தலைவியின் உள்ளத்தில் வாயில் நேர்தலைத் தோற்றுவிக்கும் களன்களாக அமைகின்றன. தலைவி தன் ஊடல் மனநிலையை வெளியிடுவதற்கு புதல்வனை கருவியாக்கி உரைக்கக் கூடிய இடங்கள் பல உண்டு. புதல்வனை அணைக்கும் பாங்கில் ஊடிய தலைவியைத்

தலைவன் அணைத்து ஊடலைப் போக்க புதல்வன் தலைவனுக்கு கருவியாக அமைதலும் உண்டு. பரத்தையிற் பிரிந்து வரும் தலைவனோடு ஊடும் தலைவி தன் முதுமையை நேரடியாக முன்னிலைப்படுத்தி உரைக்காமல் புதல்வனோடு தொடர்புபடுத்திப் பேசுகிறாள்.

**ஊடலும் புதல்வனும்**

தலைவியின் கூற்றுகளில், இளமை நலம் கொண்டு விளங்கிய களவுக் காலத்தில் தலைவன் கொண்டிருந்த மனஒன்றிப்பு கற்பில் இல்லை என்பதை உணர்த்துகிறது. புதல்வனை நினைவுறுத்தி குடும்பப் பொறுப்பை நினைவூட்டுவது என்னும் உள்நோக்கங்கள் ஒடுங்கி இருத்தலை உணரமுடிகின்றது. இச்செய்தி சங்கம் மருவிய கால அகப்பாடல்களில் சற்று அதிகமாக பிரதிபலிக்கிறது. சங்க அகப்பாடலில் பரத்தமை மேற்கொண்ட தலைவனோடு தலைவி கொள்ளும் ஊடல் மிகுந்து காணப்படுவதைப் போலவே சங்கம் மருவிய காலத்திலும் உள்ளது. இருப்பினும் ஊடலினால் உண்டாகும் கோபம் சற்று அதிகமாக இருப்பதை காண முடிகிறது. மேலும், சந்தனமாக இருந்த தலைவியின் குளிர்ந்த தோள்கள், இப்பொழுது காரம் போல் உள்ளதால் தலைவன் பரத்தையிடம் சென்றான் என்பது தலைவி படும் துன்பத்தின் உச்சத்தை உணர்த்துகிறது.

தலைவனைச் சாட விரும்பும் தலைவிக்குத் தலைவனின் குறைபாடுகளை நேரடியாகச் சாடாது மறைமுகமாகச் சாடுதற்குப் புதல்வன் உடனிருப்பு வாய்ப்பினை அளிக்கிறது. உறவுநிலைகளைக் காட்டி தலைவனைக் கடிந்துரைக்கும் வாய்ப்பினைத் தலைவிக்குப் புதல்வன் படைப்பு உருவாக்குகிறது. தோழியின் படைப்பிற்கு கூட இவ்வாய்ப்பு அமையவில்லை. தலைவனுக்கு வாயில் நேர்தற்குத் தலைவியின் நாணமும் பெண்மையும் தடை எழுப்பும் சூழலில் கூட்டுவிக்கும் வாயிலாகப் புதல்வன் அமைதலைத் தலைவியின் மனம் நாடுவது இயல்பாகிறது. தலைவன், தலைவியை இரந்து வாயில் பெற முடியாத போது, புதல்வனைக் கொண்டு வாயில் பெறுதலை சங்கம், சங்கம் மருவிய கால அகப்பாடல்களில் காணமுடிகின்றது. தலைவியின்

ஊடலை தணிக்கும் புதல்வன் யாரினும் சிறந்த வாயிலாகக் கருதப்படுவதற்கு இவை காரணமாக அமையலாம்.

### வாயில்களின் தனிச்சிறப்பு

பரத்தமை மேற்கொண்ட தலைவன், தலைவியின் ஆற்றாமை அறிந்து ஊடல் தீர்ந்து ஏற்றுக் கொண்டதாக சங்கப்பாடல் சொல்கிறது. ஆனால் சங்கம் மருவிய காலத்தில் தலைவன் பரத்தமைக் காரணமாக ஊடல் கொண்ட தலைவி நேரடியாக தலைவனோடு கூற்று நிகழ்த்தியதாக பாடல்கள் இடம்பெறவில்லை. தலைவனின் பரத்தமை அறிந்த தலைவியின் ஊடல்கள், வாயில்கள் மூலமாக மட்டுமே தணிக்கப்பட்டுள்ளன. சங்க இலக்கியத்தில் இடம்பெறாத வாயில்கள் கூற்று சங்கம் மருவிய காலத்தில் இடம்பெற காரணமாகும். சங்க இலக்கியத்தில் இடம்பெறாத வாயில்கள் கூற்றான விறலிக்கூற்று, அறிவர் கூற்று, வாயில் கூற்று ஆகியன சங்கம் மருவிய காலத்தில் இடம்பெற்றுள்ளன.

அகப்பாடல்களில் படைக்கப்படும் மாந்தர்கள் புலவனின் மனநிலையில் இருந்து பேசக்கூடியவர்கள். சங்க இலக்கியத்தில் பேசப்படாத புதிய மாந்தர்கள் பேசுதல் என்பது புதுமையான ஒன்றாக புலவன் கருதியதால் சங்க இலக்கியத்தில் இடம்பெறாத வாயில்கள் சங்கம் மருவிய காலத்தில் இடம்பெற்றிருக்கலாம். சங்க அகப்பாடல்களில் அதிகமான முக்கியத்துவம் தோழியின் படைப்பிற்கே ஆகும். எனவே வாயில்களின் கடமையையும் தோழி தனதாக்கி கொண்டமையால் கூட சில வாயில் கூற்று சங்கப்பாடலில் அமையப்பெறாமல் போயிருக்கலாம்.

### விளிச்சொல் பயன்பாடு

வினைமுற்றிய தலைவன் தேர்ப்பாகனுக்கு உரைத்தது என்னும் துறையில் தேர்ப்பாகனை அழைக்கும் போது 'நூல்நவின்றபாக' என்னும் விளி சங்க மருவிய காலத்தில் இடம்பெற்றுள்ளது. தேர்ப்பாகனை அழைக்கும் இவ்விளிச்சொல் புதுமையான ஒன்றாக உள்ளது. தோழி அறிவுச்சார்ந்தவளாக அகப்பாடல்களில் படைக்கப்பட்டுள்ளது. தலைவனோடு தேர்ப்பாகனுக்கு இருக்கும் உறவுநிலையும்

முக்கியத்துவம் வாய்ந்தது. எனவே, தோழியைப் போலவே, தேர்ப்பாகனும் கல்வியில் சிறந்தவனாக காட்டுவதற்காக இவ்விளி பயன்படுத்தப்பட்டடிருக்கலாம்.

## குறைநயத்தல்

சங்கம், சங்கம் மருவியகால அகப்பாடல்கள் இரண்டிலும் தலைவனின் குறைநயந்தல் என்னும் துறை புணர்ச்சி விருப்பத்தை கூறுவதாக உள்ளது. தலைவனுடன் இன்புற்ற தலைவி அவனது பிரிவால் வருந்தி நிற்கிறாள் என்பதை உணர்த்த விரும்பி 'நம்' என்னும் தன்மை உளப்பாட்டு பன்மைச் சொல் பயன்படுத்தப்பட்டுள்ளது. தலைவியின் இன்ப, துன்பங்களில் துணை நிற்பவள் தோழி. தலைவி, தலைவனோடு பேசமுடியாத சூழல்களில் எல்லாம் கூற்று நிகழ்த்துபவள் தோழி. தலைவியின் களவு வாழ்வில் தொடங்கி கற்பாக பரிணமித்து, அவளின் இல்லறச் சிறப்பினைக் கண்டு மகிழ்ந்து செவிலிக்கு உரைத்தல் வரையிலும் உடன் வரும் இன்னொரு நிழல் தோழி. தலைவிமேல் கொண்ட அன்பு மிகுதியாலும், உரிமை உடையவள் என்பதாலும் தலைவனைக் குறிப்பிடும் போது 'நம்' தலைவன் என்னும் சொல் பயன்படுத்தப்பட்டுள்ளது. இச்சொல் தலைவியின் வாழ்வின் மேல் கொண்ட நம்பிக்கையை நிலைநிறுத்தும் சொல்லாக அமையப்பெற்றுள்ளது.

சங்க அகப்பாடல்களில் தலைவன் கூற்றுப்பாடல்களில் பெரும்பான்மையான்மை தலைவன் நெஞ்சிற்கு உரைத்தது (104) ஆகும். சங்கம் மருவிய கால தலைவன் கூற்றுப்பாடல்களில் தோழிக்கு உரைத்த (13) பாடல்களே மிகுதி.

## தலைவன், தலைவியின் பிரிவுகள்

தலைவன், தலைவி இடம்பெறும் அகப்பாடல்களில் சேர்ந்திருந்தலைக் காட்டிலும் பிரிந்திருக்கக் கூடிய காலங்களே அதிகம். பிரிவுக்குரிய காரணங்களாக ஓதல், காவல், தூது, துணை, பொருள், பரத்தை என்னும் ஆறுவகைப் பிரிவுகள் சுட்டப்படுகின்றன. இவற்றில் பொருள் வயிற்பிரிவு ஒன்று மட்டுமே களவிற்கு உரியது. மீதம் உள்ள ஐந்தும் கற்பிற்கு உரிய பிரிவுகளாகும். அகமரபில் பிரிந்திருக்கும்

வாய்ப்பு தலைவியைக் காட்டிலும், தலைவனுக்கே அதிகமாகும். தலைவி பிரிந்திருக்கும் நிலையில் ஆறுதலாக தோழியும், குடும்ப உறவுகளும் உடன் இருக்கும் வாய்ப்பினை ஏற்படுத்துகின்றன. தலைவன் தனித்து இருக்கும் நிலையில் துணையாக அமைவது நெஞ்சம் மட்டுமே. சங்கப்பாடலில் தலைவன் நெஞ்சிற்கு உரைக்கும் கூற்று மிகுந்திருத்தலுக்கு இதுவே காரணம்.

சங்கம் மருவிய காலத்தில் ஓதல், காவல், தூது, துணைவயிற்பிரிவு, பொருள், பரத்தை என்னும் ஆறுவகைப் பிரிவில் பரத்தையற்பிரிவும், பொருள்வயிற் பிரிவும் மட்டுமே இடம்பெற்றுள்ளன. பொருள் வயிற் பிரிவும் செலவழுங்கியவையாகவே உள்ளன. எனவே, சங்கம் மருவிய காலத் தலைவன் தனித்து இருக்கும் வாய்ப்பு இன்மையால் நெஞ்சிற்கு உரைத்தல் என்னும் துறைக்கான சூழல் உருவாக்கப்படவில்லை. சங்க கால தலைவன் கூற்றுப்பாடல் அதிகமாக பாலைத் திணையிலும், சங்கம் மருவிய கால அகப்பாடல் அதிகமாக குறிஞ்சித் திணையிலும் அமைந்துள்ளன. ஐந்திணை எழுபது, கைந்நிலை ஆகிய நூல்களில் தலைவன் கூற்றுப்பாடல்கள் இடம்பெறவில்லை. பாடலை படைக்கக்கூடிய புலவன் தான் நினைத்த அத்தனை உணர்வுகளையும் காட்சிப்படுத்துவதில்லை. பாடலின் தேவைக்கு ஏற்ப அகமாந்தர்கள் படைக்கப்படுகின்றனர். ஐந்திணை எழுபது, கைந்நிலை நூலாசிரியர்களுக்கு தலைவன் கூற்று படைக்க வேண்டிய தேவை இல்லாமல் போயிருக்கலாம்.

### சங்கம், சங்கம் மருவிய கால அகப்பாடல்களின் துறை மாற்றத்திற்கான காரணம்

அகப்பாடல்களின் துறை மாற்றத்திற்கான காரணம் பாடல் பாடப்பட்ட காலச் சூழலுக்கும், தொகையாக்கச் சூழலுக்கும் உள்ள நீண்ட இடைவெளியே ஆகும். இவ்விடைவெளிகள் தொகுத்தோரின் காலத்திற்கு ஏற்ப பாடலின் துறை அமைவு பெற்றிருக்கும். அவற்றில் இலக்கண விதிகளுக்கு பொருந்தும்படியாக துறைகள் இலக்கியப் படுத்தப்பட்டிருக்க வேண்டும். சங்க அகப்பாடல்கள் அனைத்துமே ஓரளவிற்கு ஒவ்வொரு துறையில் கீழாக கொண்டுவரப்பட்டுள்ளது. சங்கம் மருவிய காலத்தில் உள்ள துறைகளை ஒன்றின் கீழாக

வரையறைப் படுத்தமுடியவில்லை. அவை சொல்லப்படும் விதங்களிலும், சூழலமைவும் வேறுபட்டு நிற்பதினால் புதிய துறைச் சார்ந்த சிந்தனைக்கு வழிகோலுவதாக உள்ளது.

## காலந்தோறும் பாவகை

சங்க அகப்பாடல்கள் ஆசிரியப்பாவிலும், சங்கம் மருவிய கால அகப்பாடல் வெண்பாவிலும் பாடப்பட்டுள்ளது. சங்கம், சங்கம் மருவிய கால அகப்பாடல்களில் காலத்திற்கேற்ப பாவடிவம் மாற்றம் அடைந்துள்ளன. அம்மாற்றத்திற்கான பின்புலங்களை ஆராய்ந்து சில தரவுகளை வெளிக்கொணர்வதாக அமைகிறது. சங்க அகப்பாடல்கள் போற்றப்பட்டது போல, சங்கம் மருவிய கால அகப்பாடல்கள் போற்றப்படவில்லை. ஆசிரியப்பாவில் உணரப்பட்ட சங்கப் பாடல்களின் அக உணர்வு வெண்பாவில் உணரமுடிவதில்லை. அகம் பாடுவதற்கு உரிய பாவாக தொல்காப்பியர் கலிப்பாவையும், பரிபாடலையும் கூறியிருந்தாலும் பெரும்பான்மையான பாடல்கள் ஆசிரியப்பாவிலே அமைந்துள்ளன. சங்க இலக்கிய அகப்பாடல்கள் காலம் கடந்த நிலைப்பேற்றினை உடையதற்கு பாவடிவமும் முக்கியமானதொன்றாகும்.

சங்க அகப்பாடல்களில் ஆசிரியப்பாவின் உச்சத்தினை புலவர்கள் தொட்ட சூழலில், அதற்கு அடுத்த காலக் கட்டத்து புலவர்கள் அகம் பாட ஆசிரியப்பாவை பயன்படுத்தி இருந்தால் அவ்விலக்கியங்கள் சங்கப்பாடல்களையே நினைவுப்படுத்துவதாகவும், அவற்றை பிரதிபலிப்பதாகவும் இருக்கும் என்று எண்ணியே வெண்பா கையாளப்பட்டிருக்கலாம்.

வெண்பாவிற்கு உரிய ஒசை செப்பலோசை ஆகும். செப்பலோசை என்பது அறிவுரைக்கூறவும், அறவுரைக்கூறவும் ஏற்றப் பாவாக புலவர்களால் சுட்டப்படுகிறது. அறம் கூறும் பாடல்கள் படர்க்கைக் கூற்றில் அமையப் பெறுவதாகும். எனவே, தான் சங்கம் மருவிய காலத்தில் அறநூல் கருத்துக்கள் மக்களை சென்றடைந்த அளவிற்கு அகநூல்கள் சென்றடையவில்லை. சங்கம் மருவிய கால அகப்பாடல்கள் அதிகம் பேசப்படாமைக்கு வெண்பா வடிவமும் ஒரு காரணமாகும். இருப்பினும் வெண்பாவிலும் அகம்பாட முடியும் என்ற புதிய சிந்தனை மலர்ந்த காலமாக சங்கம் மருவிய காலத்தை பார்க்க

முடியும். பிற்கால இலக்கியங்கள் வெண்பாவில் அமையப்பெறுவதற்கு இப்பாடல்கள் தோற்றுவாயாக இருந்தமையை மறுத்தற்கில்லை.

**நம்பிக்கைகள்**

சங்கம், சங்கம் மருவிய கால அகப்பாடல்களில் சமுதாய நிலையில் ஏற்பட்டுள்ள மாற்றங்களை ஆராய்ந்து சில மதிப்பீடுகளைத் தருவதாக அமைகிறது.

சங்கம், சங்கம் மருவிய காலத்தில் இலக்கியத்தில் இடக்கண் துடித்தல், பல்லி ஒலியெழுப்புதல் நல்ல நிமித்தமாக கருதினர். சங்கம் மருவிய காலத்தில் ஆந்தை அலறுதல் நல்ல நிமித்தமாக கூறப்பட்டுள்ளது. இவை கால மாற்றத்தினால் ஏற்பட்ட நம்பிக்கையாக இருக்கக் கூடும்.

**திருமணமுறை**

சங்க அகப்பாடலைக் காட்டிலும் சங்கம் மருவிய காலத்தில் திருமணம் பற்றிய குறிப்புகள் சற்று கூடுதலாக இடம் பெற்றுள்ளன. சங்கம் மருவிய காலத்தில் திருமணம் பற்றி கூறும்போது தலைவியின் பெற்றோர், சுற்றத்தார் புடைசூழ மக்கள் அறியும் வண்ணம் தலைவியின் முன் கையைப் பற்றி தலைவனிடம் கொடுத்தல் மரபாக சொல்லப்பட்டுள்ளது. மேலும், தலைவன், தலைவியின் திருமணம் ஊர் அறிய நடைபெறுதலையும், சோதிடனிடம் நல்ல நாள் பார்த்தும், கோள் பார்த்தும் திருமணம் நடைபெற்றதற்கான குறிப்புகளும் உள்ளன. களவில் மட்டுமே சந்தித்து காலம் கடத்தும் தலைவன், தலைவியின் பெற்றோரிடம் முறையாக பெண்கேட்டு திருமணம் செய்துகொள்ளுதல் அறமாக சொல்லப்படுகிறது. மேலும் தலைவன், தலைவி ஒரே குலத்தை சார்ந்தவர்களாக இருந்தால் கோள்களை ஆராயாமல் நல்ல நாளில் திருமணம் செய்யலாம் என்ற புதிய சிந்தனை மலர்ந்த காலமாக இக்காலத்தை கருதலாம்.

சங்க அகப்பாடல் களவையும், உடன் போக்கையும் பெரும்பாலும் பேச, சங்கம் மருவிய காலத்தில் அதற்கு அடுத்த நிலை

பெற்றோரால் நடத்தி வைக்கப்படும் முறையான திருமணம் வலியுறுத்தப்பட்டுள்ளது. இவை இரண்டு காலங்களிலும் எழுந்த சமுதாய மாற்றத்தினை பதிவுசெய்கிறது. இதன் தொடர்ச்சியை சிலப்பதிகார காலத்திலும் காணலாம்.

**விழாக்கள்**

மக்களின் துன்பத்தை மறக்கச் செய்து இன்பத்தை விளைவிக்கக் கூடியது விழாக்களாகும். சங்க அகப்பாடலில் இந்திரவிழா, திருவாதிரை விழா, சிறுசோற்று விழா போன்ற பல சுட்டப்படுகின்றன. சங்கம் மருவிய காலத்தில் கார்த்திகை விழா தவிர்த்த பிற விழாக்கள் நடைபெற்றமைக்கான சான்றுகள் ஏதும் இடம் பெறவில்லை.

கற்பு காலத்தில் பரத்தமை மேற்கொள்ளும் தலைவனை செவ்வணி விடுத்து அழைக்கும் மரபு உள்ளது. இம்மரபு சங்க காலத்தில் இடம்பெறவில்லை. சங்கம் மருவிய காலத்தில் தலைவியின் இல்லறம் சிறக்க புதல்வனைப் பெறும் பொருட்டு செவ்வணி விடும் வழக்கம் இருந்துள்ளது.

**பறை**

சங்க காலத்தில் தினைப்புனம் காக்கவும், விலங்குகளை விரட்டவும், பறவைகளை ஓட்டவும் பயன்படுத்தப்பட்ட பறை, சங்கம் மருவிய காலத்தில் மக்களின் கலையாக மாற்றம் பெறுகின்றது. மருதத்திணை மக்கள் வயலில் வேலை செய்யும் போது களைப்பை போக்குவதற்கு பறை அடித்து ஓசை எழுப்புவதை வழக்கமாக கொண்டிருந்ததை இலக்கியங்கள் சுட்டுகின்றன. விலங்குகளை அச்சுறுத்த பயன்படுத்தப்பட்ட பறை காலமாற்றத்தினால் இசைக் கருவியாக பயன்பட்டுள்ளமை அறியமுடிகின்றது. சங்கம் சங்கம் மருவிய கால அகப்பாடல்கள் ஒப்பிட்டு, மதிப்பீட்டு நிலையில் முடிவுகள் அளிக்கப்பட்டுள்ளன.

# முடிவுரை

'சங்கம், சங்கம் மருவிய கால அகப்பாடல்கள்' எனும் தலைப்பில் அமைந்த இந்த ஆய்வில் இருவேறு கால அகப் பாடல்களும் ஐந்து இயல்களின் அடிப்படையில் ஒப்பீட்டு நிலையிலும் மதிப்பீட்டு நிலையிலும் ஆய்வுக்கு உட்படுத்தப்பட்டன. ஆய்வு முடிவுகள் பின்வருமாறு.

- ❖ தொல்காப்பிய திணை வைப்பு முறை சங்க அகப்பாடல்களில் பின்பற்றப்படவில்லை. சங்கம் மருவிய கால அகநூலான ஐந்திணை ஐம்பதில் மட்டுமே தொல்காப்பிய திணை வைப்பு முறை பின்பற்றப்பட்டுள்ளது.

- ❖ சங்க இலக்கிய ஐங்குநுறூற்றின் பாடல் அமைப்பான திணைக்கு பத்துப் பத்தாக பாடும் சங்க மரபு சங்க மருவிய கால அகநூலான ஐந்திணை ஐம்பதில் இடம்பெற்றுள்ளது.

- ❖ சங்க இலக்கியத்தில் இடம் பெற்ற துறைகள் சங்கம் மருவிய காலத்தில் முழுமையாக இடம் பெறவில்லை. தலைவி தலைவனுக்கு வாயில் நேர்தல், தலைவி தலைவனுக்கு வாயில் மறுத்தல், பிரிவிடைவற்புறுத்தும் பாணர்க்கு கூறல் இவை இடம்பெறவில்லை. (பின்னிணைப்பில் காண்க).

- ❖ சங்க இலக்கியத்தில் குறிப்பிடப்படும் ஆறுவகைப் பிரிவில் சங்கம் மருவிய காலத்தில் பரத்தையர் பிரிவு, பொருள் வலித்த நெஞ்சிற்கு செலவழுங்கியது என்னும் இரண்டு பிரிவுகள் மட்டுமே இடம்பெற்றுள்ளன.

- ❖ சங்கப் பாடல்கள் களவொழுக்கத்தினால் ஏற்படும் உடன் போக்கினை பாராட்ட, சங்கம் மருவிய காலப் பாடல்கள், உடன்போக்கு நிலைமாறி பெற்றோரை முன்னிறுத்தி முறையாக நடைபெறும் திருமணத்தை வலியுறுத்துகிறது.

- ❖ சங்க இலக்கியத்தில் இடம்பெறாத துறைகள் சில சங்கம் மருவிய காலத்தில் இடம் பெற்றுள்ளன. தலைவன்

புறத்தொழுக்கத்தினை, தலைவி தோழிக்கு சொல்லியது, படைத்துமொழிக் கிளவி, புணர்ந்து மகிழ்ந்து பானணிடம் கூறல் போன்றவை இடம்பெறவில்லை (பின்னிணைப்பில் காண்க).

❖ சங்கம் மருவிய கால அகப்பாடல்களில் தலைவியின் ஊடல் வாயில்கள் மூலமாக மட்டுமே தணிக்கப்பட்டுள்ளது.

❖ சங்க பாடலில் இடம்பெறாத விறலிக்கூற்று, வாயில்கூற்று, அறிவர்கூற்று போன்ற புதிய வாயில்களின் கூற்றிற்கு சங்கம் மருவிய காலம் தோற்றுவாயாக உள்ளது.

❖ சங்க அகப்பாடலில் தோழி தலைவனுக்கு உரைக்கும் பாடல்களே மிகுதி. சங்கம் மருவிய காலத்தில் தோழி தலைவிக்கு உரைக்கும் பாடல்களே மிகுதியாகும்.

❖ சங்க மருதத்திணைப் பாடல்கள் அனைத்தும் ஊடலை முன்னிறுத்திப் பாட, சங்கம் மருவிய கால மருதத்திணைப் பாடல்களில் ஊடல் நீங்கி அன்பாக பரிணமித்து தலைவன், தலைவியோடும் புதல்வனோடும் மகிழ்ந்து இல்லறம் நடத்தும் வாழ்வியல் மாற்றத்தினைக் காண முடிகின்றது.

❖ சங்க காலத்தைக் காட்டிலும் சங்கம் மருவிய காலத்தில் பரத்தமை கடிந்துரைக்கப்படுகிறது. நீதி நூல்களிலும் இந்நிலை கண்டிக்கப்படுதல் இங்கு எண்ணத்தக்கது.

❖ சங்க அகப்பாடல்களில் தலைவன் கூற்றுப் பாடல்களில் பெரும்பான்மை தலைவன் நெஞ்சிற்கு கூறியதாகும். சங்கம் மருவிய காலத்தில் தலைவன் தோழிக்கு உரைத்த பாடல்களே மிகுதி.

❖ சங்க அகப்பாடல்கள் ஆசிரியப்பாவிலும், சங்கம் மருவிய கால அகப்பாடல்கள் வெண்பாவிலும் அமையப்பெற்றுள்ளன. அகம் பாடுதற்கான புதிய சிந்தனையின் தோற்றுவாயாக இது அமைகிறது.

- சங்கப்பாடலில் முதற்பொருளான நிலம், பொழுதை வர்ணிக்க புலவர்களால் கையாளப்பட்ட சொல்வளம், குறிப்பு, வர்ணனை, நுட்பம் போன்றவை சங்கம் மருவிய காலத்தில் இடம் பெறவில்லை. இக்காலத்தில் முதற்பொருளான நிலம் மட்டுமே நேரடியாகச் சுட்டப்பட்டுள்ளது. நிலம் பற்றிய வர்ணனையில் தலைவனே விளிக்கப்படுகிறான்.

- சங்க அகப்பாடலில் கருப்பொருள் பயன்படுத்தப்பட்ட அளவிற்கு சங்கம் மருவிய காலத்தில் பயின்று வரவில்லை. அதற்கு பா வகையின் வரையறையே காரணம்.

- சங்கம், சங்கம் மருவிய கால அகப்பாடல்கள் இரண்டிலுமே ஆண் குழந்தைகளுக்கு ஐம்படைத்தாலி அணிவிக்கும் மரபு உள்ளது.

- தலைவன், தலைவிக்கு தழையாடை தருதல் சங்க மரபின் தொடர்ச்சியாக அமைந்துள்ளது.

- சங்க இலக்கியத்தில் விலங்குகளை அச்சுறுத்தப் பயன்படுத்தப்பட்ட பறை, சங்கம் மருவிய காலத்தில் உழைப்பவர்களின் சோர்வை போக்கும் இசைக் கருவியாக மாற்றம் பெற்றுள்ளது.

- சங்க அகப்பாடலில் தலைவியின் மேல் முழுமையான அக்கறை கொண்டவளாக தோழி காட்டப்பட்டுள்ளாள். அறிவர், விறலியர், வாயில்கள் பேசக்கூடிய சூழல்களில் கூட தோழியே பேசுவதாக பாடல்கள் இடம் பெற்றுள்ளன. எனவே, பிற மாந்தர்களின் கூற்றிற்கு சங்கப்பாடலில் வாய்ப்பு குறைந்து போயிற்று.

- சங்கம் மருவிய காலத்தில் தோழி அல்லாத பிறவாயில்களும் தலைவியின் வாழ்வில் அக்கறைக் கொண்டவர்களாக காட்ட பிறர் கூற்றுப் பாடல்கள் மிகுதியாக இடம்பெற்றுள்ளன. இது இந்நூலின் தனித்தன்மையைக் காட்டுகிறது.

- சங்க இலக்கியத்தில், தலைவன் புறத்தொழுக்கத்தினை தோழிக்கு கூறல் என்னும் துறையில் தலைவி பேசியதாகப் பாடல்

இடம்பெறவில்லை. ஆனால், சங்கம் மருவிய காலத்து தலைவி அந்நிலையில் பேசியதாக குறிப்பிடப்பட்டுள்ளது. இது தலைவியின் மாறுபட்ட மனநிலையைக் காட்டுகிறது.

❖ சங்கம், சங்கம் மருவிய கால அகப்பாடல்கள் இரண்டிலுமே தலைவன் பாங்கனுக்கு உரைத்தல் என்னும் துறையில் தலைவன் தலைவியை சந்தித்த இடமும், தலைவியின் உறுப்பு வர்ணனையும் இடம் பெற்றுள்ளன.

❖ சங்கம், சங்கம் மருவிய காலத்தில் முல்லை நில ஆயர்கள் ஆநிரைகளை மேய்த்து வீடு திரும்பும் மாலைப்பொழுதில் குழல் ஊதும் பழக்கத்தினைக் கொண்டுள்ளனர்.

❖ சங்க கால மக்களால் விழாக்களுக்கு கொடுக்கப்பட்ட முக்கியத்துவம், சங்கம் மருவிய காலத்தில் குறைந்து காணப்படுகிறது.

❖ சங்கம் மருவிய காலத்தில் ஆடுகளைக் கவர வரும் நரிகளை விரட்ட ஓலையை அசைத்துக் காட்டினர். அவ்வோலை பிறிஓலை என்று அழைக்கப்பட்டுள்ளது. இச்செய்தி சங்க இலக்கியத்தில் இடம் பெறவில்லை.

❖ சங்கம் மருவிய காலத்தில் தலைவன் குதிரை பூட்டிய தேரில் வந்துள்ளமையை அறிய முடிகிறது. அவ்வாறு வரும் போது குதிரைகளுக்கு தவளையின் ஒசைப் போன்றும், பறவைகளின் ஒசைப்பேன்றும் ஒலிக்கக்கூடிய மணிகள் கட்டப்பட்டிருந்தன. இச்செய்தி சங்கப் பாடலில் இடம்பெறவில்லை.

❖ ஆந்தை அலறுதல் நல்ல நிமித்தமாக சங்கம் மருவிய காலத்தில் கருதப்படுகிறது. இது போன்றதொடு நம்பிக்கை சங்க இலக்கியத்தில் இடம்பெறவில்லை. இது கால மாற்றத்தினால் நிகழக்கூடியதாகும்.

இவ்வாறு சங்க இலக்கியத்தின் பல்வேறு கூறுகள் தொடர்ந்தும், மாறியும் சங்கம் மருவிய கால இலக்கியங்களை வளப்படுத்தியுள்ளன. மேலும், காலத்தின் தேவைக்கேற்ப பல புதிய சிந்தனைகளையும் மாற்றங்களையும் சங்கம் மருவிய கால அக நூல்கள் தமக்கென்று படைத்துக் கொண்டுள்ளன. ஆய்வு முடிவுகளுக்கு உறுதுணையாக அமையக்கூடிய பல்வேறு செய்திகள் அட்டவணைகளாக பின்னிணைப்பில் இடம் பெற்றுள்ளன.

சங்சம், சங்கம் மருவிய கால அகப்பாடல்களை அடிப்படையாகக் கொண்டு மேற்கொண்டு ஆராய்வதற்கான ஆய்வுக்களங்கள் பின்வருமாறு.

சங்கம், சங்கம் மருவிய கால அகப்பாடல்களை வருணனை, உவமை, உள்ளுறை, இறைச்சி போன்ற நிலைகளில் முழுமையாக ஒப்பிட்டு ஆராயலாம். அக மாந்தர்களை முழுமையாக ஒப்பிட்டு ஆராயலாம். சங்க அக இலக்கியக் கொள்கை என்பது காலந்தோறும் எவ்வாறு ஒத்து அல்லது மாறி வந்துள்ளது என்பதை இக்கால இலக்கியம் வரை எல்லையாகக் கொண்டு ஆராயலாம்.

# துணை நூற்பட்டியல்

## முதன்மைச் சான்றாதாரங்கள்


1. **இராசாராம் துரை,** பதினெண்கீழ்க்கணக்கு (தொகுதி-1), முல்லை நிலையம், சென்னை, 2013.

2. **இராசாராம் துரை,** பதினெண்கீழ்க்கணக்கு (தொகுதி-2), முல்லை நிலையம், சென்னை, 2013.

3. **சோமசுந்தரனார் பொ. வே**, ஐங்குறுநூறு, சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகம், சென்னை, 2009.

4. **மேலது,** குறுந்தொகை, சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகம், சென்னை, 2009.

5. **நச்சினார்க்கினியர் உரை,** கலித்தொகை, சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகம், சென்னை, 2007.

6. **பின்னத்தூர் நாராயணசாமி உரை,** நற்றிணை, சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகம், சென்னை, 1952.

7. **வேங்கடசாமி நாட்டார், ந.மு,** பதினெண்கீழ்க்கணக்கு மூலமும் உரையும் (தொகுதி - 1), சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகம், சென்னை, 2007.

8. **மேலது,** பதினெண்கீழ்க்கணக்கு மூலமும் உரையும் (தொகுதி - 11), சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகம், சென்னை, 2007.

9. **வேங்கடாசலம் பிள்ளை நா,** அகநானூறு, களிற்றுயானைநிரை, சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகம், சென்னை, 2009.

10. **மேலது,** அகநானூறு, மணிமிடைப்பவளம், சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகம், சென்னை, 2007.

11. **மேலது,** அகநானூறு, நித்திலக்கோவை, சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகம், சென்னை, 2008.

**துணைமைச் சான்றாதாரங்கள்**


1. **அறவாணன் க.ப,** புதிய பார்வையில் பதினெண்கீழ்க்கணக்கு, தமிழ்க்கோட்டம், சென்னை, 2010.
2. **இளம்பூரணர் (உ.ஆ),** தொல்காப்பிய பொருளதிகாரம், கழக வெளியீடு, சென்னை, ஐந்தாம் பதிப்பு 1974.
3. **இரகுநாதன் சி,** சமுதாய இலக்கியம், ஸ்டார் பிரசுரம், சென்னை, 1972.
4. **இராசரத்தினம் கு,** சங்க இலக்கியத்தில் பொது மக்கள், நாம் தமிழர் பதிப்பகம், சென்னை, 2004.
5. **இராசராம் சு,** சங்க இலக்கிய கருத்தியல் வளம், இராஜா வெளியீடு, திருச்சி, 2012.
6. **கதிர்மகாதேவன்,** ஒப்பிலக்கிய நோக்கில் சங்ககாலம், மதுரை, 2000.
7. **கந்தசாமி சோ.நா,** தமிழ் யாப்பியலின் தோற்றமும் வளர்ச்சியும், தமிழ்ப் பல்கலைக் கழகம், தஞ்சாவூர், 1989.
8. **கார்த்திகேசு சிவத்தம்பி,** தமிழின் கவிதையியல், குமரன் புத்தக இல்லம், சென்னை, 2007.
9. **குளோரியா சுந்தரமதி. இலா,** சங்க இலக்கியத்தில் மருதம், திருவனந்தபுரம், 1973.
10. **மேலது,** திணை துறை வரையறையும் பாடல்களின் அமைப்புத் தளமும், சங்க இலக்கியம், உலகத்தமிழாராய்ச்சி நிறுவனம், சென்னை, 1998.
11. **கோவிந்தன் தா,** சங்க இலக்கிய செய்திக் களஞ்சியம், வேமன் பதிப்பகம், சென்னை, 2007.
12. **சக்திவேல் சு,** நாட்டுப்புற இயல் ஆய்வு, மணிவாசகர் பதிப்பகம், சிதம்பரம், 1983.
13. **சரளா இராசகோபாலன்,** சங்க இலக்கியத்தில் தோழி, ரவி பதிப்பகம், சென்னை, 2009.

14. **சாமி பி.எல்,** சங்க இலக்கியத்தில் செடி, கொடி விளக்கம், சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகம், சென்னை, 1969.

15. **சிதம்பரனார் சாமி,** தமிழர் வாழ்வும் பண்பாடும், சாரதா பதிப்பகம், சென்னை, 2011.

16. **சீனிச்சாமி துரை,** தொல்காப்பியமும் இலக்கியவியலும், நியூசெஞ்சுரி புக்ஹவுஸ், சென்னை, 2013.

17. **சுப்ரமணியன் கா,** சங்க காலச் சமுதாயம், நியூ செஞ்சுரி புக் ஹவுஸ், சென்னை, 1982.

18. **சுப்ரமணியன் ச.வே,** தமிழ் இலக்கண நூல்கள் (மூலம் முழுவதும்) சிதம்பரம், 2007.

19. **சுப்ரமணியன் ந,** சங்க கால வாழ்வியல், சங்கத் தமிழரின் அரசு முறையும் சமூக வாழ்வும், நியூ செஞ்சுரி புக் ஹவுஸ், 1986.

20. **சுப்பு ரெட்டியார் நு,** அகத்திணைக் கொள்கை, பாரி நிலையம், சென்னை, 1963.

21. **செல்வகணபதி சண்முக,** ஒப்பிலக்கிய நோக்கில் தமிழிலக்கியம், சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகம், திருச்சிராப்பள்ளி, 1986.

22. **தமிழண்ணல்** சங்க மரபு, சிந்தாமணிப் பதிப்பகம், மீனாட்சி புத்தக நிலையம், மதுரை, 2009.

23. **மேலது,** தொல்காப்பியம் மூலமும் கருத்துரையும், மீனாட்சி புத்தக நிலையம், மதுரை, 2008.

24. **தேவிரா ,** தமிழ் இலக்கியத் தகவல் களஞ்சியம், சென்னை, 2007.

25. **நச்சினார்க்கினியர் (உ.ஆ),** தொல்காப்பிய பொருளதிகாரம், கழக வெளியீடு, சென்னை, 1950.

26. **நாற்கவிராசநம்பி,** நம்பியகப் பொருள், சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகம், சென்னை, 1970.

27. **பரமசிவானந்தம் அ.மு.,** சமுதாயமும் பண்பாடும், தமிழ்க் கலைப் பதிப்பகம், சென்னை.

28. **பழனிவேலு. கே,** கூற்றுக் கோட்பாடும் தமிழ்க் கவிதையியலும், அகரம், தஞ்சாவூர், 2011.

29. **பாண்டுரங்கன் ஆ,** தொகையியல், தமிழரங்கம், புதுச்சேரி, 2008.

30. **பாலசுப்பிரமணியன்.,** தமிழியலாய்வு, களமும் கருத்தியலும், போதிவனம், சென்னை, 2014.

31. **பேராசிரியர் (உ.ஆ),** தொல்காப்பிய பொருளதிகாரம், கழக வெளியீடு, சென்னை, இரண்டாம் பதிப்பு, 1988.

32. **மணவாளன் அ.அ,** இலக்கிய ஒப்பாய்வு, சங்க இலக்கியம், நியூ செஞ்சுரி புக் ஹவுஸ், சென்னை, 2009.

33. **மணிவேல் மு,** தமிழ் இலக்கிய அகப்பொருள் மரபுகள், செல்லப்பா பதிப்பகம், மதுரை, 2009.

34. **மாணிக்கம் வ.சுப,** தமிழ்க்காதல், சாரதா பதிப்பகம், சென்னை, 2007.

35. **மாதையன் பெ.,** அகத்திணைக் கோட்பாடும், சங்க அகக்கவிதை மரபும், பாவை பப்ளிகேஷன்ஸ், சென்னை, 2009.

36. **மேலது,** சங்க கால இனக்குழு சமுதாயமும் அரசு உருவாக்கமும், பாவை பப்ளிகேஷன்ஸ், சென்னை, 2004.

37. **ராஜன் கா,** தொல்லியல் நோக்கில் சங்க காலம், உலகத் தமிழராய்ச்சி நிறுவனம், சென்னை, 2004.

38. **வரதராசனார் மு,** பழந்தமிழ் இலக்கியத்தில் இயற்கை, பாரி நிலையம், சென்னை, 1964.

39. **வேங்கடசாமி மயிலை சீனி,** சங்க கால தமிழக வரலாற்றில் சில செய்திகள், அண்ணாமலைப் பல்கலைக் கழகம், சிதம்பரம், 1970.

40. **வேலுசாமி ந,** கீழ்க்கணக்கு சொற்பொழிவுகள், பெரியார் மணியம்மை பல்கலைக்கழகம், தஞ்சாவூர், 2009.